# புதுமைப் பொலிவையும் வனப்பையும் உங்களுக்களிப்பது ஹிமாலயா புக்கே




இளமையும் குளுமையும் தரும் இந்த ஸ்நோவைத் தடவிக் கொண்டு, அதன் மணம் கமழும் புதுமை இன்பத்தை அனுபவியுங்கள் !

## ஹிமாலயா புக்கே ஸ்நோ

மிருதுவான இந்த வாசனைப் பவுடரைப் பூசிக் கொண்ட பின், பூர்த்தி பெறும் உங்கள் பொலிவைப் பாருங்கள் !

## ஹிமாலயா புக்கே டால்கம் பவுடர்

HB514-50 TM

# கல்கி

## பொருளடக்கம்


**அரசியல்**

| | | | |
|---|---|---|---|
| ஜெயப்பிரகாஷும் காங்கிரஸும் | (தலையங்கம்) | ... | 3 |
| அவர் சமாதானம்! (கார்ட்டூன்) | விஜி | ... | 4 |
| அமெரிக்காவும் அணுகுண்டும் | ... | ... | 5 |
| வேண்டாம் இந்த மகாநாடு! | ... | ... | 6 |

**கதைகள்**

| | | | |
|---|---|---|---|
| தாகம் தீர்ந்தது | இறைவன் | ... | 20 |
| பாவை விளக்கு | அகிலன் | ... | 27 |
| பொன்னி எங்கே? | பகீரதன் | ... | 41 |
| பொங்கிவரும் பெருநிலவு | வி. ராஜேந்திரன் | ... | 58 |
| காதலில்லாக் கதை! | ருக்மிணி பார்த்தசாரதி | ... | 75 |
| பச்சைக் கொடி | ஸ்ரீமதி டி. எஸ். கோதண்டராமன் | ... | 82 |
| ஜால வித்தை | ஸி. பி. சுப்பிரமணியம் | ... | 93 |

**கட்டுரைகள்**

| | | | |
|---|---|---|---|
| வள்ளுவர் வாசகம் | ராஜாஜி | ... | 10 |
| ஸ்ரீராம நவமிப் பொன்விழா | அநுத்தமா | ... | 17 |
| செல்வமும் சுதந்திரமும் | க. சந்தானம் | ... | 53 |
| தமிழ் கூறும் நல்லுலகம் | ... | ... | 81 |
| நாட்டு வைத்தியம் | ஸ்ரீஹரி | ... | 89 |

**பாலர் மலர்**

| | | | |
|---|---|---|---|
| குமரி முத்து | சேத்தூர் கூத்தன் | ... | 70 |


"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# சந்திரலேகாவைக் காட்டிலும் பெரிதெனப் புகழ்கின்றனர்



அகில இந்திய நடனமணிகள்
**வைஜயந்திமாலா · பத்மினி**
இருவரும் சேர்ந்து நடித்தது...
மற்றும்
ஜெமினி கணேசன் · டி. கே. ஷண்முகம்
கண்ணாம்பா · வீரப்பா
டி. கே. ராமச்சந்திரன்
சுப்பய்யா · சுந்தரிபாய்
தங்கவேலு · முத்துலட்சுமி
மாஸ்டர் முரளி
விஜயகுமாரி

# வஞ்சிக்கோட்டை வாலிபன்

ஜெமினியின் மகத்தான படம்
இப்பொழுது
நாடெங்கும் நடைபெறுகிறது

சென்னையில் வெலிங்டன், பிரபாத், சரஸ்வதி



மலர் 17 இதழ் 39

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

விளம்பி ஞு சித்திரைமீ 14உ

# ஜெயப்பிரகாஷும் காங்கிரஸும்

மனைவியின் மேல் கோபம் கொண்டு எல்லாவற்றையும் துறந்து சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போவதாகக் கோபத்துடன் ஒருவன் வெளியேறினானாம். அப்படி வெளியேறும்போது, "வாசலில் சொம்பு கிடக்கிறது. உள்ளே எடுத்து வை!" என்று மனைவியிடம் சொல்லிக்கொண்டே போனானாம்! முற்றும் துறந்து விட்டவனுக்கு இந்தப் பாசம் ஏன் வேண்டிக் கிடக்கிறதோ என்பது கதையின் ரஸம்.

மேற்கண்ட சந்நியாசியைப் போல், ஜெயப்பிரகாஷ் நாராயண் தாம் அரசியலை விட்டே விலகி விட்டதாகப் பலமுறை சொல்லிவிட்டு அவ்வப்போது அரசியல் யோசனைகளையும் சொல்லி வருகிறார்.

ஜெயப்பிரகாஷ் நாராயண் அரசியல் விவகாரத்தில் தூர இருந்து யோசனை சொல்வதை விட்டு, அரசியலில் இறங்கித் தேசத்துக்கு வழிகாட்டினால் நன்றாக இருக்கும். பாரத மக்கள் அதை உற்சாகமாக வரவேற்பார்கள்.

சமீபத்தில் ஜெயப்பிரகாஷ் நாராயண் காங்கிரஸில் பிரஜா சோஷலிஸ்ட் கட்சி இணைந்துவிட வேண்டும் என்று யோசனை கூறியிருக்கிறார். பி. சோ. காங்கிரஸ் இணைப்பினால் ஆட்சிக்கூட்டத்துக்கு வோட்டு அதிகமாகுமே தவிர வேறு ஒரு பயனும் ஏற்படாது.

பி. சோ. கட்சியில் இருப்பவர்கள் எல்லாம், 'காங்கிரஸின் நிர்வாக இயந்திரம் நன்றாக இல்லை; ஒழுங்காக வேலை செய்யவில்லை' என்று வெளியேறினார்கள். அவர்கள் வெளியேறிய பிறகும் காங்கிரஸ் நிர்வாக இயந்திரம் எவ்விதத்திலும் சீர்ப்பட்டு உயர்ந்து விடவில்லை. பழையபடியேதான் இருக்கிறது. இந்த நிலையில் இவர்கள் காங்கிரஸில் சேருவானேன்?

காங்கிரஸ் நிர்வாக இயந்திரம் எவ்வளவு ஊழல் மலிந்ததாக இருந்தாலும் பொதுமக்களுக்கு மற்றக் கட்சிகள் ஏதும் பிடிக்கவில்லை. பாரத நாட்டுச் சுதந்திரத்துக்காகப் போராடி, சுதந்திரத்தை வாங்கித் தந்த கட்சி காங்கிரஸ் என்றுதான் பொது மக்களுக்கு அதனிடத்தில் அபிமானம். இந்தக் காரணத்தினால்தான் வேறு எந்தக் கட்சியும் பலம் பெறுவதில்லை.

ஜனநாயகமோ இரண்டு கட்சிகளின் போட்டியின்பேரில் இயங்க வேண்டும். சம போட்டிக்கு இடமிராவிடில் ஜனநாயகம் ஒரு கட்சியின் ஏகபோக ஆட்சியாகிவிடுகிறது. ஆகவே, காங்கிரசுக்கு நல்ல எதிர்க்கட்சி தேவை. காங்கிரசுக்கு நல்ல எதிர்க்கட்சி இல்லாததே இந்திய ஜனநாயகத்தின் பலவீனம். பலமான எதிர்க்கட்சி இல்லாததால்தான், பஞ்சாப், ஒரிஸ்ஸா, மைசூர் முதலிய ராஜ்யங்களில் கோஷ்டிப் பூசல்கள் தோன்றியிருக்கின்றன!

ஆகவே, இன்று நாடு இருக்கிற நிலைமையில் காங்கிரசுக்குப் பலத்த எதிர்க் கட்சியை உண்டாக்கித்தர முயல்வதுதான் நாட்டுக்குச் செய்யும் பெரும் சேவையாகும்.

எதிர்க்கட்சி என்று பெயரளவுக்கு இருக்கிற பி. சோ. கட்சியையும் காங்கிரஸில் இணைத்து விட்டால், ஆட்சியைத் தட்டிக் கேட்பதற்கு ஆளே இல்லாமல் போய்விடும்.

காங்கிரஸ் ஆட்சி செய்யும் காரியங்களை விமரிசனம் செய்வதற்கும், நாட்டு நலனில் அக்கறை கொண்டு குற்றம் குறைகளை எடுத்துச் சொல்வதற்கும் பி. சோ. கட்சியின்

# அவர் சமாதானம்!

காங்கிரஸில் அங்கங்கே பிளவுகள் தோன்றியிருந்தாலும், காங்கிரஸ் பலவீனமடைந்து விடவில்லை என்று நேருஜீ கூறுகிறார்.

அங்கத்தினர்களாக மக்கள் சபையில் ஒரு சிலர் இருப்பது ஓரளவு நம்முடைய அதிர்ஷ்டம்.

எதிர்க் கட்சி அங்கத்தினராகக் கிருபளானி அவர்கள் மக்கள் சபையில் அமர்ந்ததினால் தான் அன்று மக்கள் சபையில் ராணுவச் செலவைப் பற்றிப் பேசினார்! ஆடிக்கொரு தரம் அமாவாசைக்கொருதரமாகிலும் இப்படிப் பேசுவதற்கு மக்கள் சபையில் ஓரிருவர் இருக்க வேண்டாமா?

அதனால் ஜெயப்பிரகாஷ் நாராயணனின் யோசனையை நாம் ஒப்புக் கொள்ளவில்லை.

இன்னொரு விஷயம்: ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்கள் பாரதப் பிரதமர் நேருஜீயைத் தமது பிரதம மந்திரி பதவியைவிட்டு விலகியிருக்க வேண்டும் என்று சொல்லுகிறார்.

ஜவாஹர்லால் நேரு பிரதமர் பதவியை விட்டு ஏன் விலக வேண்டுமென்பது நமக்குத் தெரியவில்லை. காங்கிரஸ் ஸ்தாபனம்தான் தூய்மைப்படவேண்டும். காந்திமகான் தமக்கு அரசியல் வாரிசாக நேருஜீயை நியமித்தாலும், காங்கிரஸ் ஸ்தாபனம் சீர்கெட்டுப் போகாமல், வல்லபாய் பட்டேல் சர்வ ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வந்தார். வல்லபாய்பட்டேலின் மறைவுக்குப்பிறகு காங்கிரஸ் ஸ்தாபனமும் நேருஜீயின் காலைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. அவரால் சமாளிக்க முடியவில்லை. நிர்வாகத்தில் ஊழல்கள் மலியத் தொடங்கி விட்டன. காங்கிரஸ் கொள்கையில் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை ஏற்பட்டிருக்கிறது.

காங்கிரஸ் ஸ்தாபனத்தைச் சுத்தப்படுத்தக் கூடிய துணிச்சலான அக்கிராசனர் ஒருவர் தேவை. ஜவாஹர்லால் நேருஜீயுடைய 'தாங்குச் சுவர்' நாடாத அக்கிராசனர் தேவை. தற்போது காங்கிரஸ் அக்கிராசனராக இருக்கும் ஸ்ரீ யு. என். தேபர் காங்கிரஸ் கொள்கைகளில், காந்தீயக் கொள்கைகளில் பூரண நம்பிக்கையுள்ள நல்ல மனிதர். ஆயினும், துணிந்து தீரமாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளும் தன்மை போதாது. எந்த நடவடிக்கையையும் நேருஜீயின் கட்டளையை நாடியே செய்வதாகத் தோன்றுகிறது. ஜெயப்பிரகாஷ் நாராயண் காங்கிரஸ் அக்கிராசன பதவிக்கு ஒரு வேளை வந்தால் நன்றாக இருக்கும். பொருத்தமாகவும் இருக்கும். இதற்கு நமது பிரதமர் நேரு ஒப்புக் கொள்ள வேண்டும். ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்களும் துறவறத்தை விட்டு அரசியல் இல்லறப் பொறுப்பு ஏற்றுக் கொள்ள முன்வர வேண்டும்!

நாட்டுக்கு நிரந்தரமான நல்லது செய்யக் கூடிய எதிர்க்கட்சியாக பி. சோ. கட்சியோ, கம்யூனிஸ்ட் கட்சியோ இருக்க முடியாது

சோஷலிஸத்தைத் ஒட்டுக் கொள்ளாத முற்றும் புதியதோர் கட்சி உருவாக வேண்டும்.

மக்களின் நன்மைக்கு சோஷலிஸம் நன்றே வழியுமல்ல. யாருடைய சொத்தையும் நிலத்தையும் பறிக்காமல் ஏழைகளுக்கு நன்மை செய்யும் வழியை காந்திஜி காட்டியிருக்கிறார். ஜனங்களுடைய மனப்பான்மை மாற வேண்டும். அவ்வளவே. மனப்பான்மை மாறாதிருப்பின் சோஷலிஸமும் உதவாது. திருட்டும், தீர்வாக ஊழலும்தான் பரவும்.

# அமெரிக்காவும் அணுகுண்டும்

ருஷ்யா அணுகுண்டு விஷயத்தில் துணிந்து காந்திய நடவடிக்கை எடுத்துக் கொண்டதிலிருந்து, அமெரிக்கா காந்திய வழியில் ஒரு அடிகூட எடுத்து வைக்காதது மிகவும் பரிதாபம்! அதுமட்டுமல்ல.

ருஷ்யாவின் செய்கையைச் சந்தேகக் கண் கொண்டுதான் அமெரிக்கா பார்த்து வருகிறது. ''பிரசார தந்திரம்'' என்று ருஷ்யாவின் செய்கையைக் கண்டித்து வருகிறது.

அமெரிக்கா சொல்வதுபோல் ருஷ்யாவின் செய்கை வெறும் பிரசார தந்திரமாக இருப்பினும், அதற்கு ஈடு கொடுப்பது அதை அலட்சியப் படுத்துவதல்ல. அதற்குமாறாக ருஷ்யா சென்ற வழியில் இன்னும் சற்று அதிகமாகச் சென்று, 'இப்போது என்ன சொல்கிறாய்?' என்று ருஷ்யாவைக் கேட்பது தான் அறிவுடைமையும் ராஜதந்திரமுமாகும்! சோதனைகளை மட்டும் தான் நிறுத்தி யிருப்பதாக ருஷ்யா உலகத்துக்கு அறிவித்திருக்கிறது. தான் செய்துள்ள அணுகுண்டு ஜலஜ குண்டுகளை அப்படியே வைத்திருக்கிறது. அணுகுண்டு உற்பத்திச் சாலைகளையும் வைத்திருக்கிறது. அதுமட்டுமல்ல. அமெரிக்கா, சோதனைகளை நிறுத்தாமல் நடத்தி வந்தால் 'நாங்களும் மீண்டும் தொடங்கி விடுவோம்' என்றும் சொல்லியிருக்கிறது.

ஆக, அணுகுண்டு ஜலஜகுண்டு பகிஷ்காரம் என்னும் காந்தியப் பாதையில் கொஞ்ச தூரமே ருஷ்யா முன்னேறியிருக்கிறது. ஆயினும் மற்றவர்களை எதிர்பாராமல் ருஷ்யா செய்திருப்பதால் உலக மக்கள் ருஷ்யாவை மனத்துக்குள் வாழ்த்துகின்றனர்.

---

## பயங்கர விளையாட்டு!



தீவிர இனவெறியாளரான தென் ஆப்பிரிக்கப் பிரதம மந்திரி மீண்டும் வெள்ளையர்களால் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அவர் இனத் துவேஷக் கொள்கையைத் தீவிரமாகக் கடைப்பிடிப்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

அதே பாதையில் முன்னேற அமெரிக்காவுக்கு நல்ல வாய்ப்பிருக்கிறது. அந்தப் பாதையில் அமெரிக்கா முன்னேற முடியும்! ஆனால் இன்னும் மனம் வரவில்லை.

''சோதனைகள் மட்டுமல்ல; யுத்தம் மூண்டாலும் அணுகுண்டு ஹைட்ரஜன் குண்டு உபயோகப்படுத்த மாட்டோம்'' என்று சொல்ல வேண்டும். இப்படிச் சொன்னால் உலகில் அமெரிக்காவின் செல்வாக்கு எவ்வளவு உயர்ந்து விடும். உலக நாடுகள் அனைத்தும் அமெரிக்காவின் பின்னால், அதற்குப் பக்கபலமாக அல்லவோ இருக்கும். ருஷ்யாவின் தீரச் செய்கையை, பிரசார தந்திரம் என்றால் அதற்கு ஈடு கொடுக்க அமெரிக்கா மேற்கூறியவாறு செய்வதைத் தவிர சிறந்த ராஜதந்திரம் வேறில்லை.

ஆனால் அமெரிக்கா தான் தீர்மானித்தபடி தனது சோதனைகளை நடத்துவதாகத்தான் இருக்கிறது. இந்த நிலையில் அமெரிக்கா மற்றொரு விஷயத்தையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்!

அமெரிக்கா விடாமல் சோதனை நடத்தினால், தானும் மீண்டும் ஹைட்ரஜன்குண்டு சோதனைகளைத் தொடங்கி விடப் போவதாக ருஷ்யா கூறியிருக்கிறது! ஒருகால், ருஷ்யா கூறினாற் போல், தனது சோதனைகளை மீண்டும் தொடங்காமற் போனால் என்னவாகும் என்பதை அமெரிக்கா நினைத்துப் பார்க்க வேண்டும்!

ருஷ்யாவின் செல்வாக்கு உலகில் இன்னும் அதிகமாக வளர்ந்துவிடும்.

அதே சமயத்தில் அமெரிக்கா உலக மக்களின் மதிப்பிலிருந்து கீழே போய்விடும்!

இதை அமெரிக்கத் தலைவர்கள் தீர ஆலோசிக்க வேண்டும்.

எவ்வாறாயினும் ருஷ்யாவின் ஒருதலை தீர்மானம், உலகம் முற்றும் சோர்ந்து போகக் கூடிய நிலையில் இல்லை என்று ஆறுதல் அளிக்கிறது. இன்றைக் கில்லாவிட்டாலும், சமீபத்தில் ஒருநாள் பொது மக்களின் விருப்பம் நிறைவேற வழியிருக்கிறது என்ற நம்பிக்கையும் உண்டாகிறது.

''பிரிட்டனில் அணு - ஹைட்ரஜன் குண்டுக்கு எதிராகக் கிளர்ச்சி நடந்து வருகிறது. எந்த அரசியல் கட்சியிலும் சேராத பெட்ராண்ட் ரஸ்ஸல் போன்ற பெரியார்கள் பொது மக்களின் ஆதரவைப் பெற்றுத் தொடங்கிய அணுகுண்டு ஹைட்ரஜன் குண்டு பகிஷ்கரிப்பு இயக்கம் நாளுக்கு நாள் பலம் பெற்று வருவதைப் பார்த்து, தொழிற்கட்சித் தலைவர்கள் மீண்டும் தமது கொள்கையை ஓரளவு மாற்றிக் கொண்டு விட்டனர்.

பிரிட்டிஷ் தொழிற்கட்சியின் முக்கிய தலைவரான பெவன், சில ஆண்டுகளுக்கு முன் வரை ஹைட்ரஜன் குண்டு விரோதியாக இருந்து வந்தார். பிரிட்டன் ஹைட்ரஜன் குண்டு உற்பத்தி செய்யக்கூடாது என்று சொல்லி வந்தார். ஆனால் தேர்தல் காலம் நெருங்கி வர வர, பெவன், தமது கொள்கையை மாற்றிக் கொண்டார். ''ஹைட்ரஜன் குண்டு இல்லாமல் எப்படி ஆட்சி நடத்துவது?'' என்று பேச ஆரம்பித்தார். தொழிற்கட்சி ஹைட்ரஜன் குண்டு விஷயத்தில் கொள்கைத் தெளிவில்லாமலிருப்பதைப்பார்த்து, கட்சி பற்றற்ற பெட்ராண்டு ரஸ்ஸல் போன்ற விஞ்ஞானிகளும், அறிவாளிகளும் ஹைட்ரஜன் குண்டுகள் பகிஷ்கரிப்பு இயக்கம் ஆரம்பித்தனர். இந்த இயக்கம் நாளுக்கு நாள் பலம் பெற்று வருவதைப் பார்த்துத் தொழிற்கட்சித் தலைவர்கள் மீண்டும் தங்கள் கொள்கையை, பிரிட்டிஷ் பொது மக்களின் அபிப்பிராயத்துக்கு இணங்க ஓரளவு மாற்றிக்கொண்டு விட்டனர். இப்பொழுது தொழிற் கட்சியினரும் பிரிட்டனில் ஹைட்ரஜன் குண்டைப் பகிஷ்கரிக்க இயக்கம் நடத்தி வருகின்றனர். பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர், பெவன், அமெரிக்க வெளி விவகார மந்திரி டல்லஸைக் கடுமையாகத் தாக்கி வருகிறார்!

மேற்கு ஜெர்மனியிலும் அணுகுண்டு ஹைட்ரஜன் குண்டுகளுக்கு எதிராக, ஜெர்மன் விஞ்ஞானிகள் எல்லாரும் சேர்ந்து பகிஷ்கரிப்பு இயக்கம் நடத்தி வருகிறார்கள்!

ஜப்பானில் அணுகுண்டு சோதனைகளுக்கு எவ்வளவு எதிர்ப்பிருக்கிறது என்று சொல்ல வேண்டாம். ஐரோப்பாவிலும் பலநாடுகள் இந்த விஷ குண்டுகளுக்கு எதிராக இருக்கின்றன. இப்படி உலக நாடுகள் எல்லாம், இந்த குண்டுகளின் விஷத்திலிருந்து காப்பாற்றப் படுவோமா என்று ஏங்கிக் கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் ருஷ்யா, துணிந்து ஒரு காரியம் செய்தால், அதை அங்கீகரித்து அதைவிட ஒருபடி மேலே சென்று உலக சமாதானத்தை நிலைநிறுத்த அமெரிக்கா முயன்றிருக்க வேண்டும்.

அட்லாய் ஸ்டீவன்ஸன் அணுகுண்டுகள் எதிர்ப்பை மறுபடியும் ஊர்ஜிதப்படுத்தியிருக்கிறார்.

இதையெல்லாம் கவனிக்காமல் அமெரிக்க சர்க்கார் இன்னும் பரிதாபகரமான நிலையை உண்டாக்கி வருகிறது.

அமெரிக்க விமானங்கள், அணுகுண்டு, ஹைட்ரஜன்குண்டுகளுடன் ருஷ்ய எல்லையில் சுற்றி வருகின்றனவாம். ருஷ்ய வெளிநாட்டு விவகார மந்திரி கிரோமிகோ, ஐ. நா. சபையில் அமெரிக்காவின்மீது புகார் செய்திருக்கிறார்.

அவர் தெளிவாக ஒரு விஷயத்தைக் குறிப்பிடுகிறார். பல சம்பவங்கள் அமெரிக்க தளபதிகள் நினைத்ததற்கு மாறாக நடந்திருக்கின்றன. அதே போல், ஹைட்ரஜன் குண்டு ஏந்திச் செல்லும் விமானிகள் தவறு இழைத்து விட்டாலோ, விமானம் கெட்டுச் சற்றும் எதிர்பாராத சமயத்தில் ஹைட்ரஜன் குண்டு வெடித்து விட்டாலோ உலகத்தின் அமைதி என்ன ஆவது?

ஐ நா. சபையில் இந்த விவகாரம் போயிருக்கிறது. இதனால் பெருத்த பயன் விளைந்து விடப் போவதில்லை. இருந்தாலும், அமெரிக்காவுக்கு ஞானோதயமாவதற்கு அவகாசமாவது தரும்.

1959ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் அமெரிக்கா அணு ஹைட்ரஜன் குண்டு சோதனைகளை நிறுத்திவிடப் போவதாக ஒரு செய்தி வெளி வந்திருக்கிறது. சோதனைகளெல்லாம் முடித்துத் தீர்த்தபின், சோதனைகளை நிறுத்துவோம் என்று சொல்வதைக் கண்டு சிரிப்பதா அழுவதா என்று நமக்குத் தெரியவில்லை.

# அருள் வாக்கு

*[இம் மாதம் 24ம் தேதி ஆதிசங்கரர் அவதரித்த புனித நாள். இந் நாளில் தமிழ்கூறும் நல்லுலகமெல்லாம் சங்கர ஜெயந்தி கொண்டாடுவார்கள். இப் புனித நாளில் ஆதி சங்கரரைப்பற்றி நமது காமகோடி பீடாதிபதி ஆசார்ய ஸ்வாமிகள் சமீபத்தில் அருளிய ஒரு சில பொன்மொழிகளை நேயர்களுக்கு நினைவூட்டுகிறோம்.]*

காம குரோதம் போக வேண்டுமென்றால், நம்மை விட்டு வேறான பொருள் இருக்கிறது என்று நினைப்பு போய், எல்லாம் பரமாத்ம சொரூபம் என்ற மெய்யுணர்வு ஏற்பட வேண்டும். உலகம் வெவ்வெறு விதமாகத் தோற்றமளித்தாலும், ஞானிக்கு எல்லாம் பரமாத்ம சொரூபமாகவே விளங்கும்.

**"மரத்தை மறைத்தது மாமத யானை**
**மரத்தில் மறைந்தது மாமத யானை**
**பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்**
**பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்"**

என்றார் திருமூலர்.

மரத்தில் ஒரு யானை செய்கிறான். அதை ஒரு குழந்தை பார்த்தால் யானை என நினைக்கிறது. அதையே ஒரு தச்சன் பார்த்தால் யானை என்ற எண்ணம் தோன்றாது. தச்சன் அது என்ன மரமாக இருக்கும் என்று எண்ணுகிறான். தச்சனுக்கு யானை என்ற எண்ணம் ஏற்படுவதில்லை. அதேமாதிரி சாமானிய மனிதனுக்கு, பிரம்மத்தைப் பஞ்ச பூதங்கள் மறைத்து விடுகின்றன. ஞானியாக இருப்பவன் பஞ்சபூதங்களுக்கு அப்பால் பரப்பிரும்மத்தைப் பார்க்கிறான். ஆதிசங்கரரும் இதே உதாரணத்தைத்தான் காட்டியிருக்கிறார்.

பண்ருட்டிப் பொம்மைகளைப் பார்க்கும்பொழுது, அது காய்கறி, பழம், சிப்பாய் என்ற எண்ணம் குழந்தைகளுக்கு ஏற்படுகிறது. அதைச் செய்தவனுக்கு அது மண் என்ற எண்ணம் ஏற்படுகிறது.

சர்க்கரையில் பல தின்பண்டங்கள் செய்தாலும் எல்லாம் சர்க்கரை என்ற எண்ணம் ஏற்படுகிறது. அதே போல் பிரபஞ்சத்தில் பல்வேறு விதமான தோற்றங்கள் இருப்பினும், எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்பது பரப்பிரும்மம்தான் என்பது ஆதிசங்கரரின் உபதேசம்.

இதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் காசி விசுவநாதர் நான்கு நாய்களுடன் சண்டாளவேஷத்தில் ஆதிசங்கரர் முன் தோன்றினார். வழியை விட்டு ஒதுங்குமாறு சண்டாளனைப் பார்த்து ஆதிசங்கரர் கூறினார்.

"யார் ஒதுங்குவது? உடலா? ஆத்மாவா?" என்று கேட்டான் சண்டாளன்.

அச் சண்டாளன் பெரிய தத்துவ ஞானி என்பதை ஆதிசங்கரர் உணர்ந்தார். உடனே அவனைக் கொண்டாடி மனிஷா பஞ்சகம் என்ற ஸ்தோத்திரம் செய்தார். அதன் கடைசி சுலோகத்தின் பொருள் வருமாறு:—

இந்திரன் முதலானோர் அனுபவிக்கும் சுகம் பரப்பிரும்மத்தில் ஒரு திவலை. தத்துவ ஞானியோ அப்பரமானந்தத்தில் மூழ்கியிருக்கிறார். தான் என்ற அகங்காரம் போய் விடுகிறது. அப்போது அந்த ஞானி வெறும் பிரும்மமாகவே ஆகிவிடுகிறார்.





# வேண்டாம் இந்த மகாநாடு!

ஹிந்திப் பிரசார வேலையில் ஈடுபட்டுள்ளவர்கள், ஆட்சி மொழி சம்பந்தமாக ஒரு மகாநாடு கூட்டுகிறார்கள் என்பதை அறிந்து நாம் வருத்தமடைகிறோம்.

ஆட்சி மொழி விஷயம் வேறு. ஹிந்திப் பிரசார விஷயம் வேறு.

ஆட்சி மொழி ஆங்கிலமாகவே இருக்க வேண்டும் என்று சொல்பவர்கள், ஹிந்தியை எல்லோரும் படிக்க வேண்டும் என்றுதான் சொல்லி வருகிறார்கள். ஹிந்தி பேசப்படாத பகுதியில் இருப்பவர்கள், வடநாட்டு மக்களுடன் பழக ஹிந்தி மொழி தெரிந்திருக்க வேண்டியது அவசியம் என்பதை வற்புறுத்தத்தான் செய்கிறார்கள். ஹிந்தி பேசும் பகுதியினர் பெரும் பகுதியினராக இருப்பதால், வர்த்தக நிமித்தம் இந்திய மக்கள் யாவரும் ஹிந்தி தெரிந்திருக்க வேண்டியது அவசியம் என்பதைப் பல மேடைகளில் சொல்லி வந்திருக்கிறார்கள். ஆங்கிலத்தையே ஆட்சி மொழியாக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறவர்கள் ஹிந்திப் பிரசார வேலைக்கு விரோதிகள் அல்ல. அவர்கள் தங்கள் வேலைக்குச் சுத்தகமாக இருப்பதாக நினைத்துக் கொண்டு, ஹிந்திப் பிரசாரத் துறையில் ஈடுபட்டிருப்பவர்கள், ஒரு மகாநாடு கூட்டப் பார்ப்பதுதான் ஹிந்திப் பிரசாரத்துக்குச் சுத்தகமாக முடியும்!

ஹிந்திப் பிரசாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் ஆங்கிலத்தை எதிர்த்து, ஹிந்தியை ஆட்சி மொழியாக்க வேண்டும் என்று கூட்டம் போட்டால், ஹிந்திப் பிரசாரகர்களிடம் தான் மக்களுக்கு வெறுப்பு ஏற்படும். ஹிந்திப் பிரசார வேலைதான் கெடைப்படும்!

ஆகவே ஹிந்திப் பிரசாரத்தில் அக்கறையுள்ளவர்கள், தங்கள் வேலை நலனைக் கருதி ஆட்சிமொழித் தகராறில் தலையிடாமல் ஒதுங்கி அமைதியாகத் தங்கள் வேலையைச் செய்து கொண்டு போவது நல்லது. ஆட்சி மொழி விஷயம் அரசியல் கலந்த விஷயம்.

தென்னாட்டில் ஹிந்திப் பிரசார விஷயம் அரசியலோடு இணைக்கக் கூடாது. இணைத்தால் பிரசாரத்துக்கு ஹானி ஏற்படும். இந்த மகாநாடு கூட்டும் பணியில் ஈடுபட்டிருப்பவர்கள் அனைவரும் நமது நீண்ட நாளைய நல்ல அன்பர்களாதலால் இவ்விதம் அவர்களுக்கு எச்சரிக்கை செய்வது நமது கடமை என்று கருதியே சொல்கிறோம்.

# இன்பக் கனவு

'பொங்கி வரும் பெருநிலவு' என்ற தொடர் நவீனத்தில் வரும் கதாநாயகன் டாக்டர் நடராஜன் சஸ்திர சிகிச்சையில் விசேஷப் பயிற்சி பெறுவதற்கு மேல்நாட்டுக்குப் பயணமாகிறான். தன் முழுக் கவனத்தையும் படிப்பிலும் பயிற்சியிலும் செலுத்தப் பார்த்தான். ஆனால், அதில் தோல்வியே அடைந்தான். அவன் மனம் மறுபடியும் தமிழ் நாட்டைக் காணத் துடித்தது.

லண்டன் மா நகரத்தில் வசித்த போதிலும் தமிழன் தமிழன்தானே! அவன் உள்ளத் துடிப்புக்கு மற்றொரு காரணமும் இருந்தது. அவன் மனத்தைக் கவர்ந்த விமலா தமிழ் நாட்டில் அவனுக்காக ஏங்கி ஏங்கிக் காத்துக் கிடந்தாள்.

டாக்டர் நடராஜன் தமிழன் என்பதோடு இலக்கிய மனம் படைத்தவன். தமிழ் நாட்டைக் காண அவன் உள்ளம் ஏங்கிய போதெல்லாம், கம்பனையோ அல்லது பாரதியையோ படிக்க ஆரம்பித்தான். உடனே தமிழ் நாட்டுக்குப் போய் விடுவான். பாரதியின் காவியங்களிலே அவனுக்கு மிகவும் பிடித்தமானது "அழகுத் தெய்வம்". அந்தப் பாடலில் "பொங்கி வரும் பெருநிலவு போன்ற அவன் முகமும்" என்ற வரிகளைப் படித்ததும் விமலாவின் முகம்தான் நடராஜனுக்கு முன்னால் வந்து நிற்கும்.

நடராஜனும் பாரதியைப் போலவே கனவு கண்டான். அழகுத் தெய்வத்தின் அவதாரமாக அவனுக்கு விளங்கிய விமலாவைக் கனவிலே கண்டான் நடராஜன்.

அவன் கண்ட அந்த இன்பக் கனவை இவ்வாரத்திய அட்டைச் சித்திரமாக உருவாக்கியிருக்கிறார் ஓவியக் கலைஞர் மணியம். இந்தக் கனவுக் காட்சிகளை அடுத்துவரும் 'பொங்கி வரும் பெருநிலவு' அத்தியாயத்தில் விரிவாகக் காணலாம்.

# வள்ளுவர் வாசகம்

## ராஜாஜி

### 27.

தற்காலத்தில் ஒழுக்கத்துக்குப் பாதுகாப்பு முக்கியமாக அரசாங்கச் சட்டம் என்று வைத்துக் கொண்டு வாழ்க்கை நடத்துகிறோம். சமூகத்தின் பயம் குறைந்துபோயிற்று. முன் காலத்தில் ஒழுக்கத்தைக் காத்து வந்தது சமூகக் கட்டுப்பாடு. சாதி வகையாக மக்கட் சமுதாயம் பிரிக்கப்பட்டு அனைவரும் அந்தப் பிரிவினையை ஒப்புக் கொண்டு அந்த அந்த வகுப்பார் அந்த அந்தத் தொழிலும் கடமைகளும் கவனிக்க வேண்டும் என்கிற ஒழுங்குப்படி நடந்து வந்தார்கள். சமூகத்தின் ஒழுங்குப்பாடு மீறி யாரேனும் நடந்து கொண்டால் பழி எய்துவார். அதுவே அனைவருக்கும் பெரும் பயமாக இருந்தது. அரசன் தண்டனைக்காகக் காத்திராமலே ஒழுக்கம் காக்கப்பட்டு வந்தது. இந்த முறையை மக்கள் அனுசரித்து வந்த காலம் வள்ளுவர் காலம்.

காலத்துக்கு அடங்கி நூல்கள் தோன்றும். பொருளும் காலத்துக்கு ஏற்பக் கொள்ள வேண்டும். எக்காலத்துக்கும் உண்மை உண்மையே யாயினும் உயிர் பல உடல்கள் எடுப்பது போல் உண்மைக்கும் கால பேதத்தால் பொருள் மாறும். வண்டி என்றால் ஒரு காலத்தில் மாட்டு வண்டியும், குதிரை வண்டியுமே. இந்தக் காலத்தில் வண்டி என்றால் ரயில் வண்டியும் இன்னும் பல வாகனங்களும் அடங்கும். வண்டியைப் பற்றிப் படித்தோமானால் இதைக் கவனித்தல் வேண்டும். அதே போல் சாதி முறையும் சாதி தருமமும். வள்ளுவர் காலத்தில் இருந்த நிலையை மனத்தில் வைத்துக் குறளுக்குப் பொருள் காண வேண்டும். அதில் நிரந்தர உண்மை எது. கால வேறுபாட்டுக்கு அடங்கும் உண்மை எது என்று பிரித்து உணர்தல் வேண்டும்.

வள்ளுவர் காலத்தில் அந்தணருக்கு உரிய கடமைகளும் தொழிலும் வைத்து ஒழுக்கத்தைப் பற்றிச் சொல்லுகிறார்.

ஒழுக்கம் உடைமை
குடிமை : இழுக்கம்
இழிந்த பிறப்பாய்
விடும்.

அந்தணர்களின் கடமைகளையும் வாழ்க்கை முறையையும் அந்தணர்கள் காப்பாற்றினாலேதான் அவர்களுக்குச் சமூகத்தில் உயர்ந்த இடம். ஒழுக்கம் தவறினார்களோ நீசர்களாகி விடுவார்கள். மலை யுச்சியில் இருப்பது நல்லதே. ஆனால் விழுந்தால் உயரத்தின் அளவாகும் வீழ்ச்சி. இழுக்கம்—ஒழுக்கம் தவறி நடத்தல். அதன் பயன் உயர் குலம் மிக இழிந்த குலமாகி விடுதல்.

தற்காலத்தில் சாதிபேதங்களை வேண்டாம் என்று அவற்றை ஒழித்து வருகிறோம். ஆயினும், எந்தப் பதவியிலோ, ஸ்தானத்திலோ இருக்கிறோமோ அந்த இடத்துக்கு உரிய ஒழுக்கத்தை ஜாக்கிரதையாகக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் ஸ்தானத்தின் உயரத்தின் அளவு வீழ்ச்சியும் அடைவோம்.

* * *

பார்ப்பானுடைய தொழில் மறை ஓதுதலும் விளக்கிச் சொல்லுதலும். ஓதிய சாஸ்திரம் மறந்தால் மறுபடியும் படித்துக் கொள்ளலாம். ஆனால் அந்தப் பார்ப்பான் அவனுக்குரிய ஒழுக்கம் தவறினால் அதற்குப் பரிகாரம் இல்லை. படித்த படிப்பு மறப்பது போல் அல்ல, ஒழுக்கம் கெடுவது.

மறப்பினும் ஒத்துக்
கொளல் ஆகும் பார்ப்பான்
பிறப்(பு)ஒழுக்கம் குன்றக் கெடும்.

ஒழுக்கம் குன்றினால், பிறந்த பிறப்பு அதோடு அழிந்தது. அதன் பிறகு அவன் பார்ப்பான் அல்ல.

கல்வியில் இழந்ததை மறுபடியும் அடைய முடியும். ஒழுக்கத்தில் இழந்தது இழந்ததேயாகும். திரும்ப அதை அடைய முடியாது. பார்ப்பானே, உன் கடமையும் உயர்வும் உன் படிப்பிலும் ஒழுக்கத்திலும் இருக்கின்றன. படிப்பில் தவறி விட்டாயானால் சீர்ப்படுத்திக்கொள்ள முடியும். ஆனால் ஒழுக்கம் தவறினயோ, கெட்டாய் என்கிறார் முனிவர். பார்ப்பானுக்குச் சொன்னது அவரவர்கள் நிலைமைக்குத் தக்க வேறுபாட்டுடன் எல்லாருக்கும் சொன்னதாகும்.

கற்க வேண்டிய நூல்களை ஓதாமல் இருப்பது அந்தக் காலத்தில் பார்ப்பனருக்குப் பெருங் குற்றம். அதை வைத்து ஒழுக்கத்தின் சிறப்பை எடுத்துக் காட்டுகிறார். ஓதலில் குறைவும் மறதியும் நேரிட்டால் சரிப்படுத்திக் கொள்ளலாம். ஒழுக்கத்தில் குறைபாடு நேரிட்டால் பெருங்கேடு. மருந்து இல்லை என்கிறார்.

1. பந்தநல்லூர் சொக்கலிங்கம் பிள்ளையிடம் பயிற்சி பெற்ற குமாரி ஜயா, குமாரி உமா இவர்கள் பரதநாட்டியம் நாகபுரி அருகில் இருக்கும் பிலாய் என்ற ஊரிலுள்ள லலித கலா கேந்திரத்தில் சிறப்பாக நடைபெற்றது.

2. ஓய்வு பெற்ற இன்ஜினியர் திரு எஸ். சுப்பிரமணிய ஐயரின் பேத்தியும், வேதாரண்யம் ஸ்ரீமதி பட்டம்மாளின் சிஷ்யையுமான குமாரி உமா மகாதேவனின் நாட்டிய அரங்கேற்றம் பிப்ரவரி 7-ந்தேதி சென்னை தியாகராயநகர் வாணி மகாலில் விமரிசையாக நடைபெற்றது.

3. திரு எஸ். சிவசாமி அவர்களின் புதல்வி பேபி ஜயாவின் பரதநாட்டியம் சமீபத்தில் சென்னை மியூஸியம் தியேட்டரில் நடைபெற்றது.

4. பாஷ்யம் சங்கீத கலாசாலை மாணவிகள் குமாரி சரஸ்வதி, குமாரி விட்டாபாய் இவர்களின் பரதநாட்டிய அர













கேற்றம் சென்ற மாதம் சென்னை கோகலே மண்டபத்தில் நடைபெற்றது. குழந்தைகளுக்குப் பரதநாட்டியம் பயிற்றுவித்த குமாரி கி. எஸ். துளசி அவர்களை எல்லோரும் பாராட்டினார்கள்.

5. டி. கே. நாராயணன் அவர்களின் குமாரி பேபி சந்திராவின் பரதநாட்டிய அபிநயம் சென்ற மாதம் சென்னை வாணி மகாலில் நடைபெற்றது.

6. திரு ஏ. விஜயராகவன் அவர்களின் குமாரி பேபி கீதாவின் பரதநாட்டிய அரங்கேற்றம் சென்றமாதக் கடைசியில் வில்லிவாக்கம் பாரத் சேவக் சமாஜத்தில் நடந்தேறியது.

7. திரு குகநாதன் அவர்களின் பேத்தியும், திரு என். சிவகுமாரய்யர் அவர்களின் புதல்வியுமான குமாரி கீதா சரஸ்வதி சென்ற மாதம் தஞ்சை பி. டபிள்யூ. ரிக்ரியேஷன் கிளப்பில் நடனமாடினர்.

8. ஸ்ரீமதி கௌசல்யா அவர்களின் மாணவி குமாரி ரேவதியின் பரதநாட்டியம் அபிராமபுரம் அசோசியேஷனில் சென்ற மாதம் சிறப்பாக நடைபெற்றது.

9. சேலத்தைச் சேர்ந்த வேலூர் முத்தமிழ்க் கலை மன்றத்தில் திரு பி. கே. தங்கம் அவர்களின் புதல்விகள் ஜெயா—தேவிகா ஆகியவர்களின் நாட்டிய அரங்கேற்றம் நடந்தது.







# வட்ட

## கலைக் களஞ்சியம்

''கல்கி'' புத்தாண்டு மலர் மணம் நுகர்ந்தேன். வண்ண முகப்பும், சங்கராச்சாரியாரின் எழில் வண்ண உருவும், நற்றிணைக் காட்சிகள், கவிச்சக்கரவர்த்தி ஆகிய மணியம் அவர்களின் சித்திரக் கைவண்ணமும் கண்டு களிப்புற்றேன். கலையோவியங்களான இவை கண்களைக் கவர்ந்தன. பயனுள்ள கட்டுரை ''செல்வமும் சுதந்திரமும்'', புதிய தொடர்கதைகள் ''பொங்கிவரும் பெருநிலவு'', ''குமரிமுத்து'', பரிசுக்கதை ''மஞ்சுளா'' ஆகிய புது அம்சங்கள் புத்தாண்டில் புத்துணர்ச்சி ஊட்டின. வழக்கம்போல, ராஜாஜி, அகிலன் எழுத்தோவியங்கள் நல்ல முறையிலே படிக்கச் சுவாரஸ்யமாக அமைந்துள்ளன. 'கல்கி' புத்தாண்டு மலர் ஒரு ''கலைக் களஞ்சியம்'' எனக் கூறலாம்.

சென்னை
12—4—58
பி. வி. கிரி

## புதுமைப் பாதை

''பொங்கிவரும் பெருநில''வின் முன்னுரையில், நிய சக்திகளைப் பற்றி அருமையான விளக்கம் கொடுத்திருக்கிறார் திரு ராஜேந்திரன். அவருடைய தொடர்கதையின் அடிப்படைக் கருத்து இவ்வாறு புதுமைப் பாதையில் அமைந்தது பற்றி மிக்க மகிழ்ச்சி.

'பொங்கிவரும் பெருநிலவு' கருத்தைப் பற்றி ஈர்க்கும் கதைச் சுழிப்போடு ஆரம்பமாகிறது. வரப்போகும் கதையின் உணர்ச்சிகரமான நிகழ்ச்சிகளை ஒரு சிறிது பிறைச் சந்திரன் ஒளிபோல் மின்னச் செய்திருக்கிறார். முதல் அத்தியாயத்தின் நாடகப் பண்பு ஒரு சிறந்த உத்தி. நடராஜனும் விமலாவும் மேடையில் ஏறிவிட்டார்கள். இனி அவர்களை விட்டுக் கண்ணை எடுக்க முடியாது.

ஆசார்ய சுவாமிகளின் ஸ்ரீமுகம் நம் ஒவ்வொருவருக்கும் நேரில் வந்து சொல்லுவது போலிருக்கிறது. அருமையான மொழி.

திருச்சி
13—4—58
ச. கந்தஸ்வாமி
''[illegible]''

## கல்கி புத்தாண்டு மலர்

கல்கி புத்தாண்டு மலரைக் கண்டு அளவிலா மகிழ்ச்சி கொண்டேன். கண்ணைக் கவரும் மூவர்ண அட்டை, ஸ்ரீ சங்கராச்சாரியாரின் முகப்புப் படம், அவரது ஸ்ரீமுகம், ராஜாஜியின் புது வருஷ வாழ்த்து முதலியவை யெல்லாம் கனஜோராக இருக்கின்றன. புதிய தொடர் கதை—பொங்கிவரும் பெரு நிலவு—தெவிட்டாத தெள்ளமுதமாக இருக்கிறது. நற்றிணைக் காட்சிகளும், கவிச் சக்கரவர்த்தி சித்திரங்களும், இலக்கிய வெள்ளத்தில் மூழ்கித் திளைக்கின்ற இன்பத்தையே தருகின்றன. குமரிமுத்து பிரமாதம். சிறு கதைகள், வழக்கம்போல் சுவை குன்றாது மிளிர்கின்றன. திரு சந்தானம் அவர்களின் கட்டுரையும் நன்றாக அமைந்திருக்கிறது. இவை யெல்லாவற்றையும் 30 நயா பைசாவுக்கே எங்களுக்கு அளித்த உங்களுக்கு என்ன கைம்மாறு செய்வேன்?

கோயமுத்தூர்
10—4—58
தா. கி. கணபதி

## தனிச் சிறப்பு!

தமிழ்ப் புத்தாண்டில் வெளிவந்துள்ள பல பத்திரிகை மலர்களில் 'கல்கி' மலர் பல அம்சங்களிலும் சிறந்து விளங்குகிறது. இது மட்டுமல்ல. 'கல்கி' எந்த மலர் வெளியிட்டாலும் அதன் சிறப்பு தனி அம்சமாகவே இருக்கிறது. இந்தத் தனிச் சிறப்பைக் 'கல்கி' என்றும் கடைப்பிடிக்கும் என்று நம்புகிறேன்.

தென்னூர்
14—4—58
ரா. ஆறுமுகம்

## ராஜாஜி வாசகம்

செந்தமிழ்க் கற்பகத்தின் தெய்வத் திருமலராகிய திருக்குறளின் தெய்வ மணம் தமிழ் நாடெங்கும் கமழ ராஜாஜி அவர்கள் விளக்கம் எழுதி வருவது தமிழ் நாட்டின் பாக்கியமாகும். திருக்குறளின் சாரமனைத்தும், ''வையகத்தில் வாழ்வாங்கு வாழ்வார் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்'' என்ற ஒரு குறளில் காணலாம். வையத்தில் வாழ்வாங்கு வாழும் பெருமகன் ராஜாஜி. தமிழருக்கு வாய்த்த நடமாடும் தெய்வம்.

தாமே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால் தெய்வப் புலவர் தந்த முப்பாலை ராஜாஜி அவர்கள் தமக்கே உரிய இனிய, எளிய, தெள்ளிய நடையில் ராஜாஜி வாசகமாய்த் தந்திருக்கிறார். வள்ளுவரை 'முனிவர்' என்று குறிப்பிடுகிறார் நம் ராஜாஜி 'முனிவர்'. ''எது தர்மம், எது அதர்மம் என்று புஸ்தகத்தைப் புரட்டிப் பார்க்க வேண்டியதில்லை'', ''அறநெறியானது கடமை மட்டுமல்ல, விவேகமும்கூட'' ''உயிர்த்தத்துவம் அன்பில் நிற்கிறது'' ''அன்புத் தத்துவம் ஆன்ம பரிணமத்துக்கு அடிப்படை'' என்பவை யெல்லாம் உண்ண உண்ணத் தெவிட்டாத ராஜாஜி வாசகங்கள். உலக மேதையும், தமிழன்னையின் தவப் புதல்வரும் ஆன ராஜாஜிக்குத் தமிழ்த் தொண்டு புரிய, ஆண்டவன் நீண்ட ஆயுளை அருள் புரிவாராக!

ஆக்கவாய்
5.4-58
எஸ். நல்லபெருமாள்

## தமிழனுக்குத் தர்மசங்கடம்!

இந்தியாவின் முக்கியமான உணவுப் பொருளாக இருந்து வரும் அரிசியின் பற்றாக் குறையைப் போக்கப் பம்பாய் அரசியலார் ஒரு புதுத் திட்டம் கொண்டு வந்து இப்போது கடந்த பிப்ரவரி மாதம் முதல் அமுலாக்கியிருக்கிறார்கள். அதாவது, பம்பாயிலுள்ள எல்லா ஹோட்டல்களிலும் ஒரு வாரத்தில் செவ்வாய்க் கிழமையன்றும்,



வெள்ளிக் கிழமையன்றும் இரு வேளைகளிலும் அரிசி உணவு கிடையாது. அந்தத் தினங்களில் கோதுமை ரொட்டியே உணவாகக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. கோதுமை ரொட்டியைச் சாப்பிட்டுப் பழகிவிட்ட இந்நாட்டினரை இத்திட்டம் பாதிக்கவில்லை. ஆனால் என் போன்ற, அதாவது ஹோட்டல் சாப்பாட்டை நம்பி வாழும் பம்பாய்வாழ் தமிழர்களை இந்தச் சட்டம் மிகவும் பாதிக்கிறது.

பம்பாய்
7-4-58

ஏ. பி. ஆதிநாராயணன்

## பழைய விதி மாறுமா?

நமது மாகாணத்தில் 'மெட்ரிக்' பரீட்சை எழுதவேண்டுமானால், எல்லாப் பாடங்களும் ஆங்கிலத்தில் எழுதப்பட வேண்டுமென்ற பழைய விதி இன்னமும்' இருந்து வருகிறது. '' தமிழ் ஆட்சிமொழி '' நிலவிவரும் இந்நாளில் இன்னும் மற்றப் பாடங்கள்(ஆங்கிலம் தவிர்த்து) ஏன் பிராந்திய மொழியாகிய தமிழில் இருக்கக் கூடாது? மற்ற மொழி பேசும் மாகாணங்களில் தங்கள் பிராந்திய மொழிக்கு முக்கியத்துவம் அளிப்பது போல, நமது மாகாணத்திலும் மெட்ரிக் எழுதும் முறை மாற்றினால், பலர் கல்வியில் முன்னேற வழி கிடைக்கும்.

இராஜபாளையம்
28—3—'58

மு. [சிவசாமிநாதன்

## தோட்டத் தொழிலாளர் நிலை

இலங்கையில் வாழும் இந்தியத் தோட்டத் தொழிலாளர்கள், ஸ்ரீ எழுத்துப் போராட்டம் காரணமாக இன்று வெளியே தலைகாட்ட முடியவில்லை. அவர்கள் கடைத் தெருக்களுக்குப் போக முடியாமலும், பஸ்களில் பிரயாணம் செய்ய முடியாமலும் தவிக்கவேண்டியிருக்கிறது. இலங்கை இந்தியப் பிரச்னை என்று தீர்ந்து, அமைதியாக வாழும் காலம் வருமோ?

இலங்கை
12—4—58

இலங்கை தோட்டத் தொழிலாளி

## வாழ்வில் நம்பிக்கை

புத்தாண்டு கல்கி இதழில் வெளியாகியுள்ள இரண்டு 'ஸ்ரீ முகங்க'ளும் மதிப்பிட முடியாத இரண்டு செல்வங்கள். அந்த இரண்டு பக்கங்களையும் கண்ணாடியில் இட்டுத் தினம் தினம் பார்த்துப் படித்து வாழ்க்கையில் கடைத்தேறலாம்.

கிப்ளிங் எழுதிய இப் (IF) என்ற அற்புதமான செய்யுள் என்னைப் பல்லாண்டுகளுக்கு முன்பே கவர்ந்தததொன்று. அதை ராஜாஜியின் சக்தி மிக்க தமிழில் படிக்கும்போது வாழ்வில் ஒரு புது நம்பிக்கையும் உள்ளத்தில் ஒரு ஊக்கமும் பிறக்கின்றன.

மயிலாப்பூர்
12—4—58

தம்பி ஸ்ரீநிவாசன்

## இன்பமூட்டும் மலர்

கல்கி புத்தாண்டு மலரின் அட்டைப் படம் மனத்தைக் கவரும் விதத்தில் அமைந்துள்ளது. சிறிது நேரம் அந்த லாவண்யத்தில் லயித்திருந்து தாளைப் புரட்டினேம். சித்திரப் படங்கள் ஆனந்தத்தில் ஆழ்த்துகின்றன. சங்கராச்சாரியார் அவர்களின் வாழ்த்தும், எம் தந்தை ராஜாஜி அவர்களின் புது வருட ஆசியும், மீராபென் அவர்களின் சிறு கட்டுரையும், புதிய தொடர்கதை ''பொங்கி வரும் பெரு நிலவும்''—இவையாவும் படித்து இன்புறுமாறு அமைந்திருக்கின்றன.

கணபதி
10—4—58

சு. சூடாமணி
இ. விசய இலக்குமி

## ரோடு வசதி

திருநெல்லை மாவட்டத்தில் அநேகம் பட்டி கிராமங்களில் சரியான ரஸ்தாக்கள் இல்லாமல் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். ஒவ்வொரு கிராமத்துக்கும் நகரத்தோடு இணைத்து ரோடு வசதிகள் செய்து தர வேண்டும்.

அம்பலசேரி
14—4—58

மு. மா. முத்தையா பிள்ளை

## அழகும் மணமும்

கல்கி புத்தாண்டு மலர் அழகும், மணமும், சுவையும் நிறைந்த புது மலர். வழிபாட்டுத் தெய்வங்களின் படங்களுக்கருகே சட்டம் போட்டு வைக்கக்கூடிய அளவுக்கு அருமையாக வெளியிட்டுள்ளீர்கள். ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளின் திருவுருவப் படத்தை. 'பொங்கி வரும் பெரு நிலவு, படிக்க ஆரம்பித்ததுமே திரைப் படம் பார்ப்பதுபோல், அருமையான காட்சி ஜோடனைகளுடன் நிகழ்ச்சிகள் ஆரம்பித்து விடுகின்றன.

ராசிபுரம்
13—4—58

அடைக்கலவன்

## எது நல்லது?

இன்று நாட்டில் மொழிப் பிரச்னை அரசியல் தலைவர்களிடையே மிகுந்த கருத்து வேற்றுமையை வளர்த்துவிட்டது. இந்த அரசியல் குழப்பத்தைத் தவிர்க்க, ஆசியா கண்டத்தின் ஒப்பற்ற மாணிக்கம் ஸ்ரீ ராஜாஜி அவர்களின் வார்த்தைக்குச் செவி சாய்க்க வேண்டும். மொழி பித்துக் கொண்டவர்கள், ராஜாஜி அவர்கள் தன்னலம் கருதிக் கூறவில்லை, உண்மை நிலையை எடுத்துக் கூறி வருகிறார் என்பதை உணர வேண்டும். அப் பெரியார் நாட்டு நலனுக்காக அன்றுமுதல் இன்றுவரை உழைத்து வருவது உலகமறிந்த உண்மை. மொழிப் பிரச்னை விஷயத்தில் ராஜாஜியைக் கலந்து ஒரு முடிவுக்கு வருவதே சர்க்காருக்கும் மக்களுக்கும் நல்லது.

செங்கோட்டை
5—4—58

முழுமதி

# தக்ஷிண ரெயில்வே

## டெண்டர் நோட்டீஸ் நெ. S. 51/V

ஒரு ஆண்டு காலத்திற்கு 1–5–58 முதல் 30–4–59 வரையில் ரெயில்வேக்குத் தேவையான உடைகளைத் தைத்து சப்ளை செய்ய சீலிட்ட டெண்டர்கள் தக்ஷிண ரெயில்வே, கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸில் (அயனாவரம் போஸ்ட், சென்னை – 23) 19 – 5 – 58 பிற்பகல் 3 மணி வரை ஏற்றுக் கொள்ளப்பட்டு, 20 – 5 – 58 பகல் 11 மணிக்கு கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் அவர்களால் பார்வையிடப்படும்.

டெண்டர் பாரத்தை பிரதி ஒன்றுக்கு ரூ. 10/- வீதம் ரொக்கமாகவோ மணியார்டர் மூலமாகவோ செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம். வேறு எவ்வகையிலும் அனுப்பப்படும் தொகை அங்கீகரிக்கப்படமாட்டாது.

டெண்டருக்கான ஜாமின் தொகை ரூ. 1,000/-த்தையும் சீப் காஷியர், தக்ஷிண ரெயில்வே சென்னை - 3, என்ற விலாசத்துக்கு 16 - 5 - 58க்குள் அனுப்பி வைக்க வேண்டும்.

டெண்டர் பாரங்கள் 15 - 5 - 58 பிற்பகல் 3 மணிக்குப் பிறகு கொடுக்கப்படமாட்டாது.

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸ்
சென்னை - 23

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ்

# ஸ்ரீராம நவமிப் பொன்விழா

**அநுத்தமா**

**ம**ணி மந்திர ஔஷதம் என்று நம் நாட்டில் சொல்வது வழக்கம். எந்த ஒரு நோய் வந்தாலும் அதற்கு ஆறுதல் தேடும் காலையில் ஆண்டவனின் திருநாமத்தை உச்சரித்துத்தான் தொடங்குவது நம் மரபு. திருநீற்றை மந்திரித்துக் கொடுப்பது என்று உண்டு. தவத்தில் மிக்க பெரியார்கள் கையினால் தொட்டு அளிக்கும் தண்ணீருக்கு ஒரு மகிமை. அவர்கள் நடந்த பூமிக்கு ஒரு மகத்துவம் என்பதையெல்லாம் நாம் கண்கூடாகக் கண்டிருக்கிறோம்.

ஆண்டவன் திருநாமத்தை உச்சரித்து, உச்சரித்துத் தழும்பேறிய பெரியோர்கள், கடவுளின் வழிபாட்டிலே முறுக்கேறிய மகான்கள், பகவானின் நாமசங்கீர்த்தனத்தில் ஊறிக் குளித்த பெருமக்கள் நடந்த பூமிதான் எத்தகைய சக்தி வாய்ந்ததாக இருக்க வேண்டும்.

அத்தகைய புண்ணிய பூமியைக் காணும் பாக்கியம் அண்மையில் சிலருக்குக் கிடைத்தது. துறவரககளின் சமாதிகளையும், அநிஷ்டானங்களையும் தன்னுள் வைத்துக் கொண்டிருக்கும் பெருமை ஓர் ஊருக்கு உண்டு. அதுதான் வட ஆற்காடு ஜில்லா போளூர் தாலூக்காவிலுள்ள கேட்டவரம்பாளையம் என்ற கிராமம். ஐம்பது ஆண்டுகளாக ஸ்ரீராமநாமம் பரவசமாகப் பாடப்பட்டு அவ்வூர்க் காற்றுடன், அந்த நிலத்துடன், அந்தத் தண்ணீருடன் ஒன்றி விட்டது. இந்த வருஷம் ஸ்ரீராமநவமி பஜனை உற்சவத்துக்குப் பொன் விழா கொண்டாடப்பட்டது.

1907-ம் வருஷம் ஒரு குடிலில், சின்ன அளவில் சிலரால் தொடங்கப் பெற்றது இந்த வைபவம். ஸ்ரீ ஞானகிராமய்யர், ஸ்ரீ ராமசுவாமி அய்யர், ஸ்ரீ வெங்கடரமணய்யர், ஸ்ரீ ராமநாதய்யர், ஸ்ரீ ராமசேஷய்யர் முதலியவர்களால் சனிக்கிழமைதோறும் நடத்தப்பட்ட ராம பஜனை நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, இன்று பொன்விழா மகோற்சவம் கொண்டாடும் அளவுக்கு வந்து விட்டது.

ஸ்ரீ ரங்கய்யங்கார், 'ஐயங்கார் சுவாமிகள்' என்று அழைக்கப்பட்ட யோகி, மற்றும் பெரியோர்கள் பஜனை பத்ததி வகுத்து, நின்றுகொண்டே பகவத் பஜனை செய்வது என்ற சம்பிரதாயத்தைத் தொடங்கினார்கள். அன்று முதல் இன்று வரை ஒவ்வொரு வருஷமும் கோலாகலமாக நடந்து வருகிறது.

விடியற்காலை ''ஹரே ராம ஹரே ராம'' என்று சொல்லிக்கொண்டு சிலர் வீதி வலம் வருவார்கள். அதன் பின் உஞ்ச விருத்தி பஜனை, பூஜைகள், பிற்பகலில் சங்கீதக் கச்சேரிகள், புண்ணிய சிரவண பிரவசனங்கள். இரவு மீண்டும் தொடங்கும் பகவத்பஜனை, ஒவ்வொரு நாளும் விடியவிடிய நடந்தது. திருவனந்தபுரத்திலிருந்து வந்திருந்த ஸ்ரீ ஜனார்த்தனபிள்ளை அவர்களின் கம்ப ராமாயண உபன்யாசம் அரிய இலக்கிய விருந்தாக அமைந்தது. திருக்கோயிலூர் ஸ்ரீ வெங்கட சுப்பய்யர் அளித்த அமுது ஆன்மிக ஒளியைப் படரச் செய்ய வல்லது. செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யரின் ஷிஷ்யர்களான ஸ்ரீ நாராயணஸ்வாமி, ஸ்ரீகேதாரநாதன், மற்றும் பல சங்கீத வித்வான்கள் விதுஷிகள் அளித்த இசை விருந்து கொலுவீற்றிருந்த ஸ்ரீராமனுக்கேற்ற அரிய அநுபவம்.

''செவிக்குணவில்லாத போது சிறிது வயிற்றுக்கு மீயப்படும்'' என்பது வள்ளுவர் கூற்று. இசை விருந்துக்கிடையே ராம சமாராதனையும் சிறப்பாக நடந்து வந்தது. வெளியூரிலிருந்து வந்த பஜனை கோஷ்டியார் ஆனந்த நிலையில் மெய்ம்மறக்க ராம பஜனை செய்த அழகைக் கண்ட கண்கள் தனிப் பெருமை பெற்றவையாகும். ஸ்ரீ நாட் அண்ணாஜி ராவ் அவர்களின் கண்டத்திலிருந்து எழுந்த அமுத கானம் உத்ஸவத்தை மகோத்ஸவமாக ஆக்க முயன்று வென்றது.

இந்த வைபவத்திலேயே ஒரு குட்டி வைபவம் கொண்டாடப் பட்டது. இந்த ஊரில் பஜனை ஆரம்பித்தது முதல் அதில் லயித்து ஈடுபட்டு ஸ்ரீராம கைங்கர்யமே தம் வாழ்வின் இலக்காக வைத்து வாழ்ந்து வரும் பெரியார் ஸ்ரீரங்கநாதய்யர் அவர்கள். அவரிடத்தில் அன்பு பூண்ட சிலர் இந்தப் பொன் விழா சந்தர்ப்பத்திலே அவருக்கு மிகவும் பிடித்தமான ஸ்ரீ ராமன் சந்நிதியில் திவ்விய நாம கோஷத்தின் மத்தியில் அவருக்குப் பொன்னாடை போர்த்துக் களித்தனர்.

இந்தச் சந்தர்ப்பத்தில் அந்த ஊருக்குச் சென்றவர்கள் ஒரு முக்கியமான உண்மையை உணர்ந்திருப்பார்கள். அங்கு கேவலம் ஒரு கிராமத்தை அவர்கள் கண்டிருக்க மாட்டார்கள். மனிதர்கள் கூத்தாடி வழிபடுவதைக் கண்டிருக்க முடியாது. புண்ணிய ஸ்பரிசம் பெற்ற மலைகள் சூழ்ந்த சித்திரகூடமே அங்கு விரிந்தது. ஸ்ரீ பட்டாபிராமன் கொலுவீற்று ஆட்சி புரியும் அயோத்திமா நகர் காட்சி அளித்தது. ராம்தாஸ், கபீர், மீரா, ஆழ்வார்கள், தாயுமானவர் மெய்ம்மறந்த பூமி காணப்பட்டது. ஸ்ரீ கிருஷ்ண பகவான் திருவிளையாடல் புரிந்த பிருந்தாவனம் தரிசனம் தந்தது.

கேட்டவரம்பாளையம் என்று பெயரிட்ட பெரியோர்களுக்குப் பெருமை அளிக்கும் வகையில் வரம் பெற்ற பாளையம் வேறு எங்கும் உளதோ?



ஸ்ரீ ரங்கநாதய்யர்

# வருமானக் குறைவை



## பழைய லாரிகளுக்கு டி.வி.எஸ். சர்விஸ் புத்துயிரளிக்கிறது

# விலக்க டி. வி. எஸ். பணி

பஸ் அல்லது லாரி ஓட ஓட உருப்புகள் தேய்ந்து நலிந்துவிடும். உடனடியாக புதிய உருப்புகள் வாங்க வேண்டிய அவசியமில்லை. தேய்மானத்தை உரிய இயந்திர சாதனங்கள் மூலம் கண்டு பிடித்து வேண்டியன செய்து, நாங்கள் புதுப்பிக்கிறோம். உடைந்த உருப்புகளைக்கூட சீர்செய்து கூடியமட்டும் உருவாக்குகிறோம். புதுப்பிக்கப் பட்ட பாகங்கள் புத்தம் புதியன போலவே உழைக்கும். இத்தேர்ச்சிக்கு அடிப்படையாக இருப்பவை 46 வருட அநுபவமும், தொழிலில் நாங்கள் கையாளும் முன்னேற்ற முறைகளுமே. பஸ், லாரி ஓடாமலிருந்தால் வருமானம் குறையும். அக்குறைவை நிச்சயம் தவிர்க்கும் டி. வி. எஸ்.



கிராங்க் ஷாப்ட் புதுப்பிக்கும் இயந்திரம்



கோணலுள்ள கிராங்க் ஷாப்டை சீர்படுத்தும் இயந்திரம்

## டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிட்.

மதுரை - திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர்




## சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிட்.

மதராஸ்

TVS/209 a



# தாகம் தீர்ந்தது

துறைவன்

காவேரிப்பாளையத்தின் முடிசூடாத சக்கரவர்த்தி முனியப்பக் காடுவெட்டியாருக்கு மீசை துடித்தது. "ஆகா! ஒரு பல்லுப்போன கிழவிக்கு என்ன நெஞ்சழுத்தம் பார்த்தாயா?" என்ற பாவனையில் பற்களை நறநற வென்று கடித்தார்.

காடுவெட்டியாரின் வேலைக்காரன் வீரப்பன் அருகில் வந்தான்.

"ஏ பாட்டியம்மா! எழுந்திரிச்சுப் போகிறியா, இல்லே, கையைப் பிடிச்சு இழுத்து வெளியிலே கொண்டு விட்டுடுவேன்" என்று பயங் காட்டினான்.

கிழவி தலையை நிமிர்த்தி வீரப்பனை ஓரக் கண்ணால் ஒரு பார்வை பார்த்தாள். நரம்பெடுத்துப் போன அவள் கை, பக்கத்தில் சாத்தி வைத்திருந்த தடிக்கம்பை இறுகப் பற்றியது. "வெள்ளைச்சி மகன் வீரப்பன் தானே நீ! என்னைப் பார்த்து இன்னொரு தடவை 'போ'ன்னு சொன்னியோ, பார்த்துக்கோ. இந்தத் தடிக்கம்பாலே விளாசிப் பிடுவேன் விளாசி! முனியப்பன் என் சொந்தக்காரன். இந்த வீட்டு வாசற்படியை மிதிக்காதேன்னு அவன் சொன்னால் போயிட்டுப் போறேன். நீ என்னடா வக்காலத்து?"

எழுபது வயதுக் கிழவி கைத்தடியைச் சுழற்றிக்கொண்டு இந்தப் போடு போட்டதும், வீரப்பன் மிரண்டு பதுங்கி விட்டான்.

இதைப் பார்த்ததுமே காடுவெட்டியாரின் கோபம் பறந்து விட்டது. மீசை குலுங்கக் கடகட வென்று சிரிக்க ஆரம்பித்து விட்டார்.

"பாட்டியம்மா! போயிட்டு வாங்க. ஒங்க பேரன் சிங்காரத்துக்குப் பொண்ணு கிடையாது. இந்த ஊரிலே? நாலு பேரு மதிக்கிற மாதிரி, கையிலே இரண்டு காசு சேர்த்துட்டான்னு, நம்ம வெச்சுமியை அவனுக்குக் கண்ணாலம் பண்ணிக் கொடுத்திட்டுப் போறேன். ஆனால், அவன் என்னடான்னு பெரிய சண்டைக் கோழியாயிருக்கிறான். ஊரெல்லாம் அவனைப் பார்த்தால் பாம்பைக் கண்ட மாதிரி பயந்து சாகுது. இப்படியிருக்கிறப்ப, நீங்க வந்து 'வெச்சுமியைக் கட்டிக்குடு'ன்னு கேட்கிறது நல்லாயிருக்குதா?" என்று கிழவியிடம் சமாதானமாகப் பேசினார் முனியப்பர்.

அதைக் கேட்டுக் கிழவிக்குச் சந்தோஷம் உண்டாகி விட்டது.

"முனியப்பா! இங்கே பாரு, சிங்காரத்தை ஊர்க்காரனுவ என்ன சொன்னாலும் சொல்லி விட்டுப் போவட்டும். அவன் தங்கமான புள்ளை. தாய் தகப்பன் இல்லாத அனாதை. என்னமோ, படாத பாடு பட்டு, இத்தனை வருசம் வளர்த்துட்டேன். அவனுக்கு உன் பொண்களிலே ஒன்னைக் கண்ணாலம் பண்ணி வைச்சு, அவனை ஆளாக்கி விடறது, உன் பொறுப்பு. அவ்வளவுதான் நான் சொல்லுவேன். அந்தக் காலத்திலே, சிங்காரத்தோட அப்பன் ஒனக்கு உயிருக்கு உயிரா இருந்தான். அதை மட்டும் மறந்துடாதே."

இப்படிச் சொல்லிக் கொண்டே வேலாயிக் கிழவி தடிக்கம்பை ஊன்றிக் கொண்டு புறப்பட்டு விட்டாள்.

காவேரிப்பாளையம் என்னும் குட்டி சாம்ராஜ்யத்தில், காடுவெட்டியார் வைத்தது தான் சட்டம். அந்த ஊரிலுள்ள நூறு வீட்டுக்காரர்களும், காடு வெட்டியாரின் ஆணைக்கு அடங்கி மிகவும் சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள். ஊரில் நல்லது, கெட்டது எதுவானாலும் முனியப்பரின் தீர்ப்பே முடிவானது! ஆனால் கடந்த ஒரு வருஷமாகக் காடுவெட்டியாரின் ஆட்சிக்கு இரண்டொரு இடையூறுகள் தலைகாட்ட ஆரம்பித்திருந்தன. வேலாயிக் கிழவியின் பேரன் சிங்காரம் ஊர் வழக்குகள் சிலவற்றைத் தானே "பைசல்" பண்ணி விட்டதாக முனியப்பருக்குத் தகவல் வந்தது. சிங்காரம் என்னவோ நியாயத்தை ஒட்டித்தான் "தண்டனை" வழங்கினான். இருந்தாலும், வழக்கு தம்முடைய 'தர்பாருக்கு' வராமலேயே முடிந்து போவதா என்று ஆத்திரப்பட்டார் முனியப்பர். ஜாடை மாடையாகச் சொல்லியும், சிங்காரம் கேட்கிற வழியாகக் காணோம்! ஊரில் மாதத்துக்குநாலு வழக்குக்கூட வரவில்லை. சிங்காரத்தின் தடிக்கம்புக்கு அஞ்சி, வம்பு தும்புகள்

'' கப்சிப் ''[?]பென்று '' ஒடுங்கி விட்டன. சிங்காரம், உயிருக்குயிரான கூட்டாளியின் மகன் ஆயிற்றே என்று நினைத்து ஆத்திரத்தை அடக்கிக் கொண்டார் காடுவெட்டியார். இந்தச் சந்தர்ப்பத்தில், சிங்காரத்துக்குப் பெண் கேட்கும்படி ஊரில் யாரோ சில விஷமக்காரர்கள் வேலாயிக் கிழவியைத் தூண்டி விட்டிருக்கிறார்கள் என்று தோன்றியது. '' இந்தப் பொறுமைக்காரப் பயல்களுக்குத் தகுந்த பாடம் கற்பிக்க வேண்டும்'' என்று முடிவு செய்தார் முனியப்பர்.

அடுத்த மாதமே, காடுவெட்டியாரின் மூத்த மகள் லட்சுமிக்குக் கல்யாணம் நடந்தேறியது. மாப்பிள்ளைக்கு அசலூர். அதாவது பத்து மைலுக் கப்பாலிருந்த காட்டாங்குடி. காவேரிப் பாளையத்து மக்கள் உள்ளங் குமுறினார்கள். தலைமுறை தலைமுறையாகக் காப்பாற்றி வந்த வழக்கத்தை, இந்த முனியப்பர் தகர்த்தெறிந்து விட்டாரே என்று கொதிப்படைந்தார்கள். காடு கழனிகளிலும் வயல் வரப்புகளிலும் கிணற்றுத் துறைகளிலும் காடுவெட்டியார் ''ஊரை'' அவமானப்படுத்தி விட்டார் என்பதாகப் பேச்சு வளர்ந்தது. காவேரிப் பாளையத்தில் பிறந்த ஒரு பெண் பிள்ளை. ஊர் விட்டு ஊர் போய் வாழ்க்கைப் படுவதா. இதைவிட அந்தப் பெண்ணைக் கிணற்றிலோ, குளத்திலோ தள்ளிவிடலாமே என்று பெண்கள் இடித்துக் காட்டினார்கள். ''இந்த வருஷம் எங்கே மழை பெய்யப் போகிறது? காவேரிப்பாளையம் இனிமேல் அதோகதிதான்'' என்று சில வயதான குடியானவர்கள் நம்பிக்கை இழந்தார்கள்.

'' கசமுச''ப் பேச்சு, இரண்டே நாட்களில் பகிரங்கக் கலகமாகத் தலையெடுத்தது.

''என்னடா சேதி வீரப்பா?'' என்று கேட்டார் காடுவெட்டியார்.

'' எசமான்! காலம் கெட்டுப் போச்சுங்க. ஊர்க்காரனுங்களுக்குத் திமிரு ஏறிப் போச்சுங்க. மாப்பிள்ளையும் பொண்ணும் இனிமேல் இந்த ஊருக்குள்ளே காலெடுத்து வைக்கிறதுக்குச் சம்மதிக்க மாட்டானுங்களாம்.—பேசிக்கிறானுங்க.''

'' எல்லாம் அந்தச் சிங்காரம் பயல் வேலையாகத்தான் இருக்கும்.''

''ஆமாங்க. எல்லாத்தையும் ஏவி விட்டு அவன் எங்கிட்டோ ஒளிஞ்சுக்கிட்டான் போலிருக்குது.''

''சரி, வீரப்பா! நீ நம்ம ஆளுகளை அழைச்சுக்கிட்டுப் போ. வில்லு வண்டியிலே நாளை மறுநாள் மாப்பிள்ளை - பொண்ணு இங்கே வரப் போகிறாங்க. எந்தப் பயலாவது தலையைக் காட்டினானே, சீவித் தள்ளிப்பிடுங்க; அப்புறம் நான் பார்த்துக்கிறேன்'' என்றார் காடுவெட்டியார்.

* * *

**வி**டிய ஒரு நாழிகை. வில் வண்டி காவேரிப் பாளையத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. காடுவெட்டியாரின் மூத்த மகள் 'லெக்ஷ்மியும்' அவள் புது மாப்பிள்ளையும் வண்டிக்குள் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வருகிறார்கள். வில் வண்டியின் முன்னால் நாலு பேர்கள், பின்னால் நாலு பேர்கள் வீரப்பனின் தலைமையில் காவலாக வந்து கொண்டிருந்தார்கள். இருளும் ஒளியும் சிலம்பு விசுகிற நேரம். தூரத்தில் சேவல் ஒன்று தூக்கக் கலக்கத்தில் கூவியது.

''வருதுடோய் வில்லு வண்டி'' என்று எங்கிருந்தோ ஒரு பயங்கரச் சத்தம் கேட்டது.

அவ்வளவுதான். திமுதிமுவென்று இருபது இருபத்தைந்து பேர் தடிக்கம்பு, வேல்-கம்பு சகிதம், சாலை மரங்களுக்குப் பின்னாலிருந்து ஓடி வந்தார்கள். தடிக் கம்புகள் சடார் சடாரென்று மோதிக் கொண்டன. ஒரு அடி, வில்லு வண்டி ஓட்டி வந்தவன் மண்டையில் விழுந்தது. ''ஐயோ, சாமி! அடிக்காதிங்க'' என்று கூவிக் கொண்டே விழுந்தடித்து ஓடிப் போனான் வண்டிக்காரன். வீரப்பன் குரலையே காணோம். அடித்து விழத்தட்டி விட்டார்கள். வண்டிக்குள்ளிருந்த ''லெக்ஷ்மி''க்குக் கூப்பாடு போடக்கூட நாக்கு எழவில்லை. அவள் புருஷனுக்கோ ஒன்றும் புரியவில்லை. வண்டியை விட்டு இறங்கவா வேண்டாமா என்ற திகைப்பில் அவன் உட்கார்ந்திருந்தான்.

சடக்கென்று யாரோ, வண்டியின் முன் புறம் வந்து ஏறி மாடுகளைத் தட்டிவிட்டான். சாட்டையடி பட்டு, வேகமாகப் பறக்க ஆரம்பித்தன காளைகள்.

'' லெக்ஷ்மி! பயப்படாதே, நான்தான்'' என்றான் அந்த ஆள் திரும்பிப் பாராமலேயே.

வில்வண்டி காவேரிப் பாளையத்தை நோக்கி வேகமாகப் போவதைப்பார்த்து விட்டார்கள் கலகக்காரர்கள். ''டேய், நிறுத்துடா வண்டியை'' என்று கத்திக் கொண்டே பின்



னால் ஓடி வந்தார்கள். இதற்குள் ஊர்ப்பக்கத்திலிருந்து காடுவெட்டியாரின் ஆட்கள் தடிக்கம்புகளோடு ஓடி வரவே, வண்டிக்குப் பின்னால் துரத்திக் கொண்டு வந்தவர்கள் சிதறிப் பதுங்கி விட்டார்கள்.

வீட்டு முற்றத்தில் காடுவெட்டியார் கையைப் பிசைந்து கொண்டு அங்குமிங்கும் நடந்து கொண்டிருந்தார். வாசலில் வில் வண்டி போய் ''ஜலக்''கென்று நிற்கவும், பொழுது விடியவும் சரியாக இருந்தது.

சிங்காரம் வண்டியிலிருந்து குதித்து, முனியப்பரை ஒரு பார்வை பார்த்தான்.

''யாரு நீயா?'' என்றார் காடுவெட்டியார்.

''ஆமாம். வீரப்பனைத் தூக்கிக்கிட்டு வர ஆளை அனுப்பிவையுங்க. அவனுக்கு மண்டையிலே சரியான அடி'' என்று சொல்லிவிட்டு மறைந்தான் சிங்காரம்.

''லெச்சுமி''யும் அவள் புருஷனும் 'தப்பினோம் பிழைத்தோம்' என்று வண்டியை விட்டுக் கீழே இறங்கினார்கள்.

மறுநாளே, காவேரிப்பாளையம் அம்மன் கோயில் சாவடியில் பஞ்சாயத்து கூடியது. நாட்டாண்மை முனியப்பக் காடுவெட்டியார், ஊர் மக்களின் ஒன்று கூடிய அபிப்பிராயத்துக்கு முன்னால் குரலை உயர்த்திப் பேச அஞ்சினார். அவர் பேச ஆரம்பித்தால், குறுக்குக் கேள்விகள் குமுறி எழுந்தன.

''அசலூர்க்காரனுக்கு, இந்த ஊருப் பெண்ணைக் கொடுத்தீரே, என்ன காரணம்?'' என்றார் ஒரு கிழவர். கூட்டத்திலிருந்த ஆத்திரக் கொதிப்பைப் பார்த்து, முனியப்பர் புதிய தந்திரத்தைக் கையாளத் தீர்மானித்தார்.

''இந்த ஊரிலே ஒரு நல்ல கிணறு உண்டா? என் மகளைக் கொஞ்சம் சொகுசா வளர்த்துப்புட்டேன். தலையிலே ஒரு குடம், இடுப்பிலே ஒரு குடம் தூக்கிக்கிட்டு, ஒரு மைல் போய்க் குடி தண்ணீர் கொண்டுவர வேண்டியிருக்குது. அதுதான் எம்பொண்ணுக்குத் தண்ணிச் சௌகரியம் உள்ள காட்டாங்குடியிலே மாப்பிள்ளை பார்த்தேன். நம்ம ஊர்ப்பொண்டுங்க படுகிற கஷ்டம் வெளியிலே சொன்னால், வெட்கக்கேடு. அவங்க வாயை மூடிக்கிட்டிருக்கிறதுனாலே நாம்ப, குடி தண்ணீர் விஷயமா ஒன்றுஞ் செய்யாமல், வானத்தை அண்ணாந்து பார்த்துக்கிட்டிருக்கிறோம்'' என்று ஜில்லாக் கோர்ட்டு வக்கீல் மாதிரி ஒரு போடு போட்டார் முனியப்பன்.

சாவடிக்கு அப்பால், மரத்தடியில் கூடியிருந்த ஊர்ப் பெண்களின் கும்பலில் கலகல என்று பேச்சுக் குரல் எழுந்தது. ''காடுவெட்டியாரு செய்ததிலே என்ன தப்பு?'' என்ற உணர்ச்சி, பெண்களின் ஈரமுள்ள நெஞ்சில் இளகியோட ஆரம்பித்தது. பஞ்சாயத்துப் பெருந்தலைகள் கூட ஒன்றுமே பதில் பேச முடியவில்லை.

காடுவெட்டியார் தொடர்ந்து பேசினார்:

''அம்மன் கோயில் கிணறு, மூணு வருஷமாகக் காய்ஞ்சு கிடக்குது. அதை ஆழமாகத் தோண்டினால், நிச்சயம் தண்ணிக்கு வழி பிறக்கும். கூலி கொடுத்துக் கூப்பிட்டாலும் கிணறு வெட்ட ஒரு ஆள்கூட வரமாட்டேங்கிறாங்க இந்த ஊரிலே. ஆயிரம் அடி போனாலும், ஊத்து அகப்படாதுன்னு எடுத்தெறிஞ்சு பேசுகிறாங்க. இவங்களை வைச்சுக்கிட்டு, இந்தக் காவேரிப்பாளையத்தை எங்கே முன்னுக்குக் கொண்டு வர முடியும்?''

''அம்மன் கோயில் கிணற்றுக்கு ஒரு வழி செய்ய வேண்டியதுதான்'' என்று இழுத்தாற் போல் சொன்னார் ஊர்க்கிழவர். கூட்டம் மெதுவாக நழுவ ஆரம்பித்தது.

அன்றிரவு சிங்காரம் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, முற்றத்தில் கிடந்த கயிற்றுக் கட்டிலில் படுத்தபடி வானத்து நக்ஷத்திரங்களை எண்ணிக் கொண்டிருந்தான்.

''தம்பி, சிங்காரம்!'' என்று குரல் கொடுத்தார் காடுவெட்டியார்.

சடாரென்று எழுந்தான் சிங்காரம்.

''சும்மா, உட்காரு தம்பி'' என்று சொல்லிவிட்டுத் தாமும் கட்டிலில் அமர்ந்தார்.

''நீ சரியான சமயத்திலே போய் அந்தப் பயலுகளை அடிச்சு விரட்டி வண்டியை ஓட்டி வந்திட்டே. இல்லாட்டி, என் மானம் மரியாதை எல்லாம் ஒழிஞ்சு போயிருக்கும்.''

சிங்காரம் ஒன்றும் பேசவில்லை.

''தம்பி! உன் தகப்பனாரும் நானும் உயிருக்கு உயிரா இருந்தோம். அதை நினைச்சு...''

''லெச்சுமியைக் காட்டாங் குடியானுக்குக் கண்ணாலம்பண்ணிவச்சிங்களாங்காட்டியும்?''

காடுவெட்டியார் சொன்னார்.

''என் ரெண்டாவது பொண்ணு மங்கம்மாளை உனக்குத்தான் கொடுக்கிறதுன்னு முடிவு பண்ணிட்டேன். என் வீட்டுக்காரிகூட அப்படித்தான் சொல்லுகிறாள்.''

சிங்காரம் கட்டிலை விட்டு எழுந்திருந்தான். ''காடுவெட்டியாரே! மங்கம்மாளை எனக்குக் கண்ணாலம் கட்டிக் கொடுத்தால், அவளும் கஷ்டப்படத்தான் வேண்டிவரும். தலையிலே

# முதல் வெற்றி

பெற்றோர் தன் குழந்தை பரீட்சையில் தேர்ச்சி அடைந்தால் மனம் பூரிப்படைகிறார். ஏனென்றால் இந்தத் தேர்ச்சியால்தான் ஒரு இளம் அறிவை ஊக்கப்படுத்தியவர் ஆகிறார்.

நீங்கள் அவனுடைய சௌகரியத்தை எப்பொழுதும் கவனிக்க முடியுமா?'' ''முழு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ்'' உங்கள் பொறுப்பைப் பகிர்ந்து கொள்ளட்டும். உங்களுடைய தேவைக்கு ஏற்ற பல ரக பாலிஸிகள் இருக்கின்றன.

முழு வாழ்க்கைப் பாலிஸியை எடுத்துக் கொள்ளுங்கள். இது இன்ஷ்யூரன்ஸில் மிகவும் சிக்கனமான திட்டம். உதாரணமாக இன்று உங்களுக்கு வயது 28 பூர்த்தி அடைந்தால் நீங்கள் மாதம் ரூ. 16 மட்டும் தவணையாகச் செலுத்தி ரூ. 10000/- பெறுமான பாலிஸிதாரராக ஆகலாம். நீங்கள் எப்பொழுது இறக்க நேர்ந்தாலும் முழுத் தொகையையும் உங்கள் வாரிசுக்கு உடனடியாகக் கொடுக்கப்படும்.



உங்களுடைய மாதச் சேமிப்பு ரூ. 5 ஆனாலும் 50 ஆனாலும் அதை ஒரு ''முழு வாழ்க்கை இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி''யில் முதலீடு செய்யவும். இது உங்கள் அன்புக்குரியவர்களுக்கு குறைந்த தவணையில் நீங்கள் அளிக்கும் பாதுகாப்பு.





## லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

ஸெண்ட்ரல் ஆபீஸ், ''ஜீவன் கேந்த்ர'' ஜம்ஷெட்ஜி டாடா ரோட், பம்பாய்-1.

Tamil

ஒரு குடம், இடுப்பிலே ஒரு குடம் தூக்கிக்கிட்டு ஒரு மைல் போய் நல்ல தண்ணி கொண்டு வர முடியுமா அவளாலே? சொகுசா வளர்ந்த பொண்ணு. அதனுலே அவளையும் நீங்க, குழாய்த் தண்ணீர் இருக்கிற ஊரிலே, கட்டிக் கொடுக்கிறதுதான் நல்லது.''

இதைச் சொல்லும் பொழுது சிங்காரத்தின் குரல் வைராக்கியமாக ஒலித்தது.

''அதெல்லாம் விளையாட்டுக்குச் சொன்னது தம்பி. நீ மனசிலே ஒண்ணும் எண்ணிக்கிடாதே'' என்ருர் காடுவெட்டியார்.

சிங்காரம் காடுவெட்டியாரின் முகத்தை நேருக்கு நேராகப் பார்த்தான்.

''காடுவெட்டியாரே! கோயிலிலே அம்மன் குடியிருக்கிறது நிஜமின்னு, அந்தக் கிணற்றுக்கு உயிர் வந்துதான் ஆகணும். ஊத்து அகப்பட்டுத்தான் ஆகணும்'' என்ருன்.

மறுநாள் காவேரிப் பாளையம் கிராமத்தில் ஒரு மகத்தான புரட்சி நடைபெற்றது. அம்மன் கோயில் கிணற்றுக்குள் சிங்காரமும் அவன் கூட்டாளிகளும் கூடை, மண் வெட்டி, கடப்பாரைகளோடு இறங்கினுர்கள். சிறிது நேரத்தில், கூடை கூடையாக மண்ணும் கல்லும் கிணற்றை விட்டு வெளிவரத் தொடங்கின. ஊர்க்காரர்களில் சிலரும் இந்த வேலையில் உற்சாகத்தோடு ஈடுபட்டார்கள்.

காடுவெட்டியாருக்குச் செய்தி தெரிந்தது. பஞ்சாயத்து வழக்கில் அவர் ஏதோ சொல்லப் போக, அது கிணறு வெட்டுவதில் வந்து முடிந்து விட்டது. ஆனல் சிங்காரத்தின் ரோஷம் அவருக்குப் பெருமையாக இருந்தது. அவன் ஒருத்தன்தான் இந்த ஊருக்கு மனுஷன் என்று எண்ணினுர்.

அம்மன், கோயிலில் உயிரோடுதான் இருந்தாள். இல்லாவிட்டால், வேலை ஆரம்பித்து மூன்றே நாட்களில், கிணற்றில் ஊற்றுக் கண்டிருக்குமா? சொட்டச் சொட்ட நனைந்து, சிங்காரமும் அவன் தோழர்களும் கிணற்றிலிருந்து வெளியேறினுர்கள். அன்று அம்மனுக்கு விசேஷமாகக் கொத்துக் கடலைச் சுண்டல் படைக்க ஏற்பாடாயிற்று.

மறுநாளே, அதிகாலையில் காடுவெட்டியார், வேலாயிக் கிழவியின் வீடு தேடி வந்தார். சிங்காரம் வயற்காட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். அவன் நெற்றியில் அம்மன் கோயில் குங்குமம் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

காடுவெட்டியார் சொன்னுர்:

''தம்பி! மங்கம்மாளுக்கு ஒன்னைப்பத்தி ஒரே பெருமை. விடியுமுன்னே குடத்தையும் வாளியையும் தூக்கிக்கிட்டு, கோயில் கிணத்துக்குப் போகிரு, தண்ணி கொண்டு வர.''

''அவளுக்கு இந்தக் கிணறு பிடிக்காது. காடு வெட்டியாரே! சொகுசா வளர்ந்த புள்ளை. குழாய்த் தண்ணீர் இருக்கிற ஊரிலே மாப்பிள்ளை பாருங்க!'' என்ருன் சிங்காரம்.

காடுவெட்டியார் திகைத்துப் போனுர்.

''தம்பி! என்ன சொல்லுறே?''

''மங்கம்மாளைக் கட்டிக்கிட முடியாதுங்கிறேன்!'' என்று இரைந்தான் சிங்காரம்.

''என்னடா சொன்னே?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் வேலாயிக்கிழவி. அவள் கையில் பழைய தடிக்கம்பு இருந்தது.

''ஏண்டா சிங்காரம், மங்கம்மாளுக்கு என்னடா குறைச்சல்! அம்மன் கோயில் பச்சைக்கிளியாட்டம் இருக்கிரு! அவளையும் முனியப்பன் அசலூருலே கட்டிக் குடுத்திடப் போருனென்னுதானே, கிணற்றைத் தோண்ட ஆரம்பிச்சே! இப்ப என்னடா வந்திட்டுது? காடுவெட்டியாரு, ஊருக்குப் பெரிய மனுஷன். அவர் சொன்னப்புறம், நீயெல்லாம் எதிர்த்துப் பேசலாமாடா?''

''பாட்டி!'' என்று குறுக்கிட்டான் அவன்.

''வாயை மூடுடா, சின்னப் பயலே! மங்கம்மா கையைப் பிடிக்க உனக்குக் குடுத்து வைச்சிருக்கணும். ஏதாச்சும் எடுத்துப் பேசினியோ, பார்த்துக்க, இந்தத் தடிக்கம்பாலே விளாசிப்பிடுவேன் விளாசி.''

சிங்காரம் பெட்டிப் பாம்பாக அடங்கிப் போனுன். காடுவெட்டியார் கிழவியைப் பார்த்து ஆச்சரியமடைந்தார்.

கோயில் கிணற்றுத் தண்ணீரில் கொஞ்சம் மோர் கரைத்துக் கொடுத்தாள் கிழவி. காடுவெட்டியாருக்குத் தாகம் தீர்ந்தது; மனசும் குளிர்ந்தது. ''பாட்டி! நம் காவேரிப் பாளையத்துக்கு இனி ஒரு குறைச்சலுமில்லே. காவேரியம்மனே கிணற்றுக்குள் ஊற்றெடுத்து விட்டாள்'' என்ருர் முனியப்பக் காடுவெட்டியார்.

# இது அல்லவா ரயில்வே வாரம்!





















# காஸ்ட்ரால்

## ஆராய்ச்சி

# எப்பொழுதும் முன்னணியில் நிற்கிறது

★ ஸிலிண்டர் தேய்மானத்தைக் குறைப்பதில், 1935-ல் முதல் ஸ்தானம் பெற்றது.

★ இயந்திரங்களை சுத்தப்படுத்துவதற்கு ஒரு சிறந்த எண்ணெயாக 1935-ல் முதல் ஸ்தானம் அடைந்தது.

★ பெட்ரோல் சிக்கனம், மிக எளிதான இயக்கம், துரிதமான ஓட்டம் ஆகிய அனுகூலங்களைப் பெற ஒரு இலேசான எண்ணெயை அறிமுகப்படுத்தி 1938-ல் முதன்மை ஸ்தானம் பெற்றது.

★ எண்ணெய் கெட்டுப் போகாது பாதுகாக்கக்கூடிய நூதன வழிகளைக் கையாளுவதினால் 1949-ல் முதன்மை ஸ்தானம் அடைந்தது.

★ துரு பிடிக்காமலும், அமிலங்களால் இயந்திர பாகங்கள் தேய்வு ஏற்படாமலும், பாதுகாக்கக்கூடிய ஹைபாய்ட் ஆக்ஸில் எண்ணெயை அறிமுகப்படுத்தியதால் 1951-ல் முதன்மை யடைந்தது.

### இப்பொழுது

"ஸிங்க் டையால்கில்டி தியோபாஸ்பேட்" மிகச் சிறந்த முறையில் "காம்" மற்றும் "டாபெட்" உறுப்புகள் தேயாது பாதுகாக்கிறது என்று யு. எஸ். ஏ. கோ-ஆர்டினேடிங் ரிசர்ச் கவுன்ஸிலின் 1957ம் ஆண்டு அறிக்கை தெளிவாக கூறுகிறது. காஸ்ட்ராலில் இந்த அடிடிவ் 1949ம் ஆண்டிலிருந்தே சேர்க்கப்பட்டு இருக்கிறது.

★ ஈடு இணையற்றது! 1958ல் உலகிலேயே மிகச் சிறந்த நவீன மோட்டார் எண்ணெய்

**காஸ்ட்ரால் என்ற பெயரை**

**குறித்தே எப்பொழுதும் கேளுங்கள்**

**இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வெற்றிகரமாக இயங்க சக்தியை பவித்து வருகிறது!**

1-50

# பாவை விளக்கு

அத்தியாயம் 35

## புரிந்து கொண்ட உண்மை என்ன?

உமாவின் வீட்டை விட்டுத் தணிகாசலம் வெளியேறுவதற்கு முன்பு நடந்த சில முக்கியமான நிகழ்ச்சிகளை இங்கு குறிப்பிட வேண்டும் :

முதலாவதாக, குற்றாலத்திலிருந்து மாணிக்கவாசகம் கொடுத்து அனுப்பிய நூல்களில் இரண்டை அவன் மொழி பெயர்த்து விட்டான். பெரியவரின் மேற்பார்வைக்குப் பின் அவை அச்சாகி வெளியில் வந்தன. தணிகாசலத்தின் உழைப்பைக் கண்ட ஒரு பதிப்பகத்தார் அவனை நம்பிப் பணம் போடத் துணிந்தனர். புத்தகங்களைப் படித்து விட்டு மாணிக்கவாசகம் அவனுக்கு வாழ்த்துக் கூறியிருந்தார். அடுத்த சாரல் காலத்துக்குக் கட்டாயம் குடும்பத்துடன் அங்குவரச் சொல்லி அழைப்பும் வந்தது. கண்டிப்பான, மறுக்க முடியாத அழைப்பு அது.

அடுத்தாற்போல், கண்ணபுரத்தில் சுப்பையாவின் மனைவி சிவகாமி அண்ணி தவறிப் போய் விட்டாள். அவளுடைய குடும்பத்தின் சுமையும், பையனின் சுமையும் இப்போது தேவகிக்கு. தணிகாசலம் தனக்கு இருந்த வேலை மிகுதியால் அவர்களுக்கு ஆறுதல் கடிதம் எழுதி அனுப்பினான். தேவகியின் கடிதங்களும் எப்போதாவது அவனுக்கு வருவது உண்டு.

ஒருவேளை, பேராசிரியர் சென்னையில் நடந்த விஷயங்களைக் குற்றாலத்துக்கு எழுதியிருப்பாரோ என்று நினைத்தான். மாணிக்கவாசகமும் அவரும் நெருங்கிய நண்பர்கள். தனக்கு அவர் யோசனை சொல்லக் கூடும் என்பதற்காகவாவது, மாணிக்கவாசகத்துக்குத் தெரிவித்திருக்கலாமல்லவா? ஆனால் அப்படியிருக்காது என்று மறு யோசனையில் தன்னைத் தேற்றிக் கொண்டான். பேராசிரியர் இது போன்ற செய்திகளைக் கடிதங்களில் எழுதக்கூடியவரல்ல. தமக்கு ஒரு மனைவி இருப்பதையே அவர் நண்பரிடம் வெளியிடவில்லையே!

முதல் நாள் அவர்கள் உமாவைச் சந்தித்து வந்த ரகசியம் மறுநாளே அம்பலத்துக்கு வந்து சேர்ந்தது. குழந்தை கல்யாணியே அதை வெட்ட வெளிச்சமாக்கினாள்.

"அப்பா! அப்பா! அக்காவைப் பார்த்தேனப்பா" என்று கூத்தாடினாள் குழந்தை.

"ஆமாம்பா! நாங்க எல்லோரும் பார்த்தோம்! — அம்மாவும் பாட்டியும் உங்ககிட்ட சொல்ல வேண்டாம்னு சொன்னாங்க!" என்றான் பரமசிவம்.



"போய்விட்டு வாருங்கள்."
"நீங்கள் வராமலா?"
"நான் எதற்கு?"

"உங்களைப் பார்க்கத்தான் அவள் வருகிறாள். இங்கே வரக் கூடாதென்று அப்பாவின் கடுமையான உத்தரவாம்."

"அங்கு மாத்திரம் போய்ப் பார்க்கலாமா?" என்றான்.

"பிறகு உங்கள் இஷ்டம். எங்களை அழைத்துக்கிட்டு ஒரு இடத்துக்குப் போவதென்றாலே உங்களுக்குப் பிடிக்காது."

ஞாயிற்றுக்கிழமை அதிகாலையில், உமா அவர்களுக்காகக் கார் புறப்படும் இடத்தில் காத்துக் கொண்டு நின்றாள்.

குழந்தைகள் இருவரையும் ஆளுக்கொரு கையில் வாரி அணைத்துக் கொண்டு, அவர்களைச் சாட்சி சொல்லச் சொல்லித் தூண்டி விட்டான் தணிகாசலம். மாமியும் மருமகளும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு சிரித்தனர். "நானும் வந்திருந்தேன்; உங்களைப் பார்த்தேன்!" என்று தானும் அவர்களோடு சேர்ந்து சிரித்தான்.

"அவள் வீட்டுக்குத்தானே போகக் கூடாதென்றீர்கள்?" என்று சாமர்த்தியம் பேசினாள் கௌரி.

"போனது சரி. உமா என்ன சொன்னாள்?" என்று கேட்டான் தணிகாசலம்.

"சொல்வதென்ன? அழுதாள்; ஒரே அழுகை மயம். உங்களைப் பார்க்கா விட்டால் அவளுக்குத் தலை வெடித்துப் போகுமாம். கல்யாணியை அவளே வைத்துக் கொள்ளுகிறாளாம்."

"அப்புறம்?"

"ஞாயிற்றுக் கிழமை எல்லோரும் மகாபலிபுரத்துக்குப் போகலாமா என்று கேட்டாள். அத்தையும் சரி என்றார்கள். தன் சிநேகிதிகளோடு போவதாய் வீட்டில் சொல்லி விட்டு, நம்மோடு அவள் வரப் போகிறாள்."



ஏக்கம், வேதனை, சோர்வு, பயம் இத்தனையும் கலந்த அவள் கண்கள் தணிகாசலத்தை நெடுநேரம் நோக்கின. எல்லோரும் மோட்டாரில் ஏறிக் கொண்டார்கள். கல்யாணியை அன்று முழுவதும் தன்னிடமே வைத்துக் கொண்டாள் உமா. வழியில் அவளிடம்

பேச்சுக் கொடுத்துப் பார்த்தான் தணிகாசலம். கௌரியும் அவளை விடவில்லை.

"என்ன உமா, பேசாமடந்தையா நீ?"—கௌரி கேட்டாள்.

"இங்கே உள்ள மற்றப் பிரயாணிகளுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? திரும்பி வந்தவுடன் நீங்கள் ஒருபக்கம் போகப் போகிறீர்கள்; நான் ஒரு பக்கம் போகவேண்டும். இதுதானே நடக்கப் போகிறது? இந்த ஒருநாள் வாழ்வுக்குப் பேச்சு எதற்கு?"

"உமா...!"

"நான் என்ன தப்புச் செய்தேன், அப்படி நீங்கள் ஒரேநாளில்வீட்டைக்காலி செய்வதற்கு?எல்லாம்முன்னேற்பாடுசெய்யாமல் உங்களுக்குவீடுகிடைக்குமா?"

"காரை விட்டு இறங்கிய பிறகு பேசலாம்" என்று அவளைக் கையமர்த்தினான் தணிகாசலம்.

விஜய்

மாமல்லபுரத்தில் நுழைந்தவுடன் எல்லோருமே தங்களை மறந்து, சிற்பங்களைச் சுற்றி வரத் தொடங்கினார்கள். உமாவும் தன் மனச் சுமையை அப்போதைக்கு மறந்துவிட்டாள். எங்கு திரும்பினாலும் கருங்கற் பாறைகள். பாறைகள் தோறும் கண்கவரும் சிற்பங்கள். கல் கண்ட இடங்களிலெல்லாம் தங்கள் கை வண்ணம் காட்டியிருந்தனர் சிற்பிகள்.

"தாஜ்மஹால் கூட இப்படி இல்லையே, மாமா?" என்றாள் உமா.

"அது வேறு; இது வேறு. முகலாயர்களிடம் கட்டடக் கலையழகைக் காணலாம். மனித உருவங்களையும், உயிர்ப் பிராணிகளின் உருவங்களையும் நாம் அவர்களிடம் காண முடியாது. சமயக் கோட்பாடுகளுக்குத் தக்கபடி அந்தக் காலத்தில் கலைகளுக்கு வரம்பு கட்டியிருக்கிறார்கள்."

"அதோ, அந்தக் கல் ரதங்களைப் பாருங்கள், கம்பீரமாய்ப் படுத்துக்கிடக்கும் காளை மாட்டைப் பாருங்கள்!"

அங்கே வலிவும் வனப்பும், அழகும், பொலிவும், கலையும், மணமும் கலந்து உறவாடிக் கொண்டிருந்தன.

சுற்றிப் பார்த்துக் கொண்டே வந்த தணிகாசலம், ஒரு கல்லோவியத்தின் வெளிப்புறத்தில், குடைந்து செதுக்கப் பட்டிருந்த இரு காதலர்களின் கனிவு நிறைந்த சிற்பத்தைக் கண்டவுடன் அப்படியே நின்று விட்டான். கால்கள் நகர

மறுத்தன. கண்கள் இமைய மறுத்தன. காலங் காலமாக அந்தக் காதலர்கள், தங்களது இதயத்தின் அடித்தளத்திலிருந்து எழும் இன்ப வேதனைகளைச் சொல்லில் வெளியிட முடியாமல் அப்படிக் கிறங்கி நிற்கிறார்களா? எத்தனை நாட்களுக்குத்தான் அவர்கள் இப்படி நின்றுகொண்டே இருப்பார்கள்?

அந்த உயிர்ச் சிற்பங்களை வடித்தெடுத்த சிற்பியை அப்போது தணிகாசலம் தன் நினைவுக்குக் கொண்டு வந்தான்: பாவம்! தான் பெற்ற அநுபவத்தை இந்தக் கல்லில் பொதித்து ரகசியமாய்ப் பாதுகாத்து விட்டு அவன் போயிருக்கிறான். உருவங்களின் வெளித்தோற்றம் எப்படி இருந்தால் என்ன? அந்த ஆண் உருவத்தில் சிற்பியும், பெண் உருவத்தில் அவன் காதலியும் இன்னும் சாகாமல் வாழ்கிறார்களல்லவா? கலைஞன் அதிர்ஷ்டசாலி. சாவுக்குப் பின் வாழும் தந்திரத்தைக் கற்றுக் கொண்டவன். அதிலும் எத்தனை நுணுக்கமான



உணர்ச்சிகளை அவன் வெளிப்படுத்திக் கொண்டு வாழ்கிறான்!

"பார்த்தது போதும், வாருங்கள்!" என்று அழைத்தாள் உமா.

"அவரைக் கூப்பிடாதே, உமா! அந்தக் கல்லில் ஏதாவது நார் உரித்துக் கயிறு திரிக்கப் பார்ப்பார். கதை கிடைத்தால் போதும் அவருக்கு."

"கல்லா இது? உன் மூளையில்தான் இப்போது பாறங்கல் இருக்கிறது!" என்று கௌரியைப் பலமாகத் திட்டினான் தணிகாசலம்.

ஊரின் மையத்திலேயே, ஒரு பாறையின்மீது, ஆண் குரங்கொன்று பெண் குரங்குக்குப் பேன் பார்த்துக் கொண்டிருந்தது. அந்தப் பெண் குரங்கு தன் குட்டிக்குப் பால் கொடுத்தபடியே, கணவனின் கவனிப்பில் மெய்மறந்திருந்தது. அருகில் சென்று பார்த்தான் தணிகாசலம். உயிர்க் குரங்குகளல்ல அவை. செதுக்கிய சிற்பச் சுடர்!

"உமா! இங்கே வந்து உன் அக்காவைப் பாரேன்! இதைப் பார்த்தால் உனக்குக் குற்றாலத்து ஞாபகம் வரவில்லை?"

கௌரியும் உமாவும் அவனை 'உர்'ரென்று விழித்துப் பார்த்தார்கள்.

"ஆமாம்! அக்காளுக்குத் தலை சீவி விடுவது யார்? மாமாதானே?" என்று திருப்பிக் கேட்டாள் உமா.

மத்தியானம், கடற்கரை ஓரமாக உள்ள சவுக்கத் தோப்பின் நிழலில் அவர்கள் கட்டுச் சோற்று மூட்டையை அவிழ்த்தார்கள். சாப்பிட்ட களைப் போடு வெய்யிலும் சேர்ந்துகொண்டது. எதிரில் கடற்கரையை ஒட்டியிருந்த கற்கோயிலைப் பார்த்துக் கொண்டே தணிகாசலம் ஒரு மரத்தில் சாய்ந்து உட்கார்ந்தான். குழந்தைகள் நிம்மதியாக மணலில் உறங்கினார்கள். கடற்காற்று வெய்யிலின் வெப்பத்தைக் கலைத்துக் கொண்டிருந்தது.

சூரியன் மேற்கே சாய்ந்து, மேல் வானத்தில் நழுவி விழுவது தணிகாசலத்துக்குப் பிடிக்கவில்லை. கைக் கடிகாரத்தில் விநாடி முள் சுற்றுவதைக் கண்டு அவன் வெறுப்படைந்தான். கடிகாரத்தைக் கழற்றிக் கடலுக்குள் எறிந்துவிட வேண்டுமென்று அவனுக்கு ஆத்திரம். ஆனால் கதிரவனை எப்படித் தடுத்து நிறுத்துவது?

'ஐந்து மணிக்குக் கார் புறப்படப் போகிறது. இன்னும் இரண்டு மணி நேரங்கூட இல்லை. இன்று போனால், இனி என்று உமாவைப் பார்ப்பது?'—மலை மலையாக அவளிடம் பேச வேண்டிய செய்திகள் நிறைந்திருப்பதாக அவனுக்கு ஒரு பிரமை.

தொண்டையைக் கனைத்துக்கொண்டு, "உமா!" என்று அழைத்தான் தணிகாசலம்.

உமா அவனைத் திரும்பிப் பார்த்தாள். கௌரியும் கல்யாணி அம்மாளும் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள்.

"இனிமேல் நாம் அடிக்கடி சந்தித்துப் பேச முடியாது. எங்களிடம் சொல்ல வேண்டியது ஏதாவது இருந்தால் இப்போதே சொல்லிவிடு. நீ உன் மனத்தில் எதிர்காலம் பற்றி என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய்?"

"நானும் இதைத்தான் கேட்க வேண்டுமென்றிருந்தேன்" என்றாள் கல்யாணி அம்மாள்.

உமாவின் தலை தரையை நோக்கிக் கவிழ்ந்தது. மணலில் கோலம் போடு

வதும், அழிப்பதும், திரும்பவும் போடுவதுமாக அவள் பொழுதை ஓட்டினாள்.

"கன்னி மாடத்துக்குப் போவதற்காக மதம் மாறுவதாய்ச் சொன்னாயே, அதை முடிவு செய்து விட்டாயா?"

"போவதில்லை என்று முடிவு செய்திருக்கிறேன்" என்றாள் உமா.

"வேறு என்ன செய்யப் போகிறாய்?"

"நான் செய்வதற்கு இனி என்ன இருக்கிறது?"

"உன் அப்பா என்ன சொல்கிறார்?"

"'ரவியைக் கல்யாணம் செய்து கொள்; இல்லாவிட்டால் செத்துப் போ' என்கிறார்."

கௌரி குறுக்கிட்டு உமாவின் மனத்தில் இருப்பதைத் தெரிந்து கொள்வதற்கு முயற்சி செய்தாள். கல்யாணி அம்மாளுக்கும் எல்லா விவரங்களும் தெரியும். இரண்டு பெண்களும் அவளைக் கேட்டுப் பார்த்தார்கள்.

"இப்படியே என்றைக்கும் நான் இருந்தால் இவர்களுக்கு என்ன? நான் சிரித்த முகத்துடன் இருப்பது என் அத்தைக்குப் பிடிக்கவில்லை. உங்களோடு முகம் முறித்து உங்களையும் அனுப்பி விட்டார்கள். நீங்கள் வீட்டைக் காலி செய்ததிலிருந்து எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. தினமும் குழந்தை கல்யாணி என் கனவில் வருகிறாள். பொழுது விடியாமல் இருந்தால் தேவலாம்."

பொட்டுப் பொட்டாகக் கண்ணீர்த் துளிகள் மணலில் விழுந்தன.

"அத்தை!" என்று கதறியபடியே கல்யாணி அம்மாளின் மடியில் சாய்ந்தாள் உமா. "நான் ஒருத்தி இருப்பது உங்கள் எல்லோருக்குமே கஷ்டம். இது எனக்குத் தெரியாமல் இல்லை. சீக்கிரம் நான் போய்விடுவேன். யாரும் எனக்காகக் கவலைப்பட வேண்டாம். வெகு சீக்கிரம்....வெகு சீக்கிரம்...."

"அசட்டுப் பெண்ணே! உனக்கு இப்போது என்ன குறை வந்து விட்டது? இப்படிப் பேசுகிறாய்!"

"எனக்குக் குறையே இல்லை, அத்தை! என்னை என் அப்பாவால் கூடப் புரிந்து கொள்ள முடியவில்லை. என்னை அவர்கள் விட்டுவிட்டால் போதும்."

"உன்னால் முடிந்தால் உன் அப்பாவிடம் சொல்லிவிட்டு நீ எங்கள் வீட்டுக்கு வந்துவிடு. உன்னால் யாருக்கும் பாரமில்லை. நீ வேலைக்குக் கூடப் போக வேண்டாம்."

"ஆமாம், உமா. நீ வந்து விடு" என்றாள் கௌரி.

தணிகாசலத்தை உமா ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தாள்.

"உன் அப்பாவுக்குத் தடையில்லை என்றால் எனக்கும் சம்மதந்தான். ஆனால் உன் அப்பாவின் நிலையை அன்றைக்கு நேரில் கண்டேன். அவர் சம்மதிப்பார் என்று எனக்குத் தோன்றவில்லை."

"வேறு என்னை என்னதான் செய்யச் சொல்லுகிறீர்கள்?"

"பொறுத்திரு! காலம் போகிற போக்கில் இன்னும் என்ன நடக்கிறதென்று பார்ப்போம்."

"நான் பொறுத்திருப்பேன். என் அப்பா? என் அத்தை? ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்ளுங்கள். இந்தப் பிறப்பில் நான் இன்னொரு மனிதருடன் வாழப் போவதில்லை. கௌரி உங்களுக்கு மனைவி. நீங்கள் எனக்குத் தெய்வம். நான் உங்கள் அடிமை. கௌரிக்கும் நான் துரோகம் செய்ய மாட்டேன்;



உங்களை விட்டு நான் உயிரோடு எங்கும் போகவும் மாட்டேன்."

"அதற்காக நாங்கள் என்ன செய்ய வேண்டும்?"

"மாதம் ஒரு முறை என்னை வந்து ஐந்து நிமிஷம் பார்த்தால் போதும். உங்கள் எல்லோரையும் நான் பார்க்க வேண்டும். நீங்கள்தான் எனக்கு உறவு."

"அப்படி நாங்கள் பார்ப்பதையும் உன் அப்பா தடுத்தால்?"

"பிறகு என்ன நடக்குமோ, எனக்குத் தெரியாது!"

"நாங்கள் வெளியூருக்குப் போனால் நீ என்ன செய்வாய்?"

"போகும்போது பார்த்துக் கொள்ளலாம்" என்றாள் உமா. "அதற்குள் ஏதாவது நடந்தால் நான் உங்கள் வீட்டுக்குத்தான் ஓடி வருவேன்."

"தாராளமாய் வந்து சேர், உமா!" என்று கூறினாள் கௌரி.

மணி நாலரையாகியது. சாப்பாட்டுப் பாத்திரங்களைக் கழுவுவதற்காகக் கல்யாணி அம்மாளும் கௌரியும் கடலோரத்துக்குச் சென்றார்கள். உமாவின் உறுதியான முகத்தைக் கண்டு திகைத்தான் தணிகாசலம். ஏனோ அந்தக் கணத்தில் அவனுக்குத் தாஜ்மஹாலில் கண்ட முதற்காட்சி நினைவுக்கு வந்தது.

தன்னுடைய கரத்தை நீட்டி, "நீ எந்தக் காரணத்தைக் கொண்டும் தற்கொலை செய்து கொள்வதில்லை என்று சத்தியம் செய்!" என்று கத்தினான். "உனக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காக உன் அப்பாவின் சிநேகத்தை இழந்தேன். சௌந்தரத் தம்மாளின் நச்சுக்கு ஆளானேன். உன் வீட்டை விட்டே வெளியில் வந்தேன். எனக்காக நீ இதைச் செய்!"

"அது என் இஷ்டம்!" என்று சொல்லி எழுந்திருக்கப் போனாள் உமா.

"இதே இடத்தில் உன்னைக் கொன்று புதைத்து விடுவேன்! உயிரோடு இருந்து கொண்டே என்னைப் பேயாக அலைக்கழிக்கிறாய். இன்னும் செத்துத் தொலைக்க வேண்டுமென்ற ஆசையா உனக்கு?"

நடுங்கிக் கொண்டே அவள் அவனுக்குக் கையடித்துக் கொடுத்தாள். "நானுகச் சாகவில்லை.....இல்லை.....! அப்படி விழித்துப் பார்க்காதீர்கள். நானுகச் சாக மாட்டேன்."

"நினைவிருக்கட்டும்!" என்று உறுமினான் தணிகாசலம்.

இரவு ஒன்பது மணிக்குச் சென்னை வந்து சேர்ந்தவுடன் தங்கள் தங்கள் வழிகளில் உமா தன் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். தணிகாசலம் இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு தன்னுடைய நாட் குறிப்பைக் கையில் எடுத்தான்.

"இவ்வளவு வருஷங்களுக்குப் பின்பு இன்றுதான் நான் உமாவைப் புரிந்து கொண்டிருக்கிறேன்" என்று தொடங்கி, மேலும் சில வரிகளை எழுதினான். அந்த வரிகளை எழுதும்போது அவன் கண் முன்னே அவள் கொடுத்த முருகன் படமும், தாஜ்மஹாலின் முதற்காட்சியும் மாறி மாறித் தோன்றின.

## அத்தியாயம் 36

# குங்கும வெள்ளத்திலே குளிர் தாமரை

**"கலைஞனே! நீ புகழை எதிர்பார்த்து உழைக்காதே: அது உனக்குக் கிடைக்காமலே போகலாம். பொருளுக்காக உழைக்காதே: உன் ஆத்மாவையே நீ விற்று விடுவாய். உன் உள்ளத்தின் நிறைவுக்காக, உன் ஆத்மாவின் ஆனந்தத்துக்காக, நீ கலைப் பணியில் ஒன்றி விடு: உழைப்பில் உன்னை மறந்துவிடு. பிறகு ஒரு வேளை நீ எதிர்பாராமலே புகழும் பொருளும் உன்னைத் தேடி வந்தாலும் வரலாம்."**

**—மேல் நாட்டுக்கவி கேன்யான் காக்ஸ்**

கண்ணப்ப நாயனார் சிவபெருமானிடம் கொண்டிருந்த பக்தியின் மேலீட்டால், தாம் சுவைத்துப் பார்த்த உணவில் எது ருசி மிகுந்ததோ அதைச் சிவபெருமானுக்கு ஒதுக்கி வைப்பாராம். உமாவும் தணிகாசலத்தைப் பொறுத்த வரையில் அப்படிப்பட்டவள்தான். சிந்தனைக்கு அவள் விருந்துண்ணும் வேளைகளில், எங்கேயாவது அற்புதமான இலக்கியத் துணுக்குகள் கிடைத்து விட்டால் அவற்றைத் தணிகாசலத்திடம் பகிர்ந்து கொள்ளும் வரையில் அவளுக்குத் தூக்கம் வராது. மாமல்லபுரத்துக்கு வந்திருந்த உமா, தணிகாசலத்திடம் கொடுப்பதற்காக, மேற்கண்ட வரிகளை எங்கிருந்தோ குறித்துக் கொண்டு வந்திருந்தாள். அவனுடைய குறிப்பு நோட்டை வாங்கிப் பிரித்து அதில் எழுதியும் வைத்து விட்டாள்.

மாமல்லபுரத்துக்குச் சென்று வந்து மூன்று நாட்கள் கழிந்தன. முந்நூறு முறை அந்தக் கடற்கரைச் சவுக்கத் தோப்பும், அதில் அவனுக்குக் கையடித்துக் கொடுத்த உமாவின் உருவமும் நினைவுக்கு வந்தன. உமாவின் உறுதிமொழி அவனுக்கு ஆறுதல் தந்தது. 'இனிமேல் உமா கோழைபோல் உயிரை விடமாட்டாள்.'

தணிகாசலம் காலை வேளையில் எழுதுவதற்காக உட்கார்ந்தான். உமா குறித்துக் கொடுத்த வரிகளில் ஒரு வரி மாத்திரம் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. திரும்பத் திரும்பப் படித்தான்: "உழைப்பில் உன்னை மறந்து விடு; உழைப்பில் உன்னை மறந்துவிடு; உழைப்பில் உன்னை மறந்துவிடு!"

உழைப்பதற்காகவே அவன் இதற்குள் தனக்கு வேண்டிய வசதிகளை எப்படியோ செய்து கொண்டான். மேசை — நாற்காலிகள், புத்தக அலமாரி முதலியவை அந்த அறைக்கு வந்து சேர்ந்தன.

• • •

உழைப்பில் அவன் தன்னை மறந்திருந்த வேளையில், குழந்தை கல்யாணி




விட்டமின்கள்
செறிந்தது

பார்லே ப்ராடக்டஸ் மானுபுபாக்சரிங்
கம்பெனி பிரைவேட் லிட்., பம்பாய்.

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். மூச்சுக்கு முந்நூறு தடவைகள் "அப்பா!" என்ற சொல் அவள் கொவ்வைச் செவ்வாயிலிருந்து உதிர்ந்தது. தணிகாசலத்தின் காதுகள் அப்போது செவிடாகி விட்டன. "ஜல்! ஜல்!" என்று ஒலிக்கும் சதங்கை ஒலியும், "அப்பா!" என்று அழைக்கும் அமுத மொழியும் அவனுக்கு அப்பொழுது கேட்கவில்லை.

குழந்தை உரிமையுடன் வந்து அவன் மடியில் ஏறி உட்கார்ந்து கொண்டாள். தன் கரங்களால் அவன் முகத்தைப் பற்றி, அவனுடைய கவனத்தைத் தன் பக்கம் திருப்பினாள். அப்பா தன் தோல்வியை ஒப்புக்கொண்டு, மகளின் சாமர்த்தியத்தை மெச்சி அசட்டுச் சிரிப்பு சிரித்தான். அந்தச் சிரிப்பு கொடுத்த தைரியத்தால் குழந்தை தாராளமாக மேசைமீதே ஏறி உட்கார்ந்தாள்.

"என்ன கல்யாணி இது!"

கல்யாணி உதட்டைப் பிதுக்கிப் பழிப்புக் காட்டினாள்.

"உன்னைப்போல் சமர்த்துப் பெண் யாருமே கிடையாது! எங்கே, கொஞ்சம் இறங்கிப் போய் வெளியே விளையாடு, பார்க்கலாம்!"

"ஊஹூம்; மாத்தேன்!"

"என் கண்ணல்ல?"

"ஊஹூம்."

"சீ, கழுதை! இறங்கிப் போ!"

கல்யாணியின் முகம் சுண்டியது. ஏக்கத்தோடும் ஆத்திரத்தோடும் அவனைப் பார்த்தாள். அந்தப் பார்வையின் வேகத்தைத் தணிகாசலத்தால் தாங்க முடியவில்லை. அப்படியே வாரி அணைத்து அவள் கன்னங்களில் முத்தமாரி பொழிந்தான். மிருதுவான அவள் பொன்னுடலிலிருந்து தாமரையின் மெல்லிய மணம் அவன் நாசியில் இழைந்தது.

"கல்யாணி! நீ தாமரைப் பூவிலா பிறந்தாய்? ஏன் எப்போதும் உன் தேகத்தில் தாமரை மணம் வீசுகிறது?"

குழந்தை அவனைக் கோணல் 'கண்களால் பார்த்துக் கொண்டு குறும்புச் சிரிப்பு சிரித்தாள். உடலுக்கு மணம் உண்டு என்பது அவனுக்குத் தெரியாமல் இல்லை. ஆனால் கல்யாணியிடம் உள்ள தாமரை மணத்தை முதலில் அவனுக்கு எடுத்துச் சொல்லியவள் உமா தான்.

"நீ தாமரை மொட்டாய்ப் பிறந்ததால்தான் எப்போதும் உமா உன்னைச் சுமந்து கொண்டு திரிந்தாள்" என்றான் தணிகாசலம்.

குழந்தை இதைக் கேட்டுச் சிரிக்கவில்லை; எங்கோ யோசனை செய்தாள்; உமாவின் நினைவு அவளுக்கு வந்துவிட்டது. மத்தியில் அவள் மறந்து போனதாய்த் தணிகாசலம் நினைத்துக் கொண்டிருந்த அந்தப் பழைய பல்லவியை அவள் மீண்டும் தொடங்கினாள்.

"அக்கா எங்கேப்பா?"

"அவளை மறக்கவில்லையா, நீ?"

"சொல்லுப்பா!" என்று செல்லமாய்ச் சிணுங்கினாள் கல்யாணி.

தணிகாசலத்துக்குக் கோபம் வந்துவிட்டது. "அக்காளாம் அக்காள்!" என்று குழந்தையை மேசையிலிருந்து தூக்கிக் கீழே போட்டான். எங்கோ போக வேண்டிய கோபம் குழந்தையிடம் திரும்பியது. "உன்னை யார் இங்கே வரச் சொன்னது? எழுதுகிற நேரத்தில் ஏன் வந்து எனக்குத் தொல்லை கொடுக்கிறாய்? குழந்தையைப் பார்க்கவில்லை குழந்தையை!"

நீர்மணிகள் குபுகுபுவென்று கொப்பளித்து நின்றன, கல்யாணியின் கருநீலப் பளிங்குக் கண்களில்.



"அக்காள் இங்கே வரமாட்டாள், போ!" என்று திரும்பவும் அதட்டினான்.

"எங்கேப்பா? சொல்லுப்பா!"

"அதோ அங்கே இருக்கிறது வீடு!" என்று கை காட்டினான். "மாடியில் இறங்கி, தெருவைச் சுற்றிக் கொண்டு போக வேண்டும். போனால் அங்கே உனக்கு என்ன கிடைக்கும், தெரியுமா? உதை கிடைக்கும்! உன்னையும் அடிப்பார்கள்; என்னையும் அடிப்பார்கள்."

குழந்தை வெளியே போனபிறகு கதைக்குள் முழுகினான் தணிகாசலம். கலைப்பணியில் முழுகினால் கிணற்றில் முழுகுவதைப் போலத்தான்; காதலில் முழுகுவதைப் போலத்தான். கண் தெரியாது; காது கேட்காது; ஐம்புலன்களும் அடங்கி ஒடுங்கி ஒரு நிலையில் ஒடுங்கிவிடும். குழந்தையைப் பற்றியும் உமாவைப் பற்றியும் அடுத்த நிமிஷத்தில் தணிகாசலத்துக்கு நினைவில்லை.

கல்யாணி அடுக்களைக்குப் போய் எட்டிப் பார்த்தாள். தன் தாயார் இட்டிலி அடுப்பின் புகை மூட்டத் துக்குள் திணறிக் கொண்டிருப்பது தெரிந்தது. பாட்டி சட்டினிக்குத் தேங்காய் துருவிக் கொண்டிருந்தாள். அண்ணன் காகிதப் பென்சிலால் சுவரில் சித்திர வேலைப்பாடுகள் செய்வதற்கு முற்பட்டான்.

நிதானமாகக் கீழே உட்கார்ந்து தன் கால் செருப்புக்களை மாட்டிக் கொண்டாள் கல்யாணி. சத்தம் செய்யாமல் மெதுவாக அந்த இடத்தை விட்டு நழுவினாள். தணிகாசலத்தின் அறைக்கதவு பாதி திறந்திருந்தது. தன்னைக் கவனிக்காத அப்பாவுக்கு, 'போய் வருகிறேன்' என்ற சைகையால் கைகாட்டி விட்டு அவள் மாடிப் படிகளுக்கு வந்தாள்.



படிகளில் இதற்குமுன் அவள் இறங்கியதில்லை. அவளுடைய சின்னஞ் சிறு மூளையில் சிறியதொரு போராட்டம் நடந்தது. 'இறங்கலாமா? வேண்டாமா? இறங்காவிட்டால் எப்படி அக்காளைப் போய்ப் பார்க்க முடியும்? அம்மா—அப்பா எல்லோரும் இந்தப் படிகளில் இறங்கி ஏறும் போது நாமும் இறங்கினால் என்ன?'

கெட்டிக்காரிதான்கல்யாணி. ஒவ்வொரு படியாக உட்கார்ந்து—உட்கார்ந்து எழுந்து சென்றாள். கைப்பிடியின் ஓரமாகச் செல்லவும் அவளுக்குத் தெரியாமல் இல்லை. மூன்று நான்கு படிகள் பத்திரமாய் இறங்கி விட்டாள். கடைசியில் அவளுடைய கெட்டிக்காரத்தனந்தான் அவளுக்கு வினையாக வந்தது. எதற்காகப் பெரிய மனிதர்களைப் போல் செருப்புக்களை மாட்டிக் கொண்டு கிளம்புகிறாள்?

வலது கால் செருப்பு நழுவிப் படிகளில் புரண்டது. அதைத் தாவிப் பிடிப்பதற்காக முன்னால் குனிந்தாள் கல்யாணி. செருப்பை எப்படியோ எட்டிப் பிடித்து விட்டாள். ஆனால் அவளைப் பிடிப்பதற்கு அங்கு யாருமில்லை. 'கடகட' வென்று உருண்டு கொண்டே கீழே போய், மிகப் பெரிய அலறலுடன் தரையில் விழுந்தாள்.

உருண்டு உருண்டு கீழே போனவள், இனி உருள முடியாத இடத்தில், மருள வேண்டிய நிலையில், குபுகுபுவென்று தலையிலிருந்து பாய்ந்த ரத்த வெள்ளத்தில் துடியாய்த் துடித்துக் கொண்டு கிடந்தாள்.

கூட்டம் கூடிவிட்டது. தலைமயிரைப் பிடித்துக் கொண்டு தணிகாசலம் நடுத்தெருவில் டாக்டரைத் தேடிக் கொண்டு ஓடினான். டாக்டருடன் திரும்பி வருவதற்குள் குழந்தை அவள் தாயாரின் மடியில் மயங்கிக் கிறங்கினாள். கௌரியின் மடியெங்கும் குங்கும வெள்ளம் கொப்பளித்துப் பொங்கியது. பாட்டி கல்யாணி அம்மாளுக்கு இந்தக் கோலத்தைக் கண்டவுடன் பேச்சுமில்லை; மூச்சுமில்லை.

டாக்டர் வந்து தம்மால் முடிந்ததையெல்லாம் செய்தார். தலையில் பெரியதொரு கட்டுக் கட்டினார். ஊசி போட்டுப் பார்த்தார். குழந்தையின் மயக்கம் சிறிது தெளிந்தது. கூடியிருப்பவர்களின் முகங்களை ஒவ்வொன்றாகப் பார்த்தாள். அவள் தேடிய அந்த ஒரு முகம் மட்டிலும் அங்கு இல்லை போலும்! கௌரியிடம் "அக்கா எங்கேம்மா?" என்று மெல்லக் கேட்டாள்.

'அக்கா எங்கேம்மா?'—அனைவரின் செவிகளிலும் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றிய கேள்வி அது. தணிகாசலத்தின் கண்ணீர் அவன் உதடுகளில் படிந்து உப்புக் கரித்தது.

"போங்கள்!" என்று கத்தினாள் கௌரி. "போய் உமாவை அழைத்துக் கொண்டு வாருங்கள்!" என்று அலறினாள்.

தணிகாசலம் சிலையாக நின்று, முடியாதென்பதுபோல் தலையை மட்டும் ஆட்டினான். பிடிவாத குணம் அவனை மறுக்கச் செய்தது.

"உங்களுக்கு இரக்கமில்லையா? சீக்கிரம் போய் அவளை அழைத்துக்கொண்டு வாருங்கள்" என்றாள் கௌரி.

"முடியாது; நான் போக மாட்டேன்" என்றான் பிடிவாதமாக.

"உங்கள் மனம் என்ன, கல்லா? இரும்பா? இங்கே குழந்தையின் முகத்தைப் பாருங்கள். சாகக் கிடக்கிறவள் அக்காளைக் கூப்பிடுகிறாள். இதுதான் உங்கள் பிடிவாதத்துக்கு நேரமா?—குழந்தையைக் கொஞ்சம் வாங்கிக் கொள்ளுங்கள், அத்தை!"

கல்யாணி அம்மாளின் மடியில் குழந்தையைப் போட்டு விட்டுத் தெருவில் இறங்கி ஓடினாள் கௌரி. கணவனின் துயர் கேட்டு அன்றைக்கு ஒரு கண்ணகி மதுரைமா நகரத்தின் தெருக்களில் ஓடினாள். குழந்தையின் துயர்தாங்காது இன்றைக்கொரு கண்ணகி மாம்பலத்தின் தெருக்களில் ஓடுகிறாள்.

தணிகாசலம் தனியாக டாக்டரைப் பிடித்து இழுத்துக்கொண்டு சென்றான். அவரிடம் அழுதுகொண்டே கெஞ்சினான். "சொல்லுங்கள், டாக்டர்! குழந்தை பிழைத்துக்கொள்வாளா?"

டாக்டர் தயங்கினார்; மழுப்பிப்பார்த்தார்; தடுமாறினார்.

"உண்மையைச் சொல்லுங்கள், டாக்டர்!" என்றான்.

"இன்னும் ஒரு மணி நேரம் கழித்துத்தான் சொல்ல முடியும்." – இப்படிச் சொன்னாரே தவிர, ஒரு நிமிஷங்கூட அதற்கு மேல் அவர் அங்கு தாமதிக்கவில்லை.

அம்பால் அடிபட்டுத் துடிக்கும் மானைப் போல் அறைக்குள் ஓடிவந்து விழுந்தாள் உமா. கௌரியும் அவளுடன் வந்து சேர்ந்தாள். உமாவின் உணர்ச்சிகளால் அந்த அறையின் சோகம் ஆயிரம் மடங்கு பெரிதாயிற்று. கல்யாணி அம்மாளின் மடியிலிருந்த குழந்தையை மெதுவாகத் தன் மடியில் வாங்கி வைத்துக்கொண்டாள் உமா. கண்ணீரால் குழந்தையைக் குளிப்பாட்டியபடி, "கண்ணே கல்யாணி! உன் அக்கா வந்திருக்கிறேனடி ராஜாத்தி!" என்று கதறினாள். "கண்ணே, என்னைக் கண் திறந்து பார்க்க மாட்டாயா? நான் உன் அக்கா இல்லையா? இதோ பார்!",

# ஒலிபெருக்கியின் சேவை!

தே. வீரராகவன்

ஒலிபெருக்கி கொடுக்கும் தொல்லை
ஒண்ணு ரெண்டா சொல்லிட
எலிபுகாத சந்து பொந்து
எங்குமிருக்கும் சிறந்திட

கலியாணவீட்டில் விடியற்
காலைமுதல் கர்ச்சிக்கும்;
சலியாமல் செத்தவிடத்தும்
சரிகமப அர்ச்சிக்கும்

பீடாக்கடைத் திறப்புவிழா
பேங்குக்கட்டடத் திறப்புவிழா
சோடாக்கடைத் திறப்பிடத்திலும்
தோன்றிடும் அதன்சிறப்பு

மேடைமீது முந்திக்கொண்டு
மிடுக்குடனே ஏறிடும்
சோடையான பேச்சென்றாலும்
சொன்னபடியே வீசிடும்

மாடிமீதும் ஏறிடும், மரக்
கிளையின்மீது தாவிடும்
வீடு, கொம்பு கம்பம் எங்கும்
விலக்கிடாமல் மேவிடும்

போட்ட பிளேட்டைப் போட்டுப் போட்டுப்
பொழுதுமுழுதும் வதைத்திடும்
கேட்டபாட்டைக் கேட்டுக்கேட்டுக்
கெட்டமனத்தைச் சிதைத்திடும்

பிறப்புவிழா, இறப்புவிழா
திறப்புவிழா எல்லாச்
சிறப்புவிழா சிறியவிழா
இஃதில்லாமல் செல்லா

ஒலிபெருக்கி வந்தபின்னர்த்
தூக்கம் ஓடலாச்சு;
மலிவான பாடலால்
இசையும் மறந்துபோச்சு!



கல்யாணியின் கண்கள் புது மலர்ச்சி பெற்றன. உமாவைக் கண்டவுடன் ஓர் தெய்வச் சிரிப்பு குழந்தையின் செவ்விதழ்க் கோணத்தில் தெளிந்து விளையாடியது. "அக்கா! அக்கா! அக்கா!" என்று ஆனந்தக் களி கூறினாள். பிஞ்சுக் கரங்களையும் கொஞ்சம் கால்களையும் உதறிக் கொண்டு தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தாள். 'உன்னைத் தேடிக் கொண்டு புறப்பட்டேன்; நீயே வந்து விட்டாயே!' என்று எக்களித்துப் பூரித்தன குழந்தையின் கண்கள்.

குழந்தையின் முகம் மறுபடியும் ஒவ்வொருவர் பக்கமாய்த் திரும்பியது.

தன்னைப் பெற்றவள், தகப்பன், பாட்டி, உடன் பிறந்தவன் அனைவரையும் பார்த்தாள். கடைசியாக உமாவையும் உற்று நோக்கினாள். உமாவிடம் அவளுக்குக் கோபம் போலும்! தினந்தோறும் காலையிலும் மாலையிலும் தன்னைத் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சவில்லை என்ற ஆத்திரம் போலும்! முகத்தைச் சுளித்தாள் கல்யாணி. குழந்தையின் கரங்கள் இரண்டும் உமாவின் முகத்துக்கு எதிராக உயர்ந்தன. பிஞ்சுக் கரங்களின் முல்லை மொட்டு விரல்கள் இரண்டையும் ஒவ்வொரு கரத்திலும் தனித்தனியே மடித்துக் காட்டினாள். ''அக்கா!'' என்ற செல்ல அழைப்பும் அதோடு தொடர்ந்தது.

''என்னடி ராஜாத்தி?''

''போ, அக்கா!'' என்று பொருமினாள் குழந்தை. ''உன்னோடே டூ!...உன்னோடே டூ!...உன்னோடே டூ!''

ஆள்காட்டி விரல்களை மத்திய விரல்களால் மடித்து மூன்று முறை டூ விட்டாள், கல்யாணி.

அடுத்தாற்போல் குழந்தையனுடைய கைகள் உதறின; கால்கள் உதறின; அங்கத்தின் ஒவ்வொரு அணுவிலுமே உதறல் கண்டது. குழந்தை ஏதேதோ பிதற்றினாள்; ஏதேதோ உளறினாள்; ஏதேதோ தன் மழலை மொழியில் அவள் கூறினாள்.

எமதர்மராஜன் என்ற படுபாவிக்குக் குழந்தை குட்டிகளே கிடையாது போலும். தன் உதிரத்தில் உதித்தெழுந்த குழந்தையின் மரணப் படுக்கையின் அருகில் அவன் ஒரு கணம்—ஒரே ஒருகணம்—நின்றிருந்தானென்றால் அவன் இந்த உலகத்தில் எந்தக் குழந்தைகளையுமே கொல்ல மாட்டான்.

அந்தப் படுபாவியை, குழந்தைகளைப் பறி கொடுத்த பெற்றோர்களின் சார்பில், என் மனதாரச் சபிக்கிறேன்; ஏனடா உனக்கு இந்த ஈனத்தொழில்? பொய் சொல்லத் தெரியாத, திருடத் தெரியாத, ஏமாற்றத் தெரியாத சின்னஞ்சிறு அரும்பு மொட்டுகளை ஏனடா நீ பறித்துச் செல்கிறாய்? யாருக்குக் கொடுக்கும் தண்டனை இது? அட, கொலைகாரப் பாதகா! உன் குழந்தைக்குக்கூட இந்தக்கதி நேர வேண்டாமடா!

குழந்தை 'கல்யாணி' தன்னை வளர்த்துப் பயிராக்கிய உமாவுக்கு மாத்திரம் டூ விடவில்லை. அம்மா, அப்பா, அண்ணா, பாட்டி,—ஏன் இந்த உலகத்துக்கே அவள் டூ விட்டு விட்டாள். ஆம்; எல்லோருக்கும் டூ!

''குழந்தையைக் கொன்ற கொலை பாதகி நான்தான்!'' என்று தலை தலையாய் அடித்துக் கொண்டாள் உமா. கௌரிக்குத் தலை சுற்றியது. பாட்டி தரையில் புரண்டாள். பையன் பரமசிவத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு அவன் கண்களைத் துடைத்து விட்டான் தணிகாசலம்.

அறையெங்கும் அப்போது 'கம்'மென்று தாமரையின் மணம் பரவியது.

உமாவின் துயரம் எல்லையைக் கடந்து விட்டது. தன்னைத் தானே தூற்றிக் கொண்டு சுவரில் ஓங்கி ஓங்கித் தலையை மோதிக் கொண்டு புலம்பினாள். குழந்தை கல்யாணியின் நிலைமை உமாவுக்கும் வந்து விடும்போல் தோன்றியது. பிடித்து இழுத்துத் தரையில் தள்ளினான்.

குழந்தை இன்னும் உயிருடன் இருப்பதாகவே அவனுக்கொரு கற்பனை. தன் ஆவல் தீரக் கல்யாணியைத் தூக்கி முத்தம் கொடுத்தான். அந்த நிலையில் கூட அவள் தேகத்தில் தாமரையின் மணம் குறையவில்லை.

* * *

கலைஞன் பூதக் கண்ணாடி போன்ற மனத்தை வைத்துக் கொண்டு உலகத்தின் சுக துக்கங்களை அநுபவிக்கும் வழக்கமுள்ளவன். இன்பமென்றால் அவனுக்கு இன்பத்தின் உச்ச நிலைதான்; துன்பம் என்றால் அவனுக்குத் துன்பத்தின் ஆழம்தான். தன்னுடைய வாழ்க்கையில் இப்படி ஒரு பேரதிர்ச்சி ஏற்படும் என்று தணிகாசலம் கற்பனைகூடச் செய்யவில்லை.

ஆனால், கற்பனையே செய்யாத எத்தனை எத்தனையோ நிகழ்ச்சிகள் ஒவ்வொருவர் வாழ்விலும் நடக்கத்தான் செய்கின்றன. தணிகாசலத்தின் வாழ்வில் கல்யாணி ஒரு திருப்பத்தையே ஏற்படுத்தி விட்டாள். தணிகாசலத்துக்கு ஏற்பட்ட திருப்பம் ஒரு புறம் இருக்கட்டும். உமா எப்படி இனி இதைத் தாங்கப் போகிறாள்? எப்படி அந்தக் குடும்பத்துக்கு அவள் இனி ஆறுதல் சொல்லப் போகிறாள்? அவளுக்குத்தான் ஆறுதல் சொல்வதற்கு வேறு யார் இருக்கிறார்கள்?

'என் குழந்தை! என் குழந்தை!' என்று அடித்துக் கொண்டாளே, இப்போது யார் குழந்தை இந்தக் கல்யாணி?

தணிகாசலத்தின் வாழ்க்கை என்ற சின்னஞ் சிறு சரித்திர நூலில், இந்த முக்கியமான திருப்பத்துக்குப் பிறகு, மூன்றாவது பகுதியான அந்திம ஏடு புரண்டது.

(தொடரும்)

# பொன்னி எங்கே? ④

**பகீரதன்**

காவேரிக் கரையில் பொன்னனும் பொன்னியும் அமர்ந்திருந்தார்கள். காவேரிக் கரையில் அடர்ந்து படர்ந்திருந்த மரங்களின் நிழலிலே பொன்னன் பொன்னியின் முகத்தைப் பார்த்த வண்ணம் அமர்ந்திருந்தான். இரவு நெருங்கிக் கொண்டிருந்த! அந்த நேரத்தில், தரையில் சாய்ந்து படுத்தவாறே தூரத்தில் கிராமத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தவர்களின் உருவங்களைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

பாடிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் அவர்கள் தங்கள் வீடுகளை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். அவர்கள் முகங்கள் சிற்பங்களைப் போல் உறுதி வாய்ந்தவையாக இருந்தன. முறுக்கிவிட்ட மீசை. ராஜகுமாரர்களைப் போல் தோள் வரை தொங்கிக் கொண்டிருந்த அடர்த்தியான மயிர். கருமையான கண்களையுடைய பெண்கள் மகிழ்ச்சியுடனும், அழகுடனும் விளங்கினார்கள். அவர்கள் முகங்களெல்லாம் தங்க விக்கிரகம் போல் இருந்தன. பட்டுப் போன்ற அவர்கள் கேசம் தோள்களிலும், முதுகிலும் மார்பிலும் புரண்டு விளையாடிக் கொண்டிருந்தது. காவேரிக் கரையிலிருந்து அடித்த காற்றினால் அவர்கள் அணிந்திருந்த ஆடைகள் படபடவென்று ஆடித் துடித்தன. அப்போது அவர்கள் கேசம் அவர்கள் தலை மீது பறந்த காட்சி அவர்களை ஏதோ தெய்வ மங்கையர்கள் என்று எண்ணும்படியிருந்தது. பொன்னி பொன்னனிடம் கூறிய சோகக் கதையும் இரவும் சேர்ந்து காவேரிக்கரையிலிருந்து அவர்களை விலக்கி விவரம் தெரியாத விசித்திர உலகுக்கு அழைத்துச் சென்றன;

அந்தக் கிராமத்து மக்களின் கூட்டமும், அவர்கள் பாட்டும் கொஞ்சம் கொஞ்சமாக மங்கிக் கொண்டே வந்து மறைந்து விட்டது; பொன்னியின் சோகம் வழியும் பெருமூச்சைப் போல் அது இருந்தது. அவள் ரோஜா நிறக் கன்னங்களில் கண்ணீர்த் துளிகள் உருண்டு விழுந்தன. பொன்னனின் கண்களிலும் கண்ணீர்த் துளிகள் அரும்பி நின்றன.

"இப்பொழுது ! சொல்லுங்கள். நீங்கள் உண்மையாகவே என்னை நேசிக்கிறீர்களா? என்னைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ளுகிறீர்களா?" என்று கேட்டாள்.



உணர்ச்சி மிகுதியால் பொன்னி சற்றுக் கூனிப் போயிருந்தாள். கறுத்துப் பளபள என்று இருந்த அவள் கண்களில் பொங்கி, கன்னங்களின் வழியே உருண்டு விழுந்த கண்ணீரைத் துடைத்து விட்டுக் கொண்டாள். அவள் குரல் ஒலி திடீரென்று மாறியது. விசித்திரமாக ஒலித்தது. சின்னஞ்சிறு குழந்தை ஒன்று தன் தாயிடம் கொஞ்சிக் கெஞ்சி மன்றாடுவது போல் அதில் மழலை மிதந்தது.



"இப்பொழுது எனக்கு உன் மீது இன்னும் எல்லையற்ற அன்பும் பரிவும் ஏற்படுகின்றன. நீ எனக்கென்றே இந்த உலகில் படைக்கப்பட்டவள். நீ என்னுடைய பொன்னி! என்னுடைய பொன்னியேதான்!" என்று ஆவேசம் பொங்கி வந்தவன் போல் உரக்கக் கூவி மகிழ்ந்தான் பொன்னன்.

"காவேரி மண்ணில் பிறந்தவர்களே அதிசயமான பிறவிகள் போலிருக்கிறது. அவர்கள் சுறுசுறுப்பும் உற்சாகமும் ஊக்கமும் உறுதியும் பெண்களை வசியப்படுத்தி விடுகின்றன. நீங்கள் எல்லாம் எப்போதும் இளமையாகவும் பலம் வாய்ந்தவர்களாகவும் இருக்கிறீர்கள்" என்றாள் பொன்னி.

கீழ்வானத்தில் சந்திரன் தோன்றியது. வட்ட வடிவமாகத் தோன்றிய அது பூமியின் வயிற்றிலிருந்து 'பொக்'கென்று முளைத்தது போலிருந்தது. காலப் போக்கில் அது எத்தனையோ காதலர்களுடைய வாழ்க்கையையும் இன்பங்களையும் பார்த்திருக்கும். அவர்களுடைய உற்சாகத்தையும் இன்பத்தையும் பார்த்துப் பார்த்துத்தான் இவ்வளவு மகிழ்ச்சியுடன் காணப்படுகிறதோ என்னவோ! மேலே எழும்பிக் கொண்டிருந்த சந்திரனுடைய ஒளியைத் தாங்கிக் காவேரிக் கரையில் ஓங்கி வளர்ந்திருந்த மரங்களின் நிழல்கள் அந்த இளம் காதலர்கள் மீது படர்ந்தன. அவை அவர்களை ஒரு வலையினால் மூடியிருப்பதைப் போலிருந்தன.

"அதோ பார், பொன்னி!" என்று தன்னுடைய பலம்வாய்ந்த கரங்களால் பொன்னன் காட்டிய திசையைப் பார்த்தாள் பொன்னி. வட்டவடிவமான சந்திரனில் இரண்டு அதிசய உருவங்கள் தென்பட்டன. அந்த உருவங்கள் இந்த இளம் காதலர்களுக்கு அன்போடு ஆசி கூறுவது போல் இருந்தன.

"என் கண்ணுக்கு யாரும் புலப்படவில்லையே?" என்றாள் பொன்னி.

"நான் மன உறுதியுடன் இருக்கிறேன். உன்னை மிகுந்த அன்புடன் நேசிக்கிறேன். உனக்கும் எனக்கும் ஏற்பட்ட இந்த உறவு நேற்று முந்தாநாள் ஏற்பட்ட உறவல்ல. நெடும் பண்டைக் காலம் தொட்டு ஏற்பட்ட உறவாகவே நான் எண்ணுகிறேன். அதனால் அந்த உருவங்கள் யார் என்று என் கண்களுக்குத் தெளிவாகப் புலப்படுகின்றன" என்று கூறினான் பொன்னன்.

பொன்னி மீண்டும் சந்திரனைக் கூர்ந்து பார்த்தாள். அவளுக்கு அந்த நிலவின் நிழலில் ஒன்றுமே தெரியவில்லை. அவள் ஒரே உணர்ச்சி வயப்பட்டுக் கிடந்தாள்.

"அவை வெறும் நிழல்கள்தானே! அவற்றை ஏன் மனித உருவங்கள் என்று சொல்கிறீர்கள்?" என்றாள் பொன்னி.

"ஆமாம் இப்பொழுது அவை வெறும் நிழல்கள்தான். அதில் அதிசயம் ஒன்றுமில்லை. காலம் அவர்கள் உடலையும் எலும்பையும் ரத்தத்தையும் வற்றச்செய்துவிட்டது. ஆனால் அவர்களும் நம்மைப் போன்ற காதலர்கள்தான். மலர்விழியும் இளங்கோவனும்தான் அது. உன்னையும் என்னையும் அவர்கள் ஆசீர்வதிக்கிறார்கள். அவர்களே மீண்டும் இந்தப் பொன்னி நதிக்கரையில் வந்து அமர்ந்திருப்பது போல் உண்மையிலேயே மகிழ்ச்சியடைகிறார்கள்" என்றான் பொன்னன்.

"அப்படியா! அவர்கள் என் தாயும் தந்தையுமா? அவர்களே நம்மை ஆசீர்வதிக்கிறார்களா? உண்மையாகவா!" என்று கேட்டுக் கொண்டே பொன்னனின் பரந்த மார்பின் மேல் தாவி விழுந்தாள் பொன்னி. அவனை அன்போடு அணைத்தபடியே சற்று நேரம் மௌனமாகவே இருந்தாள்.



"என்னுடைய கதையைக் கேட்ட பிறகும் என்னைத் திருமணம் செய்து கொள்ளத் துணிந்துவிட்ட உங்கள் அன்பே அன்பு! நான் பாக்கியசாலி!" என்றாள்.

"பொன்னி! நீ பிறந்த கதையைச் சொன்னாய் அல்லவா? இதோ, நான் யார் என்பதைச் சொல்லுகிறேன். கேள். கேட்டுவிட்டு நான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளாமல் வேறு யாரையாவது கல்யாணம் செய்து கொள்ள முடியுமா என்ப

கதையும் சொல்'' என்றான் பொன்னன். பொன்னி மிகுந்த ஆவலுடன் பொன்னன் சொல்லும் கதையைக் கேட்கத் தயாரானாள்.

***   ***   ***

மாலை வேளை. பட்டுப் படுதாக்கள் காற்றில் இலேசாக அலைவது போல் கொள்ளிடக் கரை ஓரங்களில் தழைத்திருந்த தாழையும் நாணலும் சலசலத்துக் கொண்டிருந்தன. கருமேகங்கள் வானத்தில் வரிசை வரிசையாக மிதந்து கொண்டிருந்தன.

சேது தன்னந்தனியாக அங்கு நின்று கொண்டிருந்தான். முன்பெல்லாம் இந்த இடத்துக்கு வந்து அவன் சாவைப் பற்றி நினைப்பது வழக்கம். இளங்கோவனுடன் அவனுக்குத் தொடர்பு ஏற்பட்ட பிறகு அவன் வாழ்க்கையே மாறி விட்டது. இளங்கோவனுக்குக் கிடைத்தது போல் தன் வாழ்வை மலர்விக்கத் தனக்கோர் மலர்விழி கிடைக்க மாட்டாளா என்று ஏங்கினான். தன் மனத்தில் தோன்றிய எண்ணங்களை அவ்வப்போது குறிப்புப் புத்தகத்தில் எழுதி வைத்துக் கொள்வது அவனுடைய வழக்கம். இன்று வழக்கத்துக்கு விரோதமாகக் குறிப்புப் புத்தகங்களை வைத்துக் கொண்டு ஒரு கதை எழுத வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. அவன் இலக்கிய இதயம், எழுத்தாளன் உள்ளம் செயல்பட ஆரம்பித்து விட்டது. அவசரம் அவசரமாக வீட்டுக்குச் சென்றான். தன் அறையில் உட்கார்ந்து கொண்டு கதை எழுதத் தொடங்கினான்.

வாசலில் கிராமத்து மக்கள் போட்ட கூச்சல் அவன் காதில் பட்டது. அந்தக் கூச்சல் அவனுக்குச் சாதாரணக் கூச்சலாகப் படவில்லை. ஏதோ மிகவும் துக்ககரமான இசையைப் போலக் கேட்டது. கதையை எழுதிக் கொண்டிருக்கும்போது அவன் மனத்தில் சொல்லொணா உணர்ச்சிகள் கொந்தளித்து எழுந்தன. ஏதோ கைக்குக் கிடைக்காத ஒரு பொருளைத் தனக்குக் கொடுக்கும்படி கடவுளிடம் கெஞ்சிக் கேட்க வேண்டும் என்று தோன்றியது. எதிரில் இருக்கும் பொருள்களெல்லாம் கூட உயிர் பெற்று எழுந்து வருவது போல் இருந்தது அவனுக்கு. மேஜை மேல் எரிந்து கொண்டிருந்த விளக்குத் திரி கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்தது. இப்பொழுது மிகப் பெரிதாகி அந்த அறையையே அழித்துவிடக் கூடிய



அளவுக்கு நெருப்பையும், வெளிச்சத்தையும் 'குப் குப்'பென்று கக்குவது போலிருந்தது.

மேஜைக்கு மேலே சுவரில் இளங்கோவன் — மலர்விழி படங்கள் மாட்டியிருந்தன. இளங்கோவனுடைய கறுகறுப்பான கண்கள் சேதுவையே உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தன. ஒவ்வொரு சமயம் அக் கண்கள் ''ஏன் பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருக்கிறாய்? எழுது! உன் மனத்தில் தோன்றுவதை யெல்லாம் எழுது. உம், எழுது! எழுதிக் கொண்டே இரு!'' என்று கட்டளையிடுவது போலிருந்தன.

மலர்விழி படத்தில் இருந்து 'தொப்' என்று குதித்து வந்து இளங்கோவன் கையைப்பற்றி இழுப்பதுபோலிருந்தது. அப்படி இழுக்கும் போதே சேதுவைப் பார்த்து, ''என்ன, பார்க்கிறீர்கள்? எங்கள் வாழ்க்கையை வைத்துக் கொண்டுதான் எழுதுங்களேன்! எங்கள் வாழ்க்கையில் இல்லாத இன்பமும் சோகமும் வேறு யாருடைய வாழ்க்கையில் இருக்கப் போகின்றன? உங்கள் எழுத்தால் நாங்கள் தமிழ் நாட்டில் இன்னும் பல ஆயிரம் ஆண்டுகள் உயிருடன் வாழுகிறோம். எங்களைப் போல் அன்பு கொள்ள முயலும் இளங் காதலர்களுக்கு எங்கள் வாழ்க்கை ஒரு முன் மாதிரியாக இருக்கட்டுமே!'' என்று சொல்வது போல் பிரமை உண்டாயிற்று.

எப்படியோ சேது எழுதினான். பல நாட்கள் அந்த மேஜையின்மீது உட்கார்ந்து எழுதினான். கடைசியில் ஒரு நாள் தன்னுடைய கதையை எழுதியே முடித்து விட்டான்.

அவன் எழுதிய கதை இதுதான்:

உயர்ந்த குலத்தில் பிறந்த ஒரு பெண் உலகத்தாரால் தாழ்ந்த சாதி என்று கருதப் பட்ட வாலிபனிடம் காதல் கொண்டுவிட்டாள். பிறப்பால்தான் அவன் தாழ்ந்த சாதியே ஒழிய, அறிவால், ஆற்றலால், ஒழுக்கத்தால் எல்லாரும் போற்றும் உயர்ந்த சாதி வாலிபனுக்கும் மேலானவன். இவர்கள் காதலைப் பெண்ணைப் பெற்றவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். பிள்ளையைப் பெற்றவர்கள் ஏற்றுக் கொள்ள மறுக்கிறார்கள். 'உலகம் எல்லாம் வேண்டுமானால் எங்கள் சாதியைத் தாழ்ந்த சாதி என்று சொல்லட்டும். ஆனால் நாங்கள் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள் அல்ல. எங்கள் வீட்டுக்கு அந்தப் பெண் வரும் அளவுக்கு யோக்கியதை கிடையாது' என்று கூறித் தடுத்து வருகிறார்கள். இவர்கள் காதலுக்கு ஒரு பெரியவர், வெண் தாடி கொண்ட சாமியார் கருணை காட்டுகிறார். நாளுக்கு நாள் அவருடைய கருணை வளருகிறது. தங்கள் திருமணத்தை எப்படியாவது நடத்திவிட வேண்டும் என்று அந்தக் காதலர்கள் அந்தப் பெரியவரைக் கேட்கிறார்கள். அந்த வாலிபன் விரும்பினால் அப்பொழுதே அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளலாம். ஆனால் அவன் தன்னைப் பெற்று வளர்த்த தாய் தந்தையர்களுக்குப் பிடிக்காமல் அவளை ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. தன் தந்தையையும் தாயையும் இந்தத் திருமணத்தை ஏற்றுக் கொள்ளும் படி செய்ய வேண்டும் என்று நினைக்கிறான். அதற்காகவே அந்தப் பெரியவரின் தயவை நாடுகிறான். பெரியவர் காதலனின் பெற்றோர்களைச் சந்திக்கிறார். 'மனித குலத்தில் உயர்ந்த சாதி தாழ்ந்த சாதி என்று இல்லை' என்பதை விளக்குகிறார். 'அன்பு செய்து வாழ்பவர்கள் உயர்ந்தவர்கள். அன்பு செய்யாதவர்கள் தாழ்ந்தவர்கள்' என்பதை எடுத்துக் கூறுகிறார். 'அன்பின்பால் ஒன்று பட்ட உயிர்களைப் பிரிப்பதைவிட பாவம் வேறு ஒன்றும் கிடையாது' என்பதை மிகுந்த உருக்கமாக அவர்கள் மனத்தில் பதியும்படி சொல்கிறார். பெற்றவர்கள் தங்கள் மகனுக்கு ஆற்ற வேண்டிய கடமையை நினைவூட்டுகிறார். காதலனின் பெற்றோர்களுக்குத் தங்கள் கடமை நினைவுக்கு வருகிறது. கடமை தவறக் கூடாது என்ற சிந்தனையுடன் நீண்ட நெடுங் காலமாக அவர்கள் இரத்தத்தில் ஊறிய சாதி உணர்ச்சி என்ற சிந்தனையும் போராடுகிறது. முடிவில் கடமையே வெற்றி பெறுகிறது. தம் மகனின் காதல் வாழ்வுக்காகப் பாடுபடுவதுதான் கருணையும் கடமையுமாகும் என்று உணருகிறார்கள். தங்கள் மகன் காதலித்த உயர்குலப் பெண்ணையே கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்து விடுகிறார்கள். இவ்வாறு தங்கள் மனத்தை மாற்றிய பெரியவர் உண்மையான சாமியார் இல்லை என்பதையும் பெண்ணைப் பெற்ற தந்தையேதான் இவ்வாறு நடித்திருக்கிறார் என்பதை அறிந்ததும் அவர்கள் உற்சாகம் பன்மடங்கு அதிகமாகியது. 'உங்களைப் போல் ஒவ்வொரு பெற்றோர்களும் இருந்தால் இந்த நாடு எவ்வளவோ முன்னுக்கு வந்து விடும், சாதிப் பேய் அழிந்து இந்த நாட்டை விட்டே ஒழிந்து போய்விடும்' என்று அந்தப் பெரியவரை மனதார வாழ்த்துகிறார்கள்.

தான் எழுதிய இக் கதையைத் தன் நண்பர் ஒருவரிடம் படித்துக் காண்பித்தான் சேது.

கதையைப் படித்த அவன் நண்பர் ''இந்தக் கதை அற்புதமான மனித இதயம் நிறைந்த கதையாக இருக்கிறது. என் உள்ளத்தை உருக்கியது. நல்ல கதைகளைப் பற்றி வழக்கமாக நன்கு படித்த அறிஞர்கள் கூறுவது போல, 'மிக உயர்ந்த தமிழ்க் கதை மாதிரியே இருக்கிறது' என்றுதான் சொல்ல வேண்டும்'' என்றான்.

தன் நண்பன் சொன்ன அபிப்பிராயத்தைக் கேட்டதும் சேதுவுக்கு மிகுந்த உற்சாகம் ஏற்பட்டது. அடுத்த நாளே இந்தக் கதையைச் சென்னை நகரில் இருந்து வெளியாகும் ஒரு பத்திரிகைக்கு அனுப்பி வைத்தான். அந்தப் பத்திரிகை ஆசிரியரிடமிருந்து ஏதாவது பதில் வருமா என்று எதிர்பார்த்தான். பல நாட்கள் காத்திருந்தான். ஒரு பதிலும் வரவில்லை. பிறகு அந்தக் கதையைப் பற்றியே மறந்து போய் விட்டான் சேது.

காலம் மாறிவிட்டது! சேதுவுக்குப் பூங்குளத்தில் இருக்கப் பிடிக்கவில்லை. பூங்குளத்தை விட்டுக் காவேரிக்கரைக்கு அருகில் உள்ள பாமணி என்ற கிராமத்துக்கு வந்து விட்டான். அங்கு வந்தவுடன் அவனுடைய வாழ்க்கையே மாறிவிட்டது. மலேயாவுக்குச் சென்ற இளங்கோவனிடமிருந்து கடிதங்கள் வருவது நின்று போய் விட்டது. அங்கு யுத்தம் ஆரம்பமாகி விட்டதால் இளங்கோவ

அரசியலை விரும்புவோர் சிலரே ...





ஆனால் எல்லோரும் விரும்புவது



Parry's பாரிஸ்
மிட்டாய்களே

ஏனெனில் அவை ருசியுள்ளவை, ஆரோக்கியமானவை,
சுத்தமானவை

தயாரிப்போர்: பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், மதராஸ்

PRS 376


வசந்த காலத்தில்
பெண்மணிகளின் கூந்தலிலிருந்து மன்மதன் மலர் அம்புகள் தொடுக்கிருன் என்பது கவியின் வர்ணிப்பு. ஆனல் புஷ்பங்களினுல் தலையை அலங்கரிக்க கூந்தல் அடர்த்தியாக இருக்க வேண்டியது அவசியம். கேசவர்த்தினி கொண்டு கூந்தலைப் பெருக்கிக் கொள்ளுங்கள்.
கேசவர்த்தினி பிராடக்ட்ஸ் :: கோயமுத்தூர்

ளைப் பற்றிச் செய்திகள் ஒன்றையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. யார் யாருக்கோ கடிதம் எழுதிப் பார்த்தான். இளங்கோவன்-மலர்விழி இவர்களைப் பற்றிய விவரம் ஒன்றுமே தெரிந்து கொள்ள முடியவில்லை.

அது அவனுக்கு மிகுந்த ஏமாற்றத்தையும் துக்கத்தையும் கொடுத்தது. வாழ்க்கையில் வெறுப்புச் சஞ்சலமும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் இந்தமாதிரி பயங்கரச் சூழ்நிலையில் ஒரு நாள் சென்னைப் பட்டணத்திலிருந்து சேதுவுக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. அந்தக் கடிதம் ஏற்கனவே அவன் இருந்த பூங்குளத்துக்குப் போய்விட்டுப் பிறகு பாமணி விலாசத்துக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்பட்டிருந்தது. பூங்குளம் விலாசம் முத்து முத்தான எழுத்தில் அழகாக எழுதப்பட்டிருந்தது. அந்தக் கையெழுத்தை அதற்கு முன் எங்கோ பார்த்தது போல நினைவு சேதுவுக்கு வந்தது. ஆனால் அது எங்கே என்றுதான் அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

மிகுந்த ஆவலுடன் கடிதத்தைப் பிரித்தான். முத்து முத்தான எழுத்தில் தனக்கு எழுதியிருந்த விஷயத்தைப் படித்தான்.

அன்புடையீர், வணக்கம்.

'காலம்' என்ற பத்திரிகையில் 'காதலும் கடமையும்' என்ற தங்கள் அற்புதமான கதையைப் படித்தேன். தங்கள் கதை ஒரு விசேஷ காரணத்தால் என் மனத்தை வெகுவாகக் கவர்ந்து விட்டது. அதில் உள்ள உண்மையான உணர்ச்சி என் உள்ளத்தைக் கவ்விப் பிடித்து விட்டது. என் தோழி ஒருத்தி இருந்தாள். அவளை நான் என் சகோதரியைப் போலவே நேசித்தேன். அவள் தன்னுடன் படித்த வாலிபன் ஒருவனைக் காதலித்தாள். அவனைக் காதலித்த பாவத்துக்காக அவளை அவள் பெற்றோர்கள் படாதபாடு படுத்தி வைத்தார்கள். கல்லூரிப் படிப்பையே நிறுத்தி விட்டார்கள். அவள் காதலனைப் பார்க்க முடியாமல் செய்து வேறு ஊருக்கே அவளை அழைத்துக் கொண்டு போய் விட்டார்கள். அவர்கள் கண்டார்களா, காதலின் சக்தியை? அந்தப்பெண் தன் காதலனைத் தான் இருக்கும் இடத்துக்கு வரும்படி செய்தாள். அவர்கள் இருவரும் ஒரு நாள் இரவில் ஒருவருக்கும் தெரியாமல் அந்த ஊர் அம்மன் கோவில் சன்னதியில் திருமணம் செய்து கொண்டார்கள். திருமணக் கோலத்துடனேயே தன் அருமைக் காதலனைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்தாள் என் தோழி. ஓரிரவெல்லாம் தன் காதலனுடன் இன்ப வாழ்வு வாழ்ந்திருக்கிறாள். கடைசியில் அந்தப் பெண்ணின் அறையில் ஒருவரை யொருவர் கட்டிப் பிடித்தபடியே அந்த இளம் காதலர்கள் விஷம் அருந்திச் செத்துக் கிடந்தார்கள். அந்தக் கோலத்தைத்தான் மறு நாள் அவளைப் பெற்றவர்கள் காணும்படி இருந்தது. அந்தப் பெண் தங்கள் பெற்றோர்களுக்கு ஒரு கடிதம் எழுதி வைத்திருந்தாள். ''உயிரோடுதான் நான் என் காதலருடன் வாழுவதை நீங்கள் விரும்பவில்லை. என் உடலையும் என் காதலர் உடலையுமாவது தயவு செய்து ஒரே இடத்தில் சேர்த்துப் புதையுங்கள்!'' என்று எழுதி வைத்திருந்தாள். பெண்ணைப் பெற்ற அந்தக் கிராதகப் பெற்றோர்கள் அவளுடைய கடைசி விருப்பத்தைக் கூட நிறைவேற்றவில்லை. அவளைத் தனியே தான் கொளுத்தினார்கள். என் தோழியின் வரலாற்றை அறிந்த எனக்குத் தங்கள் கதை மிகவும் பிடித்திருந்தது. தங்கள் எழுத்தில் உண்மை ஒளியும் தெளிவும் கூடித் திகழுகின்றன. தாங்கள் மேலும் மேலும் இம்மாதிரி கதைகள் எழுதிப் பிரசுரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

நம் நட்பு முற்றி நாம் ஒருவரை யொருவர் நன்றாக அறிந்து கொள்ளும் நாளை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். தங்களுடைய அன்பார்ந்த பதிலைச் சீக்கிரமே எதிர்பார்க்கிறேன்.

சூரியகுமாரி

பெயரும் புகழும் ஒரு மனிதனுக்கு ஆனந்தத்தையே அளிக்கும் என்று கேள்விப்பட்



டிருக்கிறோமல்லவா? ஆனால் சேதுவுக்கு இந்தக் கடிதம் பயங்கர உணர்ச்சியையே தந்தது.

சூரியகுமாரியின் கடிதத்தை ஒரு முறைக்குப் பல முறை படித்தான். திடீரென்று அவனுக்கு வாழ்க்கையில் சந்தோஷம் ஏற்பட்டு விட்டது. உலகமே மகிழ்ச்சியுடன் இருப்பதாக எண்ணினான். மகிழ்ச்சியில்லாத மக்களே அவன் கண்களில் படவில்லை. வெறும் பொறாமைதான் சந்தோஷம் இல்லாமைக்குக் காரணம். மக்கள் ஒருவரையொருவர் அன்புடனும் இரக்கத்துடனும் பார்த்துப் பழகுவதற்குத் தொடங்கி விட்டால் மகிழ்ச்சியும் அமைதியும் உலகில் தானாகவே ஏற்பட்டு விடும் என்று எண்ணினான்.

ஜன்னல் கதவுகளைத் திறந்து விட்டுத் தன்னுடைய அறைக்குச் சென்றான். தன் மேஜைக்கு மேலே மாட்டியிருந்த மலர்விழி-

இளங்கோவன் படத்தை நன்றியறிதலுடன் பார்த்தான். அவர்கள் இருவரும் சேர்ந்து ஆனந்த கீதம் இசைப்பது போலிருந்தது அவனுக்கு. அந்த அற்புதமான ஆனந்தமான முடிவில்லாத இன்ப கீதத்தைக் கேட்டுக் கொண்டே சூரியகுமாரிக்கு மிகுந்த உற்சாகத்துடன் பதில் கடிதம் எழுதினான்.

அன்புடைய சூரியகுமாரிக்கு,

உங்கள் கடிதத்தால் என் வாழ்க்கையில் ஏற்பட்ட மாறுதல்களை என்னால் விவரிக்க முடியாது. தாங்களே அதை ஊகித்து அறிந்து கொள்ள வேண்டியதுதான்.

நான் ஒரு பெரிய எழுத்தாளன் அல்ல. ஆனால் இளங்கோவனைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். அவருடைய சீடன் நான். அவருடைய தொடர்பால் நான் ஏதோ எழுதக் கற்றுக் கொண்டேன். என்னைப் பற்றிய விவரங்களைச் சொல்லி விடுகிறேன். நான் ஒரு பள்ளிக்கூட ஆசிரியனாகச் சிறிது காலம் இருந்தேன். இப்பொழுது பாமணி கிராமத்தில் 'உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை' என்ற உண்மையைக் கண்டு கொஞ்சம் நிலம் வாங்கிச் சொந்தத்தில் விவசாயப் பண்ணை நடத்தி வருகிறேன். இவ்வுலகில் நான் தனி மனிதன். என்னிடம் அன்பு காட்டி வந்த என் ஆசிரியர் இளங்கோவன் இப்பொழுது மலேயாவில் இருக்கிறார். இருக்கிறாரா? இல்லையா என்பதுகூடத் தெரிந்து கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். அவருடைய அன்புக் குரலுக்கு ஏங்கியிருந்தேன். அது கிடைக்கவில்லை. ஆனால் தங்கள் அன்புக் குரல் கேட்கிறது. அது என் வாழ்க்கையில் எனக்குப் புதுத் தெம்பையும் உற்சாகத்தையும் அளிக்கிறது.

'காதலும் கடமையும்' என்ற கதையில் என் எண்ணத்தில் தோன்றிய கற்பனையைத் தான் எழுதினேன். அதுபோல் என் வாழ்க்கையில் ஏற்பட்டால் என் பெற்றோர்கள் அதற்கு எதிரிடையாக இருந்தால் அவர்களுடைய மனத்தை மாற்றி அந்தப் பெண்ணை நான் கல்யாணம் செய்து காட்டியிருப்பேன் என்ற உள்ள உணர்ச்சியுடன் தான் எழுதினேன். பெற்றவர்கள் மனம் நோகவும் கூடாது. அத்துடன் தான் விரும்பிய பெண்ணையே ஒருவன் திருமணம் செய்து கொள்ளவும் வேண்டும் என்பதுதான் என்னுடைய அழுத்தமான எண்ணம்.



இக் கதையில் வருவது போன்ற இளம் வாலிபர்களும் பெண்களும் ஏராளமாக இந்நாட்டில் இருக்கிறார்கள். என் குரல் அவர்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டும் என்ற நம்பிக்கையைத் தங்கள் கடிதம் எனக்கு அளிக்கிறது. என் வாழ்க்கையில் புது உற்சாகமும் ஆர்வமும் தோன்ற இது போதாதா? மீண்டும் ஒருதரம் தங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். என்றும் தங்களை மறக்க மாட்டேன்.

தங்கள் பதிலை எதிர்பார்க்கும், -சேது.

இந்தக் கடிதத்தைப் படித்து விட்டுச் சூரியகுமாரி உடனே ஒரு பதில் கடிதம் எழுதினாள்:

அன்புடைய சேது அவர்களுக்கு,

வணக்கம். தங்கள் கடிதம் கிடைத்தது. என்னிடம் அன்பு காட்டி எனக்கு எழுதிய கடிதத்துக்கு வந்தனம். தங்கள் உயர்ந்த மனோபாவம் தங்கள் கடிதத்தில் நன்கு பிரகாசிக்கிறது. தங்கள் நட்பு கிடைத்ததை நான் பெரும் பாக்கியமாகவே கருதுகிறேன். தாங்களும் தனிமையில் இருக்கிறீர்கள் என்பதை அறிந்ததும் எனக்கு என் தனிமைதான் முதலில் நினைவுக்கு வந்தது.

தங்கள் கதையைப் போலவே தங்கள் கடிதமும் என் உள்ளத்தைக் கவர்ந்தது.

தாங்கள் இனி தங்கள் தனி வாழ்க்கையை மாற்றிக் கொள்ளத்தான் வேண்டும். தங்கள் தனிமை மறைவதற்கு யோசனை செய்யுங்கள்.

நான் சொல்ல விரும்பியதை என்னால் தெளிவாகச் சொல்ல முடியவில்லை. தங்கள் அருமைத் தமிழ் நடைக்கு நான் எங்கே போவேன்? ஆனால் என்னிடம் நல்ல இதயம் இருக்கிறது: அன்பு இருக்கிறது.

சூரியகுமாரி

இவ்வாறு கதையைப் பற்றி எழுத ஆரம்பித்த பாராட்டுக் கடிதம், இலக்கியச் சர்ச்சைகளுக்கு வந்து பிறகு காதற் கடிதங்களாக மாறிக் கடைசியில் சேது-சூரியகுமாரி திருமணத்தில் வந்து முடிந்தது. அவர்களுக்குப் பிறந்த குழந்தைதான் நான்.

இப்படியாகத் தான் பிறந்த கதையைச் சொல்லி முடித்தான் பொன்னன்.

பொன்னனின் கதையைக் கேட்ட பொன்னிக்கு உடல் சிலிர்த்தது! ஒரு கணம் ஒன்றுமே பேச முடியாமல் இருந்தாள். அவளுக்கு ஏதோ கேட்க வேண்டும் போல் தோன்றியது. ஆனால் கேட்கலாமா வேண்டாமா என்று யோசித்தாள். கடைசியில் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவள் போல் தன்னுடைய மனத்தில் தோன்றியதைத் துணிந்து கேட்டாள்.

"எனக்குத்தான் பொன்னி என்று பெயர் என்றால் தங்களுக்குக்கூட இவ்வளவு பொருத்தமாகப் பொன்னன் என்றும் பெயர் சூட்டியிருக்கிறார்களே!" என்றாள்.

"இளங்கோவனுக்குப் பொன்னி நதியின் மீதுள்ள ஆவலை என் தந்தை சேதுவும் நன்கு அறிவார். அவர் நினைவாகத்தான் எனக்குப் பொன்னன் என்று பெயர் வைத்ததாக அப்பா என்னிடம் அடிக்கடி சொல்லுவார். நீதான் இளங்கோவனின் பெண் பொன்னி என்பதை அறிந்தால் அவர் எவ்வளவு மகிழ்ச்சி அடைவார் என்பதை நீ அறியமாட்டாய்! நாளைக்கே நம் திருமணத்துக்கு ஏற்பாடு செய்துவிடுவார். இனி திருமணத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை" என்று சொல்லிக் குதித்தான் பொன்னன்.

பொன்னியும் ஆனந்த மிகுதியில் பொன்னனைப் பிடித்துக் கொண்டு கூத்தாடினாள்.

*** *** ***

மறுநாள் சேதுவும் பொன்னனும் நல்லசிவம் வீட்டுக்குச் சென்றனர். சேதுவையும் பொன்னனையும் பார்த்ததும் பொன்னி பூரித்துப் போனாள். ஜன்னலுக்குப் பின்னால் நின்று பொன்னனை விழுங்கி விடுவதுபோல் பார்த்தாள். அவளுக்கு என்ன செய்வது என்றே தோன்றவில்லை. சம்பந்தமில்லாமல் பொன்னனும் சேதுவும் அமர்ந்திருக்கும் கூடத்துப் பக்கமாக இப்படியும் அப்படியும் வந்து விட்டுப் போவாள்.

சேது நல்லசிவத்திடம் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தான்:

''பொன்னியைப் பற்றிப் பொன்னன் சொன்னவற்றையெல்லாம் கேட்டேன். அவள்தான் 'வானவில்' பத்திரிகை ஆசிரியர் இளங்கோவனின் பெண் என்பதை நீங்கள் எப்படி நம்பினீர்கள்?'' என்று கேட்டான் சேது.

''புத்தபூமியில் கடைசிக்காலத்தில் யாருமே பொய் சொன்னதில்லை. எல்லாருமே உண்மைதான் பேசினார்கள். பொய் பேசி வாழவேண்டிய அவசியமே அங்குள்ளவர்களுக்கு அந்தச் சமயத்தில் ஏற்பட நியாயமில்லை. அதனால் மலர்விழி சொன்னதை நான் நம்பினேன்'' என்று சொன்னார் நல்லசிவம்.

''இதைத்தவிர அவள்தான் மலர்விழியின் மகள் என்பதற்கு வேறு ஒன்றுமே சான்று கிடையாதோ!'' என்றான் சேது.

''இதோ பாருங்கள். மலர்விழி கடைசியில் தன் கழுத்தில் போட்டிருந்த தங்கச் சங்கிலி இதுதான். தாலியுடன் அதில் இன்னொரு படமும் இருந்தது. மரண வேதனையிலும் மறக்காமல் இதைச் சொன்னாள். பொன்னி உயிருடன் இருந்து அவளுக்குக் கல்யாணம் செய்யும்பொழுது தன்னுடைய பரிசாக இதைக் கொடுக்கச் சொல்லி இருந்தாள்'' என்று சொல்லித் தான் கொண்டு வந்திருந்த தங்கச் சங்கிலியைச் சேதுவிடம் கொடுத்தாள் மங்கையர்க்கரசி.

அந்தச் சங்கிலியைக் கையில் வாங்கினான் சேது. அதில் இருந்த படத்தைப் பார்த்தான். பார்த்ததுதான் தாமதம். ''ஆமாம். இவர்தான் இளங்கோவன். என் இளங்கோவனே தான்!'' என்றான். கண்ணீர் விட்டான், கதறினான். அவனுக்கு எதிரில் அமர்ந்திருந்த எல்லாரும் கழன்றனர்; எல்லாமே கழன்றன!

சேதுவின் மனத்தைத் தேற்றுவதற்குள் நல்லசிவத்துக்குப் போதும் போதும் என்றாகி விட்டது. 'நட்பென்றால் இதுவன்றோ நட்பு' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டார். அவர் மனத்திலும் அவரை அறியாமல் ஒரு பிரிவுத் துயரம் ஏற்பட்டு விட்டது.

சேது ஒருமுறை நீண்ட பெருமூச்சு விட்டான். சற்று நேரம் ஆகாயத்தைப் பார்த்தான். ஏதோ புத்துணர்ச்சி பெற்றவன் போலத் தொடர்ந்து பேச ஆரம்பித்தான்.

''பொன்னா, நீ பாக்யசாலி! பொன்னியைத்தான் நீ திருமணம் செய்துகொள்ள வேண்டும். ஐயா நல்லசிவம் அவர்களே! உங்களுக்கு நான் எப்படி நன்றி தெரிவிப்பது என்றே தெரியவில்லையே! உங்கள் பெயரைப்போலவே உங்களுடைய மனமும் அமைந்திருக்கிறதே!'' என்று சொல்லி நல்லசிவத்தைக் கையெடுத்துக் கும்பிட்டான். மங்கையர்க்கரசியை வணங்கினான். அவர்கள் இருவருக்கும் பொன்னனை நமஸ்காரம் செய்துகொள்ளச் சொன்னான். வெறி பிடித்தவன் போல் பொன்னியின் கைகளைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் விட்டான். ''எப்படியெல்லாம் இருக்க வேண்டிய பெண். எவ்வளவு பெரிய மனிதரின் பெண்! இப்படி அநாதையாக, ஆதரவற்றவளாக இருக்கிறாயே, அம்மா!'' என்று சொன்னான்.

''என்ன? நீ அநாதையா? உன் தந்தையின் உத்தம குணத்துக்கும் உன் தாயின் இதயத்துக்கும் உன்னுடைய வாழ்க்கையே நல்ல உதாரணமாக அமைந்து விட்டது. நீ அநாதையே இல்லை. நல்லசிவம் தம்முடைய மகளைப் போல் அல்லவா உன்னை வளர்த்துக் காப்பாற்றியிருக்கிறார்? நல்லது செய்தவர்களை, அவர்கள் குடும்பத்தைக் கடவுள் எப்பொழுதுமே கைவிடுவதில்லை'' என்று ஏதேதோ சொல்லிக் கொண்டே போனான். அவசரம் அவசரமாகப் பொன்னனை அனுப்பித் தன் மனைவி சூரியகுமாரியை அழைத்து வரச் சொன்னான். அடுத்த முகூர்த்தத்திலேயே பொன்னனுக்கும், பொன்னிக்கும் திருமணம் நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து முடித்தான்.

*** *** ***

சேதுவின் வீட்டில் விடியற்காலை வேளையில் நாகசுர இன்னிசை வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. சேதுவின் நண்பர்களும் இளங்கோவனின் ரசிகர்களும் இன்னும் பல ஊர் நண்பர்களும் குடும்பம் குடும்பமாக வந்து கொண்டிருந்தனர். எங்குமே மலர்களின் மணம், சந்தன மணம், பன்னீர் வாசனை. மலர் சுமந்த ஒய்யாரக் கொண்டைகளுடன் எழில்மிக்க பின்னல் சடைகளுடன் பட்டுப் புடவைகளின் சலசலப்பும், பலவித நகைகளின் மினுமினுப்பும் சேர இளம் பெண்கள் பெருமிதத்துடன் வளைய வளைய வந்து கொண்டிருந்தனர். குறுக்கும் நெடுக்குமாகச் சென்று கொண்டிருந்தனர். ஆண்களின் கூட்டம் ஏதேதோ அரட்டைகளில் ஈடுபட்டிருந்தன. குழந்தைகளின் குறும்புத்தனம் எல்லை மீறி நின்றது.

வந்தவர்களை யெல்லாம் வரவேற்றுக் கொண்டிருந்தார்கள் நல்லசிவமும் மங்கையர்க்கரசியும். அவர்களுக்குப் பின்னால் நின்று

கொண்டு' சேதுவும் சூரியகுமாரியும் சந்தனமும், சர்க்கரையும், மலர்க் கொத்தும் கொடுத்துக் கொண்டிருந்தனர்.

மலர்விழியின் வளர்ப்புத் தந்தை பெரியசாமி திருமணத்துக்கு வந்திருந்தார். இளங்கோவன் சொத்துக்களை யெல்லாம் பொன்னியின் பெயருக்கு எழுதி வைத்து விட்டு மிகுந்த மனத் திருப்தியுடன் திருமணத்தின் சிறப்புக்காக மூச்சு விடாமல் வேலை செய்து கொண்டிருந்தார்.

பொன்னனும் பொன்னியும் மணக் கோலத்துடன் மணவறையை நோக்கி வந்தனர். சேதுவுக்கும் சூரியகுமாரிக்கும், நல்லசிவத்துக்கும் மங்கையர்க்கரசிக்கும் வணக்கம் செலுத்தினர். தங்களை வணங்க வந்த பொன்னனையும் பொன்னியையும் அழைத்துக் கொண்டு போய்ப் பெரியசாமியை முதலில் வணங்கச் சொன்னார்கள். பெரியசாமி பொன்னனையும் பொன்னியையும் சேர்த்து அணைத்துக் கொண்டு மனமார வாழ்த்தினார். ஆனந்த மிகுதியில் அவர் கண்களில் நீர் சுரந்தது. அவருடைய அன்புப் பிடியிலிருந்து விடுபட்டு அவர்கள் மணவறைக்குச் சென்றனர். சற்று நேரத்துக் கெல்லாம் கெட்டி மேளம் கொட்டியது. வாழ்த்தொலிகள் கிளம்பின. மணமக்கள் மீது மஞ்சள் அரிசியும் மலர்களும் மழைபோல் பொழிந்தன.

பொன்னியின் கழுத்தில் தாலியைக் கட்டி மூன்று முடிச்சுகளைப்போட்டான் பொன்னன்.

பொன்னனின் கழுத்தில் ஆசையோடு மலர் மாலையைச் சூட்டினாள் பொன்னி.

கல்யாணத்தை நடத்தி வைத்த மயிலாப்பூர் தமிழ் ஆசிரியர் திருவடிகளில் மணமக்கள் வணங்கி எழுந்தார்கள். அன்பும் அறமும் சுடர்விடும் அந்தத் தமிழாசிரியர் திருமுகத்தில் ஒரு பெருமிதம் நிலவியது. "உலக மக்கள் எல்லாரும் ஒரே சாதியைச் சேர்ந்தவர்கள். மனிதர்களுக்குள் உயர்வு — தாழ்வு என்பதே இல்லை. நீங்கள் இருவரும் மனம் ஒன்றி இன்பத்தோடு வாழுங்கள். உங்கள் வாழ்வில் எப்பொழுதும் இன்பம் பொங்க ஆண்டவன் அருள்புரியப் பிரார்த்திக்கிறேன்" என்று கருணை ததும்பும் குரலில் நல்வாழ்த்துக் கூறினார் இரு மயிலைத் தமிழ் ஆசிரியர்.

மணமக்களுக்கு மலர்விழியின் அன்புப்பரிசாக அவள் அணிந்திருந்த தங்கச் சங்கிலியைக் கொடுத்தாள் மங்கையர்க்கரசி.

அப்பொழுது கிராமத்துக் கோயிலின் பெரிய மணி ஓசை 'டாண் டாண்' என்று ரீங்காரம் செய்தது. மலர்விழியும் இளங்கோவனும் வானவீதியில் வந்து நின்று மணமக்களை ஆசி கூறுவது போல் இருந்தது அது.

பொன்னனையும் பொன்னியையும் விருந்தினர்கள் சூழ்ந்து கொண்டு கேலி செய்து கொண்டிருந்தனர். பொன்னியைப் பார்த்துப் பொன்னன் கேலி செய்து கொண்டிருந்தான். 'இனிமேல் என்னைப் பார்ப்பதற்குக் காவேரிக் கரைக்கு வர வேண்டியதில்லை' என்றான். அவள் பதில் பேசாமல் புன்முறுவல் பூத்தாள். அவள் மனக்கண் முன்னால் நுங்கும் நுரையுமாகச் செல்லும் காவேரி நதியும், காவேரிக் கரையில் சிறகடித்துப் பறக்கும் பறவைக் கூட்டங்களும் காட்சி அளித்தன. அவள் சிந்தனையும் சிறகடித்துப் பறந்தது. 'சட்' டென்று தன் தாய் தனக்கு அளித்த தங்கச் சங்கிலியை எடுத்து வந்தாள். பொன்னனிடம் அதைக் காட்டி ஏதோ சொல்ல வேண்டும் என்று நினைத்தாள். பொன்னன் ஏதோ சிந்தனையில் இருந்தான். பொன்னியையும் அவள் காண்பித்த சங்கிலியையும் கவனித்ததாகவே தெரியவில்லை. பொன்னிக்குப் பொல்லாத கோபம் வந்துவிட்டது. அவன் கிராப்புத் தலை முன்குடுமியை ஒரு கையால் தூக்கிப் பிடித்து இன்னொரு கையில் இருக்கும் தங்கச் சங்கிலியையும், அதில் இருக்கும் இளங்கோவன் படத்தையும் காண்பித்தாள். 'இந்தப் படத்துக்குப் பின்புறத்திலே உங்கள் படத்தையும் வைத்துக் கொடுக்க வேண்டும்' என்றாள். இதற்குத் தானா என்னை இத்தனை பாடுபடுத்தி விட்டாய்' என்று சிரித்தான் பொன்னன். இவ்வாறு மனத்துக்குள் கற்பனை செய்து பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தாள் பொன்னி.

யாரோ ஒரு பெண்மணி பாரதியாரின் 'எத்தனை கோடி இன்பம்' என்ற பாடலை இனிமையுடன் பாடிக் கொண்டிருந்தாள். சட்டென்று பாட்டு நின்றது. அங்கு இது வரையில் நிலவி வந்த கும்மாளமும் குதூகலமும் 'பொக்'கென்று அடங்கிவிட்டன. மணப் பெண் பொன்னியை அங்கு காணவில்லை. நாலுபுறங்களிலிருந்தும் "பொன்னி எங்கே? பொன்னி எங்கே?" என்று குரல்கள் எழுந்தன. வீட்டின் பல மூலைகளிலும் பொன்னியை ஓடி ஓடித் தேடினர். பொன்னன் மட்டும் படபடக்கவில்லை. பொன்னி இருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டான்.

தன் தந்தையின் அறையை நோக்கி ஆவலுடன் ஓடினான். அந்த அறைக்குள்ளே மலர்களால் அலங்காரம் செய்து வைத்திருந்த மலர்விழி-இளங்கோவன் படத்துக்கு முன்னால் பொன்னி கைகூப்பி வணங்கி நின்று கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்னால் அமைதியாகச் சென்று பொன்னனும் அந்த அமர உலகத்து அன்புத் தம்பதிகளுக்குக் கைகூப்பித் தன் வணக்கத்தையும் செலுத்தினான்.

அந்தச் சமயத்தில் மீண்டும் பாரதியின் குரல் ஒலித்தது. "எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா! இறைவா!!" என்று கவியரசர் பாரதியாரின் பாடலை அந்த இளம் பெண்மணி உணர்ச்சி நிறைந்த இனிய குரலில் பாடியது கேட்டுக் கொண்டே இருந்தது.



# பைக்ஸ் மலையுச்சியின் மிகக் குறுகலான வளைவுகளில்



## இந்த டயர் அபாயமின்றிச் செல்லக்கூடியதென நிரூபித்துள்ளது

புழுதியும் கரடுமுரடான சரல்கற்களும் "நிரம்பிய" மிகக் குறுகிய வளைவுகளுள்ள பைக்ஸ்' மலை உச்சி மீது ஏறும் மோட்டார் பந்தயத்தில், தொடர்ந்து 29 தடவைகள் அனாயாசமாக வெற்றிபெற்ற கார்களில் **பயர்ஸ்டோன்** டயர்கள் பொருத்தப்பட்டிருந்தன. இந்த டயர்களை உற்பத்தி செய்வதில் கையாளும் அதே தொழில் நுட்பமும், உயர்தர கண்காணிப்புமே, உங்கள் காரில் பொருத்தப்பட்டுள்ள **பயர்ஸ்டோன்** டயர்களின் அதிகப்படியான பாதுகாப்பு மற்றும் நம்பகத் தன்மைக்கு உத்திரவாதம் அளிக்கின்றன.

# Firestone

## பயர்ஸ்டோன்

**நியூ டீலெக்ஸ் சாம்பியன் • டியூப்லெஸ்** அல்லது **டியூபுள்ளது**

**மன நிம்மதியுடன் பிரயாணம் செய்வதற்கென்றே தயாரித்த டயர்**

# செல்வமும் சுதந்திரமும்

கெ. சந்தானம்

## 3. புரட்சிகரமான மாறுதல்கள்

விவசாய சகாப்தத்தில் சமூகம் அனேகமாகப் பரம்பரையாக வந்திருக்கும் சம்பிரதாயங்களைக் கொண்டே வாழ்ந்து வந்தது. அவ்வப்போது மதத்தைப் பற்றித்தான் வாத விவாதங்கள் நடந்தன. மிகவும் கொடிய அரசனாக இருந்தால் அரசியல் கலகங்களும், புரட்சிகளும் ஏற்பட்டன. சாதாரணக் காலங்களில் மனிதர் தம் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தனர். இதற்கு மாறாக இயந்திர சகாப்தத்தில் பிரசாரமும் விளம்பரமும் மன அமைதியைக் கலைத்து, பழக்க வழக்கங்களை மாற்ற ஓயாமல் முயற்சி செய்கின்றன. இதற்குப் பல காரணங்களுண்டு. அச்சுத் தொழில் பிரபலமாகித் தினசரிப் பத்திரிகைகளும், வார மாதாந்திரப் பத்திரிகைகளும் பெரும் தொழில்களாகி விட்டன. இடைவிடாமல் புதிய செய்திகளையும், மனத்தைக் கவரும் வியாசங்களையும் பிரசுரிக்காத பத்திரிகைகள் வாசகர்களை இழந்து முடிவில் மறைந்து விடும். தனி முதலாளிகள் போட்டி போட்டுக் கொண்டு உற்பத்தி செய்யும் சாமான்களை விற்பனை செய்வதற்கு விளம்பரம் அத்தியாவசியமானது. ரேடியோ டெலிவிஷன் கருவிகளும் இவைகளுக்குப் பயன்படுகின்றன. இயந்திரத் தொழிலுக்கு ஓரளவு கல்வி அவசியமானதால், சர்வஜனக் கல்வி இயந்திர சகாப்தத்தின் ஒரு முக்கிய அங்கமாகும். அதனால் பிரசாரத்தின் சக்தியும் வளர்ந்து வருகிறது. போக்குவரத்து சாதனங்களின் பெருக்கால் பிரசாரகர்கள் விரைவில் வெகு தூரம் சென்று தமது கொள்கைகளைப் பிரசாரம் செய்வது சாத்தியமாகிறது. பொதுமக்களைப் பிரசாரத்தினால் தம் வசப்படுத்துவது அரசியலின் ஆதாரமாகி விட்டது. இது ஜனநாயகத்தில் மட்டுமல்ல; எதேச்சாதிகாரிகளும் பிரசாரத்தின் மகிமையை உணர்ந்து அதைத் திறமையுடன் கையாண்டு வருகின்றனர். நடுநிலைமை வகித்துப் பொருள்களை ஆராய்வது மிகவும் கஷ்டமாகி வருகிறது. ஏதாவது ஒருவிதப் பிரசாரத்துக்கு அடிமையாகாமல், அதிலிருந்து தப்பிக்கொள்ளும் மனிதர்கள் அபூர்வமாகி வருகின்றனர்.

விவசாய சகாப்தத்தில் அரசன் மூலமாகவே அரசாட்சி நடந்து வந்தது. சிற்சில இடங்களில் குடியரசு இருந்தபோதிலும், ஒரே பட்டணத்திலும் அல்லது 10, 20 மைல் சுற்றளவுள்ள கிராம வட்டங்களிலுமே அது சாத்தியமாக இருந்தது. பெரிய தேசங்களை ஆளுவதற்கு வேண்டிய வசதிகள் இல்லை. அரசனும், பிரபு கோஷ்டிகளும், சைனியமுமே அரசியல் கருவிகளாக இருந்தன. வழக்கப்படி வரி வாங்கி மதத்தில் தலையிடாமலிருக்கும் வரையில் இவ்வித ஆட்சி முறை மக்களுக்குப் போதியதாக இருந்தது. கல்வியும், கலைகளும் கைத்தொழில்களும் அரசாங்க உதவியை அதிகமாக எதிர்பார்க்கவில்லை. அதனால் குந்தகம் ஏற்படாமல் இருந்தாலே போதும்.

இயந்திரத் தொழில் தோன்றி, நகரங்கள் பெருகி, செல்வம் வளர்ந்து, முதலாளிகளுக்குள் போட்டியும் அவர்களுக்கும் தொழிலாளிகளுக்கும் வேற்றுமையும் வளர அரசாங்கத்தின் அலுவல்களும் அதிகரித்தன. கல்வி, சுகாதாரம், நல்ல ரோடுகள் அமைப்பது விஞ்ஞான ஆராய்ச்சி முதலிய பணிகள் கூடின. இவைகளுக்காக லட்சக்கணக்கான உத்தியோகஸ்தர்கள் நியமிக்க வேண்டியிருந்தது. அவர்களின் சம்பளத்துக்காக ஏராளமான வரி வாங்க வேண்டி வந்தது. இயந்திரத் தொழில் வளர்ந்திருக்கும் சமூகங்களில் நாட்டின் வருமானத்தில் நூற்றில் 25 லிருந்து 30 பாகம் வரையில் வரியாகச் சர்க்கார் எடுத்துக் கொண்டு விடுகின்றனர். முதலாளித்துவம் ஓங்கி வரும் தேசங்களில் இந்த நிலைமையென்றால், பொது நலத்தையும் பொது உடைமையையும் லட்சியமாகக் கொண்ட தேசங்களில் செல்வத்தின் மீது சர்க்கார் ஆதிக்கம் மிகவும் அதிகமென்று கூறத் தேவையில்லை.

இவ்வாறு லட்சக்கணக்கான சிப்பந்திகளையும், சமூகத்தின் செல்வத்தையும் நிர்வகிப்பதற்கு ஒரு பெரிய அரசாங்க யந்திரம் தேவையாக இருக்கிறது. அது ஓயாமல் தனது வேலைகளையும், மக்களுக்குச் செய்யும் சௌகரியங்களையும் பிரசாரம் செய்து பிரஜைகளின் ஆதரவையும், ஒத்துழைப்பையும் நாட வேண்டியிருக்கின்றது. ஜனநாயகம் பல அரசியல் கட்சிகள் மூலமாகவே நடைபெறக் கூடும். எதேச்சாதிகாரம் ஒரு பெருங் கட்சி மூலம் நடைபெற முயற்சி செய்கிறது. ஆனால் அதில் பிளவுகள் ஏற்படாமல் சமாளிப்பதற்கு அவ்வப்போது பல பிரமுகர்களையும், தொண்டர்களையும் கட்சியிலிருந்து நீக்கி, தண்டித்துக் கொடுங்கோல் முறைகளைப் பின்பற்றுவது அத்தியாவசியமாகிறது. தனது வாழ்நாளில் தெய்வமாகப் பாவிக்கப்பட்ட ஸ்டாலினை அவனது ஆப்த சகாக்கள், இறந்த பிறகு கொடுங்கோல் அரக்கனென்று

ஜாஷித்து அவன் பெயரைக்கூட ருஷ்ய மக்கள் சொல்லக் கூடாதவண்ணம் கட்டுப்படுத்தியிருப்பதொன்றே இதற்குப் போதிய சான்று.

மேற்கூறியதிலிருந்து இயந்திர சகாப்தத்தில் செல்வத்துக்கும் சுதந்திரத்துக்குமுள்ள சம்பந்தம் விவசாய சகாப்தத்தில் இருந்ததை விட மிகவும் மாறியிருக்கும் என்பது வெளிப்படை. ஓரளவு இயந்திரத் தொழில் பெருகி, பெரும்பாலும் விவசாய சகாப்தத்தி லிருந்துவரும் பாரதம் போன்ற நாடுகளில் இப் பிரச்னையில் பெரும் குழப்பம் இருப்பது ஆச்சரியமல்ல. ஒருசாரார் தாம் பூராவாக இயந்திர சகாப்தத்தில் இருப்பதாகக் கருதி அதற்கேற்ற செல்வ முறைகளையும், சுதந்திரங்களையும் நாடுகின்றனர். மற்றொரு சாரார் இயந்திர சகாப்தத்தை வெறுத்து, அதை விட்டு விலகியிருக்க விரும்பி, விவசாய சகாப்தத்தை மீண்டும் நிலைநிறுத்துவதற்குச் சாதகமான பொருளாதாரத்தையும் அரசியலையும் கோருகின்றனர். இரண்டுக்கும் ஆசைப்பட்டுத் தவிப்போர்களுக்கும் குறைவில்லை.



இந்தக் குழப்பங்களையெல்லாம் தீர்த்து முடிவான வழிகாட்ட எவராலும் முடியாது. காலமும் அனுபவமுமே அதைச் செய்ய முடியும். அறிவைக் கொண்டு முரண்பாடான சக்திகளையும், லட்சியங்களையும் ஒத்தித்து அவைகளால் ஏற்படும் சிக்கல்களையும், கஷ்டங்களையும் கூடிய வரையில் குறைத்து விடுவதற்கு முயலுவதே மனித முயற்சியால் சாதிக்கக் கூடியது.

## 4. உரிமையும், சுதந்திரமும்

எம்மொழியிலும் ஒரு பொருளுக்குப் பல பதங்கள் வழங்குகின்றன. இதனால் பல சௌகரியங்கள் உண்டு. ஒரே பதத்தைக் கேட்டுக் காது அலுத்துப் போகிறது. கவிதைக்கும், உபன்யாசத்துக்கும் விசித்திரமும், இனிமையும் கொடுப்பதற்கு ஓர்த்தமுள்ள பல பதங்கள் பிரயோசனப்படுகின்றன. ஆனால், சிக்கலான பிரச்னைகளை ஆராயும் பொழுது இது சிறிது கஷ்டத்துக்கும் குழப்பத்துக்கும் இடமளிக்கிறது. சுதந்திரத்தைப் பற்றி ஆராயும் பொழுது அதற்கும் உரிமைக்கும் உள்ள தொடர்பை விளக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

நமது அரசியல் திட்டத்தில் 'மூல உரிமைகள்' என்ற ஓர் அத்தியாயம் இருக்கிறது. அதில் குறிக்கப்படும் உரிமைகளாவன; 1. சட்டத்தின் முன் சமத்துவம்; 2. அரசாங்க உத்தியோகங்களுக்குச் சமசந்தர்ப்பம்; 3. தீண்டாமை விலக்கு; 4. பேசுவதற்கு; சமாதான முறையில் கூட்டம் கூடுவதற்கு; சங்கங்கள் ஏற்படுத்துவதற்கு; பாரதம் முழுதும் தடையின்றிச் சஞ்சாரம் செய்வதற்கு; பாரதத்தில் இஷ்டப்பட்ட இடத்தில் வசிப்பதற்கு; எவ்விடத்திலும் சொத்து வாங்கி, அனுபவித்து, விற்பதற்கு; விரும்பிய தொழில் செய்வதற்குத் தடையில்லாமலும் 5. ஓர் குற்றத்துக்காக இரு தடவை தண்டிக்கப்படாமை; 6. சர்க்காரால் எதேச்சாதிகாரமாகச் சிறைப்படுத்தாமை; 7. பிற மனிதரை அடிமைப்படுத்தி வியாபாரம் செய்தலும், கூலி கொடுக்காமல் பலாத்காரமாக வேலை வாங்குதலும் குற்றமாகுதல்; 8. மனச்சாக்ஷியை அனுசரித்து ஓர் மதத்தைச் சேர்தல், அனுஷ்டித்தல், பிரசாரம் செய்தல்; 9. ஓர் சமயத்தினர் தமக்கு இஷ்டப்பட்ட சமய ஸ்தாபனங்களை அமைத்து நிர்வகித்தல்; 10. எந்த அரசாங்கப் பள்ளியிலும் மதக் கல்வி போதிக்காமல் இருத்தலும், சர்க்கார் உதவி பெறும் எப் பள்ளியிலும் மாணவர்களுக்குத் தங்கள் பெற்றோர்களின் அனுமதியின்றிக் கட்டாயமாக மத போதனை நடத்தலும்; 11. ஒரு பிரதேசத்தில் சிறுபான்மைமொழியினருக்குத் தங்கள் மொழியில் போதிக்கப்படுதலும், பள்ளிகள் நடத்தலும்; 12. சிறுபாலார் தங்கள் தங்கள் நாகரிகத்தை அனுஷ்டித்தல், எழுத்து முறைகளை உபயோகித்தல், சர்க்கார் கலாசாலைகளில் சேர்ந்து படித்தல்; 13. பதிலீடு கொடுக்கப்படாமல் சொத்தைப் பறிமுதல் செய்யாமை; 14. உரிமைகள் பாதிக்கப்பட்டால் அகில பாரத முக்கிய நீதிமன்றத்துக்கு மனுச் செய்து கொள்ளுதல்.

இந்த உரிமைகளில் ஒவ்வொன்றுக்கும் நிபந்தனைகளும், விலக்குகளுமுள்ளன; அவற்றை இங்கு ஆராய வேண்டியதில்லை.

இதில் 4-வது உரிமையாக ஏழு வகையான சுதந்திரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. தீண்டாமை விலக்கு சுதந்திரத்தைக் குறைக்கும் நிபந்தனை என்று தோன்றலாம். உண்மையில் அது பழங்கால வழக்கமான தீண்டத் தகாத சாதியினர் மற்ற மக்களைப் போல் சமூகத்தில் வாழ முடியாமல் தடுக்கும் அநியாயத் தடைகளை நீக்கி அவர்களுக்குச் சம சுதந்திரமளிப்பதேயாகும். தன் மதத்தை யொட்டி ஒழுகுதலும் அதனைப் பிரசாரம் செய்வதும் சுதந்திரங்களாகவே பாவிக்கப்பட வேண்டும்.

உண்மையில் சுதந்திரத்துக்கும், உரிமைக்கும் தெளிவான வித்தியாசம் கூற முடியாது; பொதுவாக இயற்கையான பிரவிருத்திகளைச் சட்ட மூலமாகவும், சம்பிரதாயங்கள் வாயிலாகவும் தடுக்காமல் இருப்பது சுதந்திரம். அப்படியின்றிச் சட்ட மூலமாகவோ சம்பிரதாயத்தாலோ கிடைக்கும் செயற்கை வசதிகளுக்கு உரிமையென்றும் கூறுவது நலமென்று தோன்றுகிறது. இயற்கையில் சொத்தென்று ஒன்றுமில்லை. அது சமூக சிருஷ்டியாதலால் சொத்து சுதந்திரத்தைக் காட்டிலும் சொத்துரிமையைப் பற்றிப் பேசுவது பொருத்தமாக இருக்கிறது. அவ்வாறே பேச்சு சுதந்திரம் என்றுரைப்பது மிகவும் சகஜமாக

இருக்கிறது. பேச்சுரிமை யென்னும்பொழுது, அது அதிகப் பிரசங்கத்துக்கு அனுமதியாகத் தோன்றுகிறது.

எந்தச் சமூகத்திலும், எவ்வித சுதந்திரமும், உரிமையும் ஓரளவு கட்டுப்பட்டே இருக்கும். எதிலும் வரம்பின்றி இருந்தால் சமூக வாழ்க்கை சாத்தியப்படாது. மேற்கூறிய கருத்தில் இப் பதங்களை உபயோகித்தால், உரிமையின் எல்லைகளுக்கும், சுதந்திரத்தின் வரம்புகளுக்கும் ஓர் முக்கிய வித்தியாசம் உண்டு. சுதந்திரத்தின் வரம்புகள் சமூகத்தின் எல்லா அங்கத்தினர்களுக்கும் பொதுவாக இருக்கும். நன்ருகப் பேசுகிறவர்களுக்கு மட்டும் பேச்சு சுதந்திரமில்லை. தட்டுத் தடுமாறி, குழப்பமாகப் பேசுகிறவர்களுக்குமுண்டு. சுதந்திரத்துக்கு ஒரு பொது நிபந்தனையுண்டு. ஒருவர் சுதந்திரம் மற்றொருவர் சுதந்திரத்தைப் பாதிக்கலாகாது. எல்லோரும் தம் இஷ்டப்படி பேசுவதோ, தமது மதத்தைப் பின்பற்றுவதோ சாத்தியமானது. ஆதலால், பேச்சு சுதந்திரமும், மத சுதந்திரமும் மனித சமூகத்தின் மூல சுதந்திரங்களாகக் கருதப்படுவதில் யாதொரு கஷ்டமுமில்லை. ஆனால் அவசியமின்றி, அநியாயமாக மற்றவர்களுக்கு மனம் புண்ணுகும்படியோ, மான பங்கமுண்டாகும் விதத்திலோ, பண நஷ்டம் ஏற்படக்கூடிய முறையிலோ ஒருவரும் பேச அனுமதிக்கப்பட முடியாது. அம்மாதிரி எல்லோரும் செய்தால், சமூகத்தில் கலகம் உண்டாகி அது சீரழிந்து விடும்.

உரிமையின் போக்கு வேறு: டாக்டர், வக்கீல் தொழில்களைச் செய்வதற்குத் தகுதி யிருப்பவர்களுக்குத்தான் அத் தொழில் செய்து சம்பாதிக்கும் உரிமையுண்டு. எல்லோரும் அந்தத் தகுதி பெறலாம். அப்படிப் பெற்றவுடன் தொழில் புரிய உரிமையுண்டு என்ற காரணத்தாலேயே அது ஒரு பொது உரிமையாகப் பாவிக்கப்படுகிறது. ஆனால் ஒரு மாணவனுக்கு வைத்தியக் கல்லூரியில் இடம் கிடைத்து, ஐந்து வருஷங்களும் சரியாகப் படித்துத் தேறிய பின்னரே இவ்வுரிமை கிட்டுமாதலால் வெகு சிலருக்கே இது பயன்படும்.

சொத்திருப்பவர்களுக்கே அதனைப் பற்றிய உரிமைகளுமுண்டு. மற்றவர்கள் தங்கள் கூலியில் மிச்சம் பிடித்துச் சொத்து சேர்க்கும் உரிமையைச் சொத்துரிமையாகப் பாவிக்கலாம். ஆனால் அன்ருடம் பிழைப்பதே பெரும் கஷ்டமாக இருக்கும் கோடிக்கணக்கான பாரதமக்களிடம் சொத்துரிமையைப் பற்றிப் பேசுவது அவர்களைப் பரிகாசம் செய்வது போலாகும்.

எப்படி எவ்வித சுதந்திரத்துக்கும் நிபந்தனைகளும், தடைகளும் இருக்கின்றனவோ, அவ்வாறே, ஒவ்வோர் உரிமைக்கும் தகுந்த கடமையும் இருக்கிறது. இயந்திர சகாப்தத்தை ஆதரிப்போர் அதன் உரிமைகளைப் பற்றிப் புகழ்வர். அதனை எதிர்ப்போர் அதன் கடமைகளை மிகைப்படுத்துவர். ஆனால் உரிமையும், கடமையும் உடலும் நிழலும் போல் என்றும் கூடவே இருக்கும்.

சஞ்சார சகாப்தத்தில் உரிமைகளில்லை: ஏறக்குறைய பூர்ண சுதந்திரமுண்டு. விவசாய சகாப்தத்தில் கீழ் வகுப்பாருக்கும், பெண்களுக்கும் சுதந்திரமுமில்லை, உரிமைகளுமில்லை. மத்தியதர வகுப்பாருக்கு ஓரளவு சுதந்திரமும், சில உரிமைகளுமுண்டு. இயந்திர சகாப்தத்தில் எவருக்கும் சுதந்திரமில்லை, எல்லோருக்கும் சில உரிமைகளுண்டு. சிலருக்குப் பல உரிமைகளுண்டு.

தற்காலத்தில் நாகரிகத்திலும், பலத்திலும் செல்வத்திலும் உயர்ந்த நாடுகள் இயந்திர சகாப்தத்தில் முன் நிற்கும் நாடுகளே. அவற்றின் செல்வ உற்பத்தி பிரிவினைகளைப் பற்றியும், அந்த சமூகங்களின் உரிமைகளையும், சுதந்திரங்களையும் பற்றியுமே பத்திரிகைகளிலும், இதர பிரசார வழிகளிலும் ஓயாமல் சிந்திக்கப்படுகின்றது. பாரதத்தைப் போல் சிறிதளவு இயந்திர சகாப்தத்திலும், பெரும்பாலும் விவசாய சகாப்தத்தில் வாழும் நாடுகளின் பிரச்னைகளை ஒழுங்காக ஆராய்வது மிகவும் சிரமமானது. இதைத் திரிசங்கு சகாப்தம் எனலாம்.

பின்வரும் கட்டுரைகளில் இயந்திர சகாப்தத்தில் பூரண விருத்தியடைந்த நாடுகளின் செல்வத்துக்கும், சுதந்திரத்துக்குமுள்ள தொடர்புகளை முதலில் ஆராய்ந்து, முடிவில் திரிசங்கு சகாப்தத்தில் இருந்து வரும் நாடுகளின் பிரச்னைகள் கவனிக்கப்படுகின்றன.

# முற்றிலும் உண்மையே!

**மெக்கானிக்:** சந்தேகமேயில்லே! ஹிந்த அம்பாஸடர் ஸைக்கிளின் புதிய, நுட்பமாக தயாரித்த, ரிம்கள் சிறந்தவை என்பது முற்றிலும் உண்மை.

**ஸைக்கிளிஸ்ட்:** ஆம். அவைகள் நேர்த்தியாயும், பளபளப்பாயும் இருக்கின்றன.

**மெக்கானிக்:** மிகுந்த கவனத்துடன் குரோமியம் பிளேட் செய்யப்பட்டவை. அவைகள் எங்குமுள்ள உறுதியான ரிம்களைப்போல், சிறந்தவை என்பதை ஞாபகத்தில் வையுங்கள்

**ஸைக்கிளிஸ்ட்:** அவைகள் எப்பொழுதும் பளபளப்பாய் இருக்குமா ?

**மெக்கானிக்:** ஆம், குரோமியம் பிளேட் மழைக்கால இன்னல்களை சமாளிக்கவல்லது!

**ஸைக்கிளிஸ்ட்:** சந்தோஷம். ஹிந்த் அம்பாஸடர் ஸைக்கிள்தான் எனக்கு ஏற்றது!







## ஹிந்த் அம்பாஸடர்

ஹிந்த் ஸைக்கிள்ஸ் லிமிடெட் 250 வொர்லி பம்பாய் 18.

ASP/HC-72

# பொங்கிவரும்



அத்தியாயம் 5

## கமலத்தின் கண்ணீர்

மல்லிகாவினுடைய தகப்பன் கண்ணப்பனுக்குச் செண்பகபுரத்தில் கொஞ்சம் நிலம் இருந்தது. அருமை மனைவியும் மழலை பேசும் மகள் மல்லிகாவும் இருந்தார்கள். கிராமத்தார் கண்ணப்பனை மதித்து மரியாதை செலுத்தினார்கள். பிரமாதமாக வருமானம் ஒன்றும் இல்லாவிட்டாலும் தன் சிறிய குடும்பத்தைப் பாதுகாக்கும் அளவுக்கு வருமானம் நிலத்திலிருந்து வந்தது. அவர்கள் திருப்தியுடன் வாழ்ந்தார்கள்.

மல்லிகாவுக்கு எட்டு வயதானபோது கமலம் மறுபடியும் கருவுற்றாள். கண்ணப்பனுக்குக் கட்டுக்கடங்காத குதூகலம். தனக்குப் பின்னும் தன்னுடைய நிலத்தை ஆளமகன் பிறக்கப்போகிறான். நீண்ட நாட்களுக்குப் பிறகு மற்றொரு குழந்தை வீட்டில் தவப் போகிறது. 'குவா குவா' என்று கத்தப் போகிறது. 'பயிற்சிக்கு அழுகிறதா? அல்லது பசிக்கு அழுகிறதா?' என்று தனக்கும் கமலத்துக்கும் இடையே சர்ச்சை ஏற்படும்!

மகன் நடக்க ஆரம்பித்ததுமே தன்னுடன் சேர்ந்து நிலத்துக்கு வருவான். தான் நிலத்தை உழுவதையும் எரு அடிப்பதையும் பண்படுத்துவதையும் பார்ப்பான். விதை விதைப்பதையும் நீர் பாய்ச்சுவதையும் கவனிப்பான். அந்த நுணுக்கங்களையெல்லாம் அறிந்து கொள்வான். ஏர் பிடிக்கும் அளவுக்கு பலம் வந்ததும் தன்னுடனேயே இருந்து உதவி புரிவான். இவ்வாறு கனவு காண ஆரம்பித்தான் கண்ணப்பன்.

மல்லிகாவோ 'தம்பிப் பாப்பா பிறக்கப் போகிறான்' என்ற எண்ணத்திலே அளவு கடந்த சந்தோஷத்தில் ஆழ்ந்திருந்தாள். ''அப்பா! அம்மாவுக்குத் தம்பிப் பாப்பா எப்போது பிறப்பான்?'' என்று அடிக்கடி கேட்டுப் பிராணனை வாங்கினாள். சில சமயங்களில் அவளுடைய கேள்விகள் பெற்றோர்களை மிகுந்த சங்கடத்துக்குள்ளாக்கின. என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் விழித்தார்கள்; சிரித்து மழுப்பினார்கள். கமலத்துக்குப் பிறக்கப் போவது மகன் தான் என்பதில் அவர்களுக்குச் சிறிதுகூடச் சந்தேகம் இருக்கவில்லை.

உண்மையை நேருக்கு நேர் சந்திக்கும் வரையில் மனம் தனக்கு ஏற்றவாறு வருங்கால நிகழ்ச்சிகளை அமைத்துக் கொண்டு பார்க்கிறது. எண்ணியபடியே நடந்து விட்டால் முன்பிருந்ததைவிடக் குதூகலம் பன்மடங்கு அதிகமாகிறது. எண்ணியபடி நடக்காவிடில் ஒரே ஏமாற்றம். சரஸ்வதி பிறந்ததும் கண்ணப்பனுடைய ஏமாற்றம் ஆழங்காண முடியாததாக இருந்தது. ஏமாற்றம் சிறிது நேரத்தில் துக்கமாகவும் பின்னர் அதுவே கோபமாகவும் மாறியது. கமலத்திடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவள் விரல்களை மட்டும் ஒரு முறை போனால் போகிறது என்று தட்டிக் கொடுத்தான். கணவனுடைய விரல்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள் கமலம். அவள் கண்கள் 'என்னை மன்னித்து விடுங்கள்' என்று கெஞ்சின. ஆனால் வாய் பேசவில்லை. வாய் திறந்து மன்னிப்பு கேட்க முடியாதபடி பகுத்தறிவு தடுத்தது. ஆனால் ஏக்கத்தையும் துக்கத்தையும் 'மன்னித்து விடுங்கள்' என்று அவள் உள்ளம் மன்றாடுவதையும் கண்கள் காட்டின. அந்தக் கண்களைக் கண்ணப்பன் பார்க்கவில்லை. அவனுக்கு இருந்த கோபம் அந்தக் கண்களை அவன் பார்க்காதபடி செய்தது.

கி. ராஜேந்திரன்

# பெருநிலவு

பார்த்திருந்தால் ஒருவேளை அவன் மனம் மாறியிருக்கலாம். முகத்தைத் திருப்பிக் கொண்டான் கண்ணப்பன். அவன் கோபம் வெகு சீக்கிரம் வெறுப்பாக மாறியது. மனைவியின் அருகாமையிலிருந்து விலகினான். அன்று விலகியவன்தான். மறுபடியும் அவர்கள் ஒன்று சேரவில்லை. ஒரே வீட்டில் சேர்ந்துதான் வாழ்ந்தார்கள் என்றாலும் அவர்களுடைய உள்ளங்கள் வெகு தூரத்தில் இருந்தன. இனி எக்காலத்திலும் அவை ஒன்று சேர்ந்து மகிழ்வெய்தாது என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. 'பிறக்கப் போகிறது' என்று அவர்கள் எண்ணிய ஆண் மகனைப் பற்றியோ அல்லது பிறந்து வளர்ந்து வந்த பெண் மகவைப் பற்றியோ அவர்கள் பேசவில்லை. வறண்டு போன அந்த இரண்டு உள்ளங்களிலும் பேச்சுக்கு இடம் இருக்கவில்லை.

இந்த மாதிரியான ஒரு நிலையில்தான் கண்ணப்பனுக்குப் பெரியண்ணன் சிநேகமானான். பெரியண்ணன் பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்தவன். இருவரும் திருமயிலத்தில் கூடிய சந்தைக்கு



மாடு ஓட்டிச் சென்றபோது சிநேக மாணர்கள். திருமயிலத்தில் சந்தை கூடியிருந்ததோடு, அதில் கால் நடைகளை விற்றுப் பெற்ற பணத்தை அழிப்பதற்காகக் கள்ளுக்கடையும் திறந்திருந்தார்கள். பெரியண்ணன் சந்தை முடிந்ததும் நேராக அங்கு போனான். கண்ணப்பன் மறுத்தான். பின்னர் நண்பனுடைய வற்புறுத்தலுக்காக ஒரே ஒரு மொந்தையைப் போட்டான். ருசிகண்ட பூனையாக மாறினான் கண்ணப்பன். உரி உரியாகத் தாவினான்.

கமலம் அழுதாள்; கதறினாள். அதனால் கண்ணப்பனுடைய வைராக்கியம் அதிகமாயிற்று. சரஸ்வதியை வெறுக்க ஆரம்பித்தாள் கமலம். 'இந்தப் பெண் பிறந்த பிறகுதான் அவர் இப்படி மாறிவிட்டார். இந்தச் சனியனால்தானே என் குடும்பம் பாழாகிறது' என்று எண்ணிக் குழந்தையை வைதாள்; அடித்தாள். அம்மா குழந்தையை அடிப்பதையும் வைவதையும் காணச் சகியாமல் மல்லிகா சரஸ்வதிக்கு ஆறுதல் சொன்னாள்; சமாதானப்படுத்தினாள். சரஸ்வதிக்கு அதனால் தாய்ப்பாசம் குறைந்து தனக்கு ஆதரவாக இருந்த தமக்கையிடம் அன்பு வளர்ந்து வந்தது.

ஒரு நாள் கண்ணப்பன் வீட்டுக்கு வந்தபோது ஒரு காகித உறையையும் எடுத்து வந்தான். ''திருமயிலத்தில் நானும் பெரியண்ணனும் சேர்ந்து போட்டோ எடுத்துக் கொண்டோம்'' என்று சொல்லிக் கொண்டே உறையைப் பிரித்தான்.

''என்னத்துக்காக இதுக்கெல்லாம் பணத்தை அனாவசியமாகச் செலவு செய்கிறீங்க?'' என்றாள் கமலம்.

''ரொம்ப அனாவசியச் செலவைக் கண்டு விட்டாயாக்கும். ஒரு ஆண் பிள்ளையைப் பெறத் தெரியாதவளுக்கு வந்த பேச்சைப் பார்.''

''அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டாள் கமலம்.

''என்னடி கேள்வி மேலே கேள்வி கேட்டு விரட்டறே?'' என்றான் கண்ணப்பன் அளவுகடந்த கோபத்தோடு.

''நான் கேட்காமல் வேறு யார் கேட்பார்கள்? செலவழிக்க வேண்டியதற்கெல்லாம் செலவு செய்யாமல் அனாவசியச் செலவு செய்கிறீர்களே என்று கேட்டால் தப்பா?''

கண்ணப்பன் போட்டோவை ஒரு மூலையில் விசிறி எறிந்தான். ''சனியன் எப்போ பார்த்தாலும் பணத்தைப் பற்றியே பேசி நச்சரிச்சுப் பிராணனை வாங்குகிறது. சாகிறபோது தலையில் பணத்தைக் கட்டிக் கொண்டா போகப் போகிறோம்?'' என்றான் கண்ணப்பன்.

கமலத்துக்கும் இப்போது கோபம் பொத்துக் கொண்டு வந்தது. ''சாகிறபோது ஏதாவது இருந்தால்தானே தலையில் கட்டிக்கொண்டு போக முடியும்? நீங்கள்தான் இப்போதே பாதிக்குமேல் நிலத்தை விற்று விட்டீர்களே? பாக்கியையும் விற்று உங்க பெரியண்ணனிடம் கொண்டு போய்க் கொடுத்து....''

''ஏய்! பெரியண்ணனைப் பற்றிப் பேசினால் நாக்கை அறுத்து விடுவேன். அவனைப்போல் ஒரு நண்பனை எத்தனை ஜன்மம் எடுத்தாலும் அடைய முடியாது; தெரியுமா?''

'ஓ! நன்றாகத் தெரியுதே! சொத்தையெல்லாம் அழிக்கக் கள்ளுக்கடையில் கொண்டு போய்ப் பணத்தைக் கொட்டி ஒரேயடியாகத் தீர்த்து விட்டால் அப்புறம் தெரியும், உங்கள் இணைபிரியாத நண்பனைப் பற்றி!''

கண்ணப்பனுடைய கோபம் கட்டுக்கு அடங்காமல் போய்விட்டது. கமலத்தின் இரு தோள்களையும் தன் வைரம்பாய்ந்த கரங்களால் கெட்டியாகப் பிடித்துக் குலுக்கிக் கொண்டே, ''என்னடி தெரியும்? பெரியண்ணனைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?'' என்று தொண்டை கிழியக் கத்தினான்.

''அவன் குடிகாரன்னு தெரியும். பெண் பிள்ளைகளைச் சுற்றித் திரிகிறவன்னு தெரியும். உங்களையும் கெடுக்கப் பார்க்கிறான்னு தெரியும். நம்ப சொத்தையெல்லாம் அழிக்கிறான்னு தெரியும். நம்ப குடும்பத்தையே பாழாக்கப் போகிறான்னு தெரியும்!'' என்று கமலம் ஆவேசம் வந்தவளைப் போல் கத்தினாள்.

சொல்லி முடித்ததும் அவளது இரு கன்னங்களிலும் மாறி மாறி அறைகள் விழுந்துகொண்டே இருந்தன. எவ்வளவு நேரம் அப்படி விழுந்ததோ அது கமலத்துக்கே தெரியாது. ஒரு யுகம் போல் தோன்றியது. சில விநாடிகள் போலவும் இருந்தது. ஆனால் தாங்க முடியாத, பொறுக்க முடியாத வலியை அவள் தாங்கிக் கொண்டிருந்தாள். பொறுத்துக் கொண்டும் இருந்தாள். அந்தண்டை இந்தண்டை நகரவில்லை. அவன் அடிப்பதைத் தடுக்கவில்லை. அழவில்லை. கண்ணீர் விடவில்லை. கற்சிலை போல் நின்று கொண்டிருந்தாள். தன் மீது குற்றமில்லை என்ற மனஉறுதியுடன், தான் சொன்னது நியாயம், சொல்லத்தான் வேண்டும் என்ற வைராக்கியம்-

இவையனைத்தும் அவனை நிலைகுலையாமல் நிற்கச் செய்தன.

கண்ணப்பனுடைய கோபம் அடங்கவில்லை. ஆனால் கைவலித்தது. வலது கை விரல்களை இடது கையினால் தடவிக் கொண்டே அவன் அங்கிருந்து வெளியேறினான். முன்பு ஒருமுறை இதைப் போலவே வெளியேறினான் கண்ணப்பன். அது சரஸ்வதி பிறந்தபோது. அன்று அவன் உள்ளம் பிரிந்துசென்றது, தன் மனைவியிடமிருந்து. இன்றைய தினமும் வெளியேறினான் கண்ணப்பன். இம்முறை உடலும் வெளியேறியது. அன்று சென்றவன்தான். பின்னர் அவன் வீடு திரும்பவேயில்லை.

இந்தப் பயங்கர நாடகத்தை ஒரு மூலையில் இருந்து கொண்டு மல்லிகாவும் சரஸ்வதியும் பார்த்தார்கள். பயத்தினால் வாயடைத்துப் போய் நின்று கவனித்தாள் மல்லிகா. அவள் கையில் இருந்த இரண்டு வயதுக் குழந்தை தன் முகத்தை மல்லிகாவின் தோளில் புதைத்துக்கொண்டு சத்தம் போடாமல் விம்மிக் கொண்டிருந்தது.

கமலம் அருகில் இருந்த கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து கொண்டாள். தன் இரு கன்னங்களையும் விரல்களால் தடவினாள். விரல்பட்டதுமே தடித்துப் போயிருந்த கன்னம் 'விண் விண்' என்று வலித்தது. அதுவரை அடக்கி வைத்திருந்த துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. அவள் விம்மி விம்மி அழுதாள். கண்களிலிருந்து பெருகிய கண்ணீர்ப் பிரவாகம் கன்னங்களில் வழிந்தபோது சிறிது இதமாக இருந்தது.

அன்று இரவு கண்ணப்பன் வீடு திரும்பவில்லை. 'வந்து விடுவார்' என்று தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டு படுத்தாள் கமலம். காலையிலும் கண்ணப்பன் வரவில்லை. 'அப்பா எங்கே அம்மா?' என்று கேட்டாள் மல்லிகா. அவள் அப்படிக் கேட்டதும் கமலத்துக்குச் சந்தேகமும் பயமும் அதிகமாயிற்று. குழந்தையை நல்ல வார்த்தை சொல்லி சமாதானப்படுத்தினாள். நேரம் ஆகிக் கொண்டே இருந்தது. கணவன் வரவில்லை. மாலையில் மல்லிகா மறுபடியும், "அப்பா எங்கே அம்மா? ஏன் இன்னும் காணோம்?" என்று கேட்டாள்.



இரண்டாவது முறையாக மல்லிகா கேட்ட அந்தக் கேள்வி கமலத்தின் மனத்துக்குள் புகுந்து குடைந்தது. அதற்கு மேல் அவளால் சும்மா இருக்க முடியவில்லை. குழந்தை சரஸ்வதியை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளும்படி மல்லிகாவிடம் சொல்லி விட்டு அவள் கிளம்பி விட்டாள்.

பெரியண்ணன் வசித்த பக்கத்துக் கிராமத்துக்கு முதலில் சென்றாள். பெரியண்ணன் தன்னந்தனியாக வசித்துவந்த குடிசை திறந்து கிடந்தது. உள்ளே ஒருவருமே இல்லை. அக்கம்பக்கத்தில் விசாரித்ததில் முதல் நாள் இரவு திருமயிலத்துக்குச் சென்றவன் இன்னும் திரும்பவில்லை என்று தெரிந்தது.

'கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்' என்பது தமிழ் நாட்டுப் பழமொழி. அந்தப் பண்பாடு கமலத்தை நடக்க வைத்தது. திருமயிலத்துக்கு நடந்தாள். விளக்கு வைக்கும் நேரத்தில் அங்கு போய்ச் சேர்ந்தாள். வெட்கத்தை விட்டுக் கள்ளுக் கடைக்குள் நுழைந்து மது அரக்கனைவிற்பனை செய்த அதைவிடப் பெரிய ராட்சதனை அணுகினாள். தன் கணவன் கண்ணப்பனைப் பற்றிக் கேட்டாள்.

முதல் நாள் இரவு பெரியண்ணனுடன் அங்கு வந்ததாகவும் இருவரும் நன்றாகக் குடித்து விட்டுப் போய் விட்டார்கள் என்றும், எங்கே போனார்கள் என்று தெரியாது என்றும் பெரியமனசு பண்ணி அந்த ராட்சதன் தெரியப்படுத்தினான். இன்னும் இரண்டொரு இடங்களிலும் கேட்டுப் பார்த்தாள் கமலம். பயனில்லை. துக்கம் தொண்டையை அடைக்க அவள் வீடு திரும்பினாள். அவளது நடையில் தோல்வி பிரதிபலித்தது.

முகத்தில் கேள்விக் குறியுடனே நின்ற மல்லிகாவிடம் அப்பா ஊருக்குப் போயிருப்பதாகத் தெரியப்படுத்தினாள். மல்லிகா அன்று அதை நம்பினாள். ஆனால் அந்த நம்பிக்கை நீண்ட நாட்கள் நீடிக்கவில்லை. "ஊருக்குப் போனால் திரும்பி வரமாட்டார்களா என்ன? அப்பா ஏன் திரும்பி வரவில்லை?" என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள். அம்மாவிடமும் கேட்டாள். சரியான பதில் கிடைக்கவில்லை. மல்லிகா இன்னமும் அந்தக் கேள்வியைக் கேட்

டுக் கொண்டேதா னிருக்கிறள். பதில் இன்னும் கிடைக்க வில்லை.

கிராமத்தார்கள் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். திருமயிலத்தில் பெரியண்ணன் ஒரு பெண்ணிடம் சிநேகம் வைத்துக் கொண்டிருந்தான். அவர்களுக்கிடையே இருந்த அந்தச் சிநேகம் மிகக் கீழ்த்தரமானது என்பது அனைவரும் அறிந்த விஷயம். அதைப்பற்றி யாருக்குமே சந்தேகம் இருந்தது கிடையாது. பெரியண்ணனுடைய 'காதலி' என்று அந்தப் பெண்ணைச் சிலர் குறிப்பிடுவார்கள். 'காதல்' என்ற வார்த்தையின் பொருளை அறியாதவர்கள் அவர்கள். அந்தச் சொல்லின் உயர்வை, புனிதத் தன்மையை உணராதவர்கள் அப்படிச் சொல்லலாம். ஆனல் உபயோகிக்கப்பட்ட வார்த்தை எப்படி இருந்த போதிலும் உண்மை நிலையை அனைவரும் தெரிந்து கொண்டு தான் இருந்தார்கள்.

அன்று இரவு குடித்து விட்டு வந்ததும் பெரியண்ணனுடைய ஆசை நாயகியிடம் கண்ணப்பன் தகாத முறையில் நடந்து கொண்டான் என்றும், அதனல் பெரியண்ணன் கோபம் அடைந்தான் என்றும் குடி வெறியில் கண்ணப்பனை அரிவாளால் வெட்டிக்கொன்று விட்டான் என்றும், இரவோடு இரவாகக் குழி தோண்டிப் புதைத்து விட்டான் என்றும் பேசிக் கொண்டார்கள். இரவு நேரங்களில் ஆற்றங்கரையில் செண்பக மரங்களுக்கிடையே கண்ணப்பனுடைய ஆவி இன்றும் சுற்றுவதாகவும் பழிக்குப் பழி என்று கத்துவதாகவும் கூடப் பேசிக் கொண்டார்கள். கண்ணப்பனைக் கொன்ற பின்னர் பெரியண்ணன் பயந்து போய் ஊரைவிட்டே ஓடி விட்டான் என்றும் சொன்னர்கள். ஆனல் வேறு சிலர் இதற்கு நேர் விரோதமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். கண்ணப்பன்தான் பெரியண்ணனைக் கொன்று புதைத்து விட்டு ஊரை விட்டு ஓடி விட்டான் என்று சொன்னர்கள். இரவில் சில சமயங்களில் திருட்டுத்தனமாக வந்து மனைவியையும் குழந்தைகளையும் பார்த்து விட்டுப் போவதாகவும் சொன்னர்கள்.



இந்த வதந்திகளெல்லாம் மல்லிகாவின் காதுகளிலும் விழுந்தன. அவற்றில் எதை நம்புவது என்று அவளுக்குத் தெரியவில்லை. சில தினங்களில் இரவில் வெகு நேரம் தூக்கம் பிடிக்காமல் படுக்கையில் விழித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பாள். அப்பா இறந்து விட்டாரா? அல்லது உயிரோடுதான் இருக்கிறரா? அப்படியானல் எங்கு இருக்கிறர்? என்ன செய்கிறர்? ஒரு வேளை கிராம மக்களில் சிலர் சொன்னது போல் இரவில் தன்னையும் அம்மாவையும் காண வரலாம் அல்லவா? இப்படி எண்ணியதும் கொஞ்ச நஞ்சம் இருந்த தூக்கக் கலக்கமும் அவளுக்குப் போய் விடும். படுக்கையிலிருந்து எழுந்து ஜன்னல் வழியே எட்டிப் பார்ப்பாள். நிலவு காய்ந்து கொண்டிருக்கும். வீதியில் ஜன சந்தடியே இல்லாமல் வெறிச்சென்றிருக்கும். எங்கும் பயங்கரமான நிசப்தம் குடி கொண்டிருக்கும். தூரத்தில் தெரிந்த செண்பக மரங்களில் நிலவொளி பட்டு அந்த மரங்களின் நிழல்கள் கரிய இருளைப் புலப்படுத்தும். காற்றில் மரங்கள் ஆடும்போது அந்த நிழல்களும் ஆடிப் பேய் பிசாசுகளை நினைவு படுத்தும். தாமிரபரணி ஆறு ஓடும் 'சலசல' சத்தம் மட்டும் கூர்ந்து கேட்டால் கேட்கும். திடீரென்று நரி ஒன்று இரவின் நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு ஊளையிடும். மல்லிகாவின் உடல் பயத்தினல் நடுங்கும். அவள் அங்கு நிற்க அஞ்சி மறுபடியும் படுக்கையில் வந்து படுத்துக் கொள்வாள். அன்றிரவு முழுதும் தூக்கமின்றிக் கழிப்பாள்.

அம்மாதிரியான இரவுகள் பற்பல கழிந்த பிறகு, பல வருஷங்களுக்குப் பிறகு, ஒரு நாள் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு திருமயிலத்துக்குச் சென்றள் மல்லிகா. நான்கைந்து பேரைக் கேட்டு விசாரித்துக் கொண்டு பெரியண்ணனின் காதலி என்று கருதப்பட்டவளது வீட்டுக்குச் சென்றுள். இப்போது மூதாட்டி போல் காணப்பட்ட அவள், மல்லிகா கேட்ட வதந்திகள் ஓரளவுக்கு உண்மைதான் என்பதைத் தெரியப்படுத்தினள்.

"கண்ணப்பன் என்னிடம் முறைதவறி நடந்து கொண்டதும் அதன் காரணமாக இருவருக்கும் சண்டை மூண்டதும் உண்மைதான். கண்ணப்பன் வீட்டிலிருந்து கோபமாக வெளியேறிச் சென்றான். பெரியண்ணன் 'இன்று இரண்டிலொன்று தீர்த்து விடுகிறேன்' என்று என்னிடம் சொல்லி விட்டுக் கண்ணப்பனைப் பின்பற்றிச் சென்றான். இருவருமே குடி போதையில் இருந்தார்கள். அன்று சென்றவர்கள்தான். இருவரில் ஒருவருமே திரும்பி வரவில்லை" என்றான்.

மல்லிகா ஏமாற்றத்துடன் வீடு திரும்பினாள். முன்னமேயே அவள் கேள்விப்பட்டிருந்த விஷயங்களைத்தான் இப்போதும் தெரிந்து கொண்டிருந்தாள். புதிதாக ஒன்றும் இல்லை. சில மாதங்களுக்குப் பிறகு திருமயிலத்தில் தான் கண்டு பேசிய அம்மாள் இறந்து போய் விட்டாள் என்று அறிந்துகொண்டாள்.

## அத்தியாயம் 6

# மல்லிகா சிரித்தாள்!

ஆற்றங்கரையிலே சேகர் அளவு கடந்த ஆர்வத்துடன் மல்லிகாவின் அழகை உட்கொண்டிருந்தான். பூரண சந்திரனையொத்த அவளுடைய முகத்தைப் பார்த்தான். வானத்திலே சுடர் விட்டு மின்னும் தாரகைகளைப் போன்று ஒளி பொருந்திய அவளுடைய இரு கண்களைக் கண்டான். நிர்மலமான வானத்தில் பௌர்ணமியன்று உதிக்கும் சந்திரனைப் போன்று சிவந்திருந்த அவளுடைய அதரங்களை நோக்கினான். பிறைச் சந்திரனைப் போல் பள பளக்கும் அவளுடைய நெற்றியைப் பார்த்தான். பால் நிலவையொத்த அவளுடைய கழுத்தின் அழகைப் பருகினான். வெண்மையான மேகக் கூட்டங்களின் மிருதுத்தன்மையுடன் கூடிய அவளுடைய கன்னங்களைக் கண்டு ரசித்தான். கார் காலத்து கரிய மேகங்களைப் போன்ற அவளுடைய கூந்தலைப் பார்த்தான். அவன் உள்ளம் அவளை அடைய ஏங்கியது.

மல்லிகாவினால் அவனுடைய பார்வையைத் தாங்க முடியவில்லை. வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டு, குடத்தை இடுப்பில் சரிசெய்து கொண்டு நடக்கலானாள். சேகர் சட்டென்று அவளுக்கு முன்னால் போய் நின்று கொண்டான். "எதற்காக என்னைப் பார்த்துச் சிரித்தாய்?" என்று கேட்டான்.

முதல் முறை தன்னைப் பார்த்தபோது தன்னிடம் இரண்டு வார்த்தைகள் பேசவில்லையே என்று ஏங்கியது மல்லிகாவின் உள்ளம். இப்போது நாலு வார்த்தைகளாகப் பேசினான் சேகர். மல்லிகாவின் ஆவல் பூர்த்தியாயிற்று. ஆனால் எதனாலோ பதில் பேச வரவில்லை.

"உனக்குப் பேசத் தெரியாதா? சிரிக்க மட்டும்தான் தெரியுமா என்ன?" என்று கேட்டான் சேகர்.

மல்லிகா மனத்தைத் திடப்படுத்திக் கொண்டாள். நிச்சயமாக ஏதாவது பதில் சொல்ல வேண்டும். இல்லையானால் அவர் தன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வார்? ஒரு வேளை நான் ஊமை என்றுகூட எண்ணி விடலாம். தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "பேசவும் தெரியும்; சிரிக்கவும் தெரியும்" என்றாள் மல்லிகா.

"எதற்காகச் சிரித்தாய்?"

"சிரிக்க வேண்டும் என்று தோன்றியது சிரித்தேன். சுதந்திர இந்தியாவில் சிரிக்கக்கூட உரிமையில்லையா என்ன?"

"அடேயப்பா! பிரமாதமாகப் பேசுகிறாயே! முதலில் நான் ஏமாந்துதான் போனேன். பெரிய அரசியல் பிரசங்கம்கூடச் செய்து விடுவாய் போலிருக்கிறதே! ரொம்பப் பொல்லாதவள் நீ" என்றான் சேகர்.

"ஆமாம்! நான் பொல்லாதவள்தான். நல்லவர்களுக்கு நல்லவள், பொல்லாதவர்களுக்குப் பொல்லாதவள்!" என்றாள் மல்லிகா.

"ஐயய்யோ! நான் ரொம்ப ரொம்ப நல்லவன். என்னிடம் தவறிப் போய்ப் பொல்லாத்தனமாக நடந்து கொண்டு விடாதே!" என்றான் சேகர் பயப்படுவது போல் பாசாங்கு செய்து கொண்டே.

அவன் அப்படிப் பாசாங்கு செய்வதைப் பார்த்ததும் மல்லிகாவுக்கு மறுபடியும் சிரிப்பு வந்து விட்டது. கல கல வென்று சிரித்துக் கொண்டே, "நேரமாகிறது. நான் போக வேண்டும்!" என்று கூறினாள்.

"இன்னும் ஐந்தே நிமிஷம் இரு. ஒரே ஒரு போட்டோ மாத்திரம் எடுத்துக் கொண்டு விடுகிறேன்."

மல்லிகா தயங்கினாள். ஆனால் அவன் யோசிக்கச் சேகர் இடம் தரவில்லை. "எங்கே, தாழ்ந்திருக்கிறதே அந்த மரக் கிளையின் அடியில் தண்ணீரைத்

தொட்டுக் கொண்டிருக்கும் இலே களுக்குப் பக்கத்தில் உன்னுடைய குடத்தில் தண்ணீர் மொள்ளு. பார்க்கலாம்!'' என்றான்.

மல்லிகா அப்படியே செய்தாள். ''எங்கே, காமிராவைப் பார்!'' என்றான் சேகர். 'கிளிக்' என்ற சத்தம் காமிராவிலிருந்து மறுபடியும் எழுந்தது.

''போட்டோ படம் எடுத்தீர்களா? அல்லது சினிமா படம் எடுத்தீர்களா?'' என்று ஆவலுடன் கேட்டாள் மல்லிகா.

''போட்டோ படம்தான் எடுத்தேன். சினிமா எடுக்க வேறு கருவி இருக்கிறது'' என்று அவளுக்கு விளக்கிச் சொன்னான் சேகர்.

பின்னர், வேறு சூழ்நிலைகளில் இன்னும் சில புகைப்படங்கள் எடுக்க விரும்புவதாகத் தெரிவித்தான்.

''பேஷாக எடுங்கள்; அதற்கு என்னைக் கேட்கவேண்டுமாஎன்ன?''

'' நிச்சயமாகக் கேட்க வேண்டும். உன்னுடைய உதவி வேண்டுமே.''

'' நான் என்ன உதவி செய்ய முடியும்?''

''நீ இல்லாமல் சூழ்நிலையை மட்டும் வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது? அழகிய சூழ்நிலையில் அழகி நீயும் சேரும் போதுதான் புகைப்படம் நன்றாக அமையும்.''

மல்லிகாவுக்கு ரொம்பப்பெருமையாக இருந்தது. அவனுடைய வேண்டுகோளை அவளால் மறுக்க முடியவில்லை. இன்னும் சில புகைப் படங்களை எடுத்த பிறகு அவர்கள் பிரிந்து சென்றார்கள். பிரிவதற்கு முன் மறு நாளும் அதே இடத்தில் சந்திப்பதாக ஒருவருக்கொருவர் வாக்களித்தார்கள்.

* * *

ஏழு வருஷங்களுக்குப் பிறகு அன்றுதான் மல்லிகாவின் வாயிலிருந்து சிரிப்பொலி கேட்டது. அவள் சிரிப்பதைக் கண்டு அவளுக்கே வியப்பாக இருந்தது. ஏழு வருஷங்களுக்கு முன்னால் ஒரு நாள் அவளுடைய தகப்பன் மனைவியிடம் சண்டை போட்டுக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறினான். அவன் போகும் போது அந்த வீட்டிலிருந்து சந்தோஷத்தையும், குதூகலத்தையும் பின்னோடு எடுத்துக் கொண்டு போய் விட்டான். அன்றைய தினத்துக்குப் பிறகு கமலம் சிரித்ததே கிடையாது. மல்லிகாவும் அப்படித்தான். குதூகலம் தான் கிடையாதே ஒழிய, துயரம் நிறைய இருந்தது. கண்ணப்பன் சென்ற சிறிது நாட்களில் அவர்களுக்கு எஞ்சியிருந்த சிறிதளவு நிலத்தையும் கடன்காரர்கள் பறி முதல் செய்து கொண்டார்கள். சின்னஞ் சிறிய வீடு மட்டும்தான் எஞ்சியிருந்தது. தன்னையும் குழந்தைகள் இருவரையும் காப்பாற்றும் பொறுப்பு கமலத்தின் தலையில் விழுந்தது. அவள் பயப்படவில்லை. உழைத்தாள். மகள் மல்லிகாவையும் உழைக்கச் செய்தாள். கிராமத்திலிருந்த நாலு பெரிய மனிதர்கள் வீட்டில்வேலை செய்தார்கள். அவர்களுடைய நிலத்துக்குச்சென்று பாடுபட்டார்கள். நாற்று நட்டார்கள். களை பிடுங்கினார்கள். இன்னும் அவர்களால் செய்ய முடிந்த காரியங்கள் அனைத்தையும் செய்தார்கள். அலுக்காமல் வேலை செய்து, கிடைத்த கூலியைக் கொண்டு அவர்கள் ஜீவனம் நடத்தினார்கள்.

கமலத்துக்கு நெருங்கிய உறவினர்கள் என்றுசொல்லும்படி யாரும் இல்லை. அப்படியிருந்தாலும் அவர்களை உதவிக்காக அவள் அணுகியிருக்க மாட்டாள். சில நாட்கள் அவர்களை அண்டி வாழ்க்கை நடத்தலாம். அவர்களும் சந்தோஷமாக உதவி அளிக்கலாம். ஆனால் நாளாக ஆக அவர்களை உறவினர்கள் ஒரு பாரமாகவே கருதுவார்கள் என்பதைக் கமலம் உணர்ந்திருந்தாள். அதோடு இன்னொரு காரணமும் இருந்தது. என்றாவது ஒரு நாள் தன் கணவன் திரும்பி வருவான் என்று அவள் எதிர்பார்த்தாள். அப்படி அவன் வரும்போது தான் வீட்டில் இருக்க வேண்டும். அவன் காலில் விழுந்து, ''நான் செய்ததெல்லாம் தவறுதான். என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் உங்கள் இஷ்டம்போல் எப்படி வேண்டுமானாலும் இருங்கள். என்னை விட்டு விட்டு மட்டும்போய் விடாதீர்கள்'' என்று கதறிக்கதறி அழ வேண்டும்; மன்னிக்கும்படி மன்றாட வேண்டும் என்றெல்லாம் அவள் எண்ணியிருந்

தான். ஆகவே அந்த ஊரை விட்டு, அந்த வீட்டை விட்டுக் கிளம்ப அவள் தயாராக இல்லை. உழைத்துக் குழந்தைகளைக் காப்பாற்றவும் அவள் தயங்கவில்லை.

அன்று கண்ணப்பன் விசிறி எறிந்த புகைப்படத்தைப் பத்திரமாக எடுத்து வைத்துக் கொண்டாள் கமலம். குழந்தைகள் இல்லாதபோது அதனை எடுத்து வைத்துக் கொண்டு மௌனமாகக் கண்ணீர் உகுப்பாள். அவளுடைய கண்ணீர் புகைப்படத்தில் இருந்த கணவனுடைய உருவத்தின்மீது விழுந்து விடும். புடவைத் தலைப்பால் அந்தக் கண்ணீரை அன்போடு மென்மையாகத் துடைப்பாள். கணவனுடைய உருவத்துக்கு அருகில் இருந்த மற்றொரு உருவத்தை-பெரியண்ணனுடைய உருவத்தை — தவறிப் போய்க்கூட ஒருமுறை பார்க்க மாட்டாள்.

கண்ணப்பன்போன பிறகு செண்பகபுரத்தில் போலீஸ்நடமாட்டம் சிறிது நாட்கள் மிக அதிகமாக இருந்தது. கிராமத்தில் இருந்த எல்லோரையும் கண்ணப்பனைப் பற்றி விசாரித்தார்கள். அவன் நண்பன் பெரியண்ணனைப் பற்றிக் கேட்டார்கள். கமலத்தினிடம் வந்து கேட்டபோது அவள் கண்களில் கண்ணீருடன், "ஐயா, என் கணவர் எங்கே? தயவு செய்து சொல்லுங்கள்" என்று விம்மலுக் கிடையே கேட்டாள்.

"அது தெரிந்தால் உங்களிடம் ஏன் வருகிறோம்?" என்றார்கள் போலீஸ் புலிகள். முற்றுப் பெறாத ஏராளமான கேஸ்களில் இதுவும் ஒன்றாகியது.

மல்லிகாவின் மன நிலையும் கிட்டத்தட்ட இதே மாதிரியாகத்தான் இருந்தது. அவளுடைய எட்டாவது வயதில் தங்கை சரஸ்வதி பிறந்தாள். அது வரையில் துன்பம் என்றால் என்ன என்பதையே அறியாமல் இருந்த அவளுடைய வாழ்வில் துயரத்தின் சாயல் படிந்தது. அந்தத் துயரம் அவளை நேரடியாக அணுகவில்லை. இருந்தாலும் தாய் தகப்பனிடையே மனஸ்தாபம் இருந்து வருகிறது என்பதை அந்தக் குழந்தை உள்ளம் அறிந்து துயருற்றது. அவளுடைய பத்தாவது வயதில் தகப்பனார் கோபித்துக் கொண்டு போன பிறகு இந்தத் துயரம் பன்மடங்கு அதிகமாயிற்று. அதன் பிறகு அவள் சந்தோஷப்பட்டதே இல்லை; சிரித்ததே யில்லை.



இப்படிப்பட்ட துக்ககரமான வாழ்க்கையை ஏழு வருஷங்கள் அனுபவித்த பிறகு அன்றைய தினம் முதன் முதலாக மல்லிகா சிரித்தாள். அதற்குக் காரணமான சேகரை அவள் உள்ளன்போடு நேசித்ததில் ஆச்சரிய மென்ன? அதற்கு முன்னால் மல்லிகா தான் செய்த ஒவ்வொரு காரியத்தையும் கடமையாகக் கருதிச் செய்து வந்தாள். ஆனால் சேகரைச் சந்தித்த தினத்திலிருந்து இந்த நிலை அடியோடு மாறிவிட்டது. முன்பு துயரத்தின் சாயலுடனேயே செய்து வந்த ஒவ்வொரு காரியத்திலும் மல்லிகா இப்போது ஒரு தனிப்பட்ட இன்பத்தைக் கண்டாள். ஆற்றங்கரைக்குச் சென்று தண்ணீர் எடுத்து வருவதில் குதூகலம். வயலில் சென்று நாற்று நடுவதில் இன்பம். களை பிடுங்குவதில் ஆனந்தம். தண்ணீர் இறைப்பதில் சந்தோஷம். வீட்டுக்கு வந்து சமைப்பதில் பேரின்பம். இப்படி ஒவ்வொரு காரியத்திலும் அலாதியான இன்பத்தை அனுபவித்தாள் மல்லிகா.

சேகரும் மல்லிகாவும் மீண்டும் சந்தித்தார்கள். சேகர் மறுபடியும் போட்டோ எடுத்தான்.

"எங்கே கொஞ்சம் சிரி, பார்க்கலாம்" என்றான் சேகர். குதூகலமாகச் சிரித்தாள் மல்லிகா.

"போதும் போதும் பல் சுளுக்கிக் கொள்ளப் போகிறது! ரொம்பச் சிரிக்காதே!" என்று கேலி செய்தான் சேகர்.

அந்தக் கேலியைக் கேட்டு மீண்டும் சிரித்தாள் மல்லிகா. சேகர் அவளை வியப்புடன் பார்த்தான். "அதிசயப் பெண்தான் நீ. நாங்கள் நடிக நடிகையரின் முகத்தில் இயற்கையான சிரிப்பை வரவழைக்கப் படாத பாடு படுகிறோம். நீ என்னடாவென்றால் அலட்சியமாகச் சிரிக்கிறாய். அப்படி நீ சிரிக்கும் போது எவ்வளவு அழகாக இருக்கிறது தெரி

யுமா ? யாராவது பார்த்தால் திருஷ்டிப் பட்டு விடும்'' என்றான்.

''இனிமேல் திருஷ்டிப் படுவதற்கு ஒன்றுமேயில்லே. திருஷ்டி ஏற்கனவே பட்டு நான் ஏழு வருஷங்கள் துன்பப் பட்டாகி விட்டது. பல ஆண்டுகளுக்குப் பிறகு இப்போதுதான் சந்தோஷமாகச் சிரிக்கிறேன்'' என்றாள் மல்லிகா.

சேகருடைய உள்ளம் உருகி விட்டது. ''உன் வாழ்க்கையில் அப்படி என்ன துயரம் நேர்ந்து விட்டது? அதைத் தான் சொல்லேன்'' என்று கேட்டான்.

அவ்வளவுதான்; மல்லிகா நீண்ட நாட்களாக எதிர்பார்த்திருந்த சந்தர்ப் பம் கிடைத்து விட்டது. மடை திறந்த வெள்ளம் போல் அவள் தன்னைப் பற்றி யும் தன் குடும்பத்தைப் பற்றியும் சொன்னாள். அவள் சொன்னதைக் கனி வோடுகேட்டான் சேகர். ''இனி உனக்கு நான் இருக்கிறேன். கவலைப்படாதே!'' என்று ஆறுதல் சொன்னான். அந்த வார்த்தைகள் மல்லிகாவுக்கு ஓரளவுக்கு மன நிம்மதியை அளித்தன.

''வீட்டுக்குக் கண்டிப்பாக வாருங்கள். அம்மா உங்களைப் பார்த்தால் ரொம்ப சந்தோஷப் படுவாள்'' என்று அவனை அழைத்தாள் மல்லிகா.

''அவசியம் வருகிறேன், நாளைக்கு'' என்று உறுதியளித்தான் சேகர்.

* * *

அன்றிரவு மல்லிகா தன் தாயா ரிடம் சேகரைப் பற்றிச் சொன்னாள். அவன் மறுநாள் வீட்டுக்கு வருவதாகச் சொல்லியிருப்பதையும் தன் மீது அளவு கடந்த அன்பு வைத்திருப்பதையும் மகிழ்ச்சியுடன் சொன்னாள்.

கமலம் சந்தோஷப்படவில்லை. மக ளுடைய நடத்தை சரியானது என்று ஒப்புக் கொள்ளவில்லை. அவள் அனுபவ சாலி. ஆனந்தப்படுவதற்குப் பதில் மகளைக் கண்டித்தாள். கண்ட ஆண் பிள்ளைகளுடன் நினைத்தபடியெல்லாம் பேசக் கூடாது என்று அவள் தன் மக ளுக்கு எச்சரிக்கை செய்தாள்.

''போ, அம்மா! உன்னிடம் புத்தி மதி கேட்கத்தான் இதைச் சொன்னே னுக்கும்!'' என்றாள் மல்லிகா.

''நீ கேட்காவிட்டாலும் நான் சொல் லக் கடமைப்பட்டவள். சொல்வேன்'' என்றாள் தாயார் கமலம்.

''நீயும் அவரை நேரில் ஒரு முறை கண்டு பேசிவிட்டால் அப்புறம் உன் அபிப்பிராயத்தையெல்லாம் மாற்றிக் கொண்டு விடுவாய்'' என்றாள் மல்லிகா.

கமலம் அதற்கு மேல் பேசவில்லை. சிறிது நேரத்தில் அவள் ஆழ்ந்த நித்திரையில் இருக்கிறாள் என்று மல்லிகா புரிந்து கொண்டாள்.

அவளுக்குத் தூக்கம் வரவில்லை. மெள்ள எழுந்திருந்து வாசல் கதவைத் திறந்தாள். பூரண சந்திரன் தன் அமுதக் கிரணங்களை அள்ளி வீசிக் கொண்டிருந்தான். மந்திரத்தால் கட்டுண்டவள் போல் மல்லிகா தான் முதன் முதலில் சேகரைச் சந்தித்த துறைக்குச் சென்றாள். அங்கே முழுமதி தன்னுடைய கிரணங்களாகியஆயிர மாயிரம் கரங்களால் தாமிரபரணி ஆற்றை அப்படியே வாரி அணைத்துக் கொண்டிருந்தான். அந்த இன்பலாகிரியில் மயங்கியவளாய்த் தாமிரபரணி ஒரு சலசலப்பு சத்தம்கூட இல்லாமல் அமைதியாக இருந்தாள். மல்லிகா இந்த அற்புதக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே பூரண சந்திரன் சேகருடைய முகமாக மாறியது. சந்திரக் கிரணங்கள் அவனுடைய கரங்களாக மாறி மல்லிகாவை நெருங்கி நெருங்கி வந்தன. மல்லிகாவின் உடல் சிலிர்த்தது. அவள் வீட்டுக்கு ஒரே ஓட்டமாக ஓடினாள். படுக்கையில் விழுந்தாள்.



ஓடி வந்ததினால் ஏற்பட்ட பெருமூச்சு அடங்கச் சிறிது நேரமாயிற்று. அது அடங்கியதும் மல்லிகா களைப்பு மிகுதியால் அயர்ந்து தூங்கினாள்.

* * *

மறுநாளும் தன் காதலனை ஆற்றங்கரையில் சந்தித்தாள். தான் வந்த காரியத்தை மறந்தாள் மல்லிகா. குடத்தை ஆற்றங் கரையிலேயே விட்டு விட்டு அவர்கள் கரையோரமாகக் கைகளைக் கோத்துக் கொண்டு நடந்து சென்றார்கள். செண்பக மரங்களின் இடையே அவர்கள் நடந்து சென்றபோது அம்மரங்களில் மலர்ந்திருந்த மலர்களிலிருந்து எழுந்த மணம் அந்த இளம் காதலர்களைச் சூழ்ந்து கொண்டு அவர்களது தலையைக் கிறுகிறுக்கச் செய்தது.

சேகர் ஒரு இடத்தில் நின்றான். கைக்கு எட்டிய தூரத்தில் இருந்த ஒரு செண்பக மலரைப் பறித்தான். தன் எதிரே நின்ற மல்லிகாவின் தோள்களை அன்புடன் பற்றித் திருப்பினான். அள்ளிச் சொருகியிருந்த அவளுடைய அழகிய கூந்தலில் தான் பறித்த அந்த மலரை அன்புடன் சூட்டினான். தனக்கு மலர் சூட்டிய அந்தக் கரங்களை மல்லிகா தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

"எதற்காகக் கண்களில் ஒற்றிக் கொள்கிறாய்?" என்று வியப்புடன் கேட்டான் சேகர்.

"துக்ககரமான இருள் சூழ்ந்த என் வாழ்வில் மீண்டும் ஒளிபரப்பி என்னைக் குதூகலப்படுத்திய தெய்வம் நீங்கள். உங்கள் கரங்களைப் பக்தியோடு கண்களில் ஒற்றிக்கொள்கிறேன். ஆட்சேபனை இல்லையே?" என்று கேட்டாள் மல்லிகா.

சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுச் சேகரை வீட்டுக்கு அழைத்து வந்தாள். அவர்கள் வீட்டில் நுழையும் போது கமலம் தான் மனத்துக்குள் பூஜித்து வந்த கணவனின் புகைப் படத்தைக் கையில் வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவர்களைக் கண்டதும் புகைப் படத்தை மறைத்துக் கொண்டாள். மல்லிகா அதற்கு இடம் தரவில்லை. சட்டென்று அந்தப் படத்தை அம்மாவிடமிருந்து பிடுங்கிச் சேகரிடம் காண்பித்தாள். "இதுதான் என் அப்பா" என்று சுட்டிக் காட்டினாள்.

கையில் படத்தை வாங்கிக் கொண்ட சேகர் அதனை நீண்டநேரம் பார்த்துக் கொண்டே இருந்தான். அவன் அப்படி மௌனமாக அதையே உற்றுப் பார்ப்பதைத் தாயும் மகளும் மிகுந்த வியப்புடன் கவனித்தார்கள்.

"ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்?" என்று கேட்டாள் மல்லிகா.

"ஒன்றுமில்லை இந்த மனிதனை வேறு எங்கேயோ பார்த்தமாதிரி ஞாபகம் வந்தது. அதுதான் உற்றுப் பார்க்கிறேன்" என்றான் சேகர்.

தாயும் மகளும் அவனை மிகுந்த ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டே இருந்தார்கள். "இந்த மனிதனை என்று அவன் குறிப்பிட்டது யாரை?" என்ற கேள்வி இருவரது உள்ளங்களிலும் எழுந்து திகைப்பை யளித்தது. (தொடரும்)

நாள் முழுவதும்
கவர்ச்சிகரமாக
தோற்றமளிக்க






## ஸாண்டல்வுட் டாய்லட் பவுடர்

சுத்தமான தனி சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது.

## ஸாண்டால்

சந்தனத்துடன் கூடிய டால்கம் பவுடர்

# டி.எஸ்.ஆர். & கோ

கும்பகோணம்

A. K. GOPAL & CO.,

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸிஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு. கோயமுத்தூர் பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி (ஸ்தாபிதம் 1932) வைசியாள் தெரு, கோயமுத்தூர் மதுரை ஏஜண்டு: மெஸர்ஸ் மீனாக்ஷி என்டர்பிரைஸஸ், 4, கூட்ஸ் ஷெட் தெரு, மதுரை




நேரமாக நேரமாகத் தாத்தாவின் மனத்தில் பயம் கலந்த பீதி பெருகலாயிற்று. இத்தனை நேரம் எவ்வளவு தூரம் போனானோ, என்னென்ன செய்தானோ என்று எண்ணியபடியே குதிரையை மேலும் வேகமாகச் செலுத்தினார். குதிரையும் பாய்ந்து சென்றது.

## 3. மர்ம மாளிகை!

கோட்டை வாசலை அடைந்ததும் அங்கே இருந்த இரவுக் காவல்காரனிடம், ''வெள்ளைக் குதிரை ஒன்றில், ஒரு சிறுவன் வெளியே போனதைப் பார்த்தாயா?'' என்று கேட்டார் தாத்தா.

காவல்காரன் சிறிது யோசனை செய்துவிட்டு, ''ஆமாம்! அரை நாழிகை நேரத்துக்கு முன்பு ஒரு சிறுவன் குதிரையில் ஏறி வேகமாக வெளியே சென்றான். நாங்கள் அவனை நிறுத்தி 'இந்த நேரத்தில் எங்கே போகிறாய்?' என்றோம். அதற்கு அவன் 'குமரி முத்து சம்பந்தமாகப் போகிறேன்' என்று கூறி விட்டுப் போய் விட்டான்'' என்று கூறினான்.

தாத்தாவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. சிறுபிள்ளைத்தனமென்பது சரியாகப் போய் விட்டதே என்று முணுமுணுத்தார். தமக்கு வந்த கோபத்தைக் குதிரையின் மேல் காட்டினார். குதிரை நாலு கால் பாய்ச்சலில் தெற்குத் திசை நோக்கி வெகு வேகமாகப் பாய்ந்தது.

தெற்குத் திசையில்தான் கடற்கரை இருந்தது. குமரிக் கடலுக்குச் செல்ல வேண்டுமாயின் இந்தக் கடற்கரையின் வழியாகத்தான் போக வேண்டும். வீராங்கன் அங்குதான் போயிருக்கிறான் என்பது தாத்தாவுக்கு நிச்சயமாயிற்று. எப்படியும் பாதி வழியில் வீராங்கனை மடக்கி விடலாம் என்று நினைத்தார். ஆனால் அவர் இவ்வளவு வேகமாகவந்தும்கூட, கண்ணுக்கெட்டிய தூரம்வரை குதிரையைக் காணவில்லை.

வெகு நேரத்துக்குப் பிறகு கடற்கரையின் எல்லையை நெருங்கியது குதிரை. பாதையில் பொதி மணல் நிறைந்திருந்ததால் குதிரையால் ஓட முடியவில்லை. தாத்தாவும் அதை விரட்ட முயலாமல் சுற்று முற்றும் கவனித்துக் கொண்டே வந்தார். திடீரென்று அவர் முகம் மலர்ந்தது. அது சிறிது நேரம்தான். அடுத்த விநாடியே அந்த முகத்தில் சொல்ல முடியாத வியப்பும் சோகமும் தோன்றின. கண்களில் கண்ணீர் கூடத் தோன்றியது. அதற்குக் காரணம் எதிரே ஆளில்லாமல் வந்து கொண்டிருக்கும் வெள்ளைக் குதிரைதான்.

அந்தக் குதிரை வீராங்களின் குதிரைதான். அதன் உடலெல்லாம் வியர்வை ஆறாய்ப் பெருகிக் கொண்டிருந்தது. வாயில் நுரை தள்ளி இருந்தது.

தாத்தா குதிரையிலிருந்து கீழே குதித்தார். அந்த ஆளில்லாக் குதிரையைப் பிடித்து நன்றாக உற்றுப் பார்த்தார். பல முறை சோதனை போட்டார். அவருக்குத் தேவையான செய்தி எதுவும் கிடைக்கவில்லை. வீராங்கன் என்ன ஆனான் என்பதைச் சொல்வதற்கு அந்தக் குதிரையால் முடியவில்லை.

பிறகு கடல் ஓரத்தை அடைந்து இரு திசைகளிலும் வீராங்கனைத் தேடினார். கடலிலும் எட்டிய தூரம் வரைக்கும் பார்வையை ஓட்டினார். ஒரு சிறிதும் பலன் கிடைக்கவில்லை. வயது முதிர்ந்த அந்த வீரரின் தொண்டை துக்கம் தாளாது

அடைத்துக் கொண்டது. அவர் கண்களிலிருந்து கண்ணீர் பொலபொலவென்று கொட்டியது. அவர் வாய் 'வீராங்கா! என்னை விட்டு எங்கே போனாய்?' என்று கதறி அழுதது.

தாத்தா கதறி நிற்கும் இதே நேரத்தில், கடற்கரையிலிருந்து இரண்டு மூன்று காத தூரத்தில் ஒரு சிறிய படகில் ஒரு சிறுவன் வெகு ஆனந்தமாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தான். அவன் வேறு யாருமல்ல; நமது வீரச் சிறுவன் வீராங்கன் தான்.

தன் கையில் இருக்கும் ஒரு துடுப்பால் படகை வெகு லாகவமாக வலித்துக் கொண்டிருந்தான். அவனுக்குப் படகு வலிப்பதில் பழக்கமுண்டு. இது மட்டுமல்லாமல் நீந்தலிலும், கத்திச் சண்டை போடுவதிலும், ஈட்டி எறிவதிலும், மற்போரிலும் அவனுக்கு மிகுந்த பழக்கமுண்டு. இவற்றையெல்லாம் கற்றுக் கொடுத்தது அவனுடைய தாத்தாதான்.

ஆகா! தாத்தாவுக்குத்தான் அவன் மேல் எவ்வளவு பிரியம்? வீராங்கன் இளமையிலேயே தந்தையை இழந்து விட்டான். தாத்தாதான் அவனையும் அவனுடைய தாயையும் காப்பாற்றி வருகிறார். வீராங்கனுக்கு ஒரு குறையும் ஏற்படாதபடி வளர்த்து வந்தார். அவனுக்குப் பல கலைகளையும் கற்பித்தார். இதனால்தான் வீராங்கன் சிறந்த வீரனாய் இருந்ததோடு கூர்மையான அறிவையும் கொண்டிருந்தான்.

வீராங்கனுக்கு இந்த நினைவெல்லாம் அலை அலையாக எழுந்தன. அவனுடைய அருமை அம்மாவின் முகம் அவன் மனக் கண்ணில் தோன்றி, 'வீராங்கா! என்னை விட்டு எங்கே போகிறாய்?' என்று கேட்பது போல் இருந்தது.

நேரமாக ஆக அவனுடைய மனத்தில் ஒரு வித அச்சம் தலை விரித்தாட முற்பட்டது. உண்மையிலேயே அவனுக்கு ஒரு வித அதைரியம் உண்டாயிற்று.

'ஆனால் இவ்வளவு தூரம் வந்த பிறகு இனி திரும்புவதா?' என்று திடீரென்று நினைத்தான். கடைசியில் 'என்ன வந்தாலும் சரி. உயிர் போனாலும் கவலை இல்லை. அதற்கு முன்பு குமரிமுத்தை ஒருமுறை கண்ணாலாவது பார்த்துவிட வேண்டும்' என்று தீர்க்கமாக முடிவு செய்தான். பின்பு ஒரு புதிய உற்சாகத்தோடு இன்னும் வேகமாகப் படகை வலிக்க ஆரம்பித்தான்.

சூரியன் மறைந்து இருள் படர்ந்தது. இத்தனை நேரமும் நீல நிறமாய் இருந்த கடல் இப்பொழுது கரு நிறத்தை அடைந்தது. எட்டிய வரைக்கும் ஒரே இருள்! பயங்கர இருள்! வீராங்கன் என்ற சிறுவன் இந்த நட்ட நடுக்கடலில் அஞ்சாமல் பிரயாணம் செய்து கொண்டிருந்தான்.

வீராங்கனுக்குப் பசி கிள்ள ஆரம்பித்தது. நேற்று இரவு அவனும் அவன் தாத்தாவும் விடுதியில் சாப்பிட்டது. இந் நேரம் வரைக்கும் அது தாக்குப் பிடிக்குமா? பாவம்; சிறுவன் அல்லவா? பசியால் வாடி வதங்க ஆரம்பித்தான். தண்ணீரைக் குடித்தாவது பசியைப் போக்கலாமென்றால் அதற்கும் வழி இல்லை. கண்ணுக்கெட்டிய தூரம் கடலில் தண்ணீர் இருந்தும் அது உபயோகமற்றதாக இருந்தது. வீராங்கனுக்கு இதை நினைத்த பொழுது ஒரு விதச் சிரிப்பும் வெறுப்பும் உண்டாயிற்று. அப்பொழுது அவனுக்குத் தன் ஊரின் ஞாபகமும் வந்தது.

அவனுடைய ஊரில் ஒரு பெரிய பணக்காரன் இருந்தான். அவனிடம் மூட்டை மூட்டையாகச் செல்வம் இருந்தது. ஆனால் அவன் சுகமாய் வாழவில்லை. பசித்தவர்களுக்கும் கஷ்டப் பட்டவர்களுக்கும் சிறிது கூடக் கொடுத்து உதவி செய்யவில்லை. அவனுடைய செல்வம் அனைத்தும் இந்தக் கடல் நீரைப் போல் தான் இருந்தன.

கடல் நீர் முழுவதும் நல்ல நீராக இருந்தால், பணக்காரர்கள் எல்லோரும் வள்ளல்களாய் மாறினால் உலகம் எவ்வளவு செழிப்பாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கும் என்று மனத்துக்குள் எண்ணினான்.

அவனுடைய பசி அதிகமாகிக் கொண்டே வந்தது. வரும்பொழுதே படகில் ஏதேனும் கொண்டு வராததைக் குறித்து அவன் தன்னைத்தானே நொந்து கொண்டான். ஆனால் அவ்வளவு ஆடம்பரமாக அவன் புறப்பட்டிருந்தால் இந்தப் பிரயாணமே ஏற்பட்டிருக்காதே! அவனுடைய தாத்தா அவனைத் தடை செய்திருப்பார் அல்லவா?

வீராங்கனுக்குப் பசி மயக்கமும் தூக்க மயக்கமும் ஏற்பட்டு அவனைப் படகிலேயே படுக்கும்படி செய்துவிட்டன.

அவன் கண் விழித்து எழுந்திருக்கும் பொழுது, சூரியன் அஸ்தமனமாகிக் கொண்டிருந்தது. அவன் தாத்தாவிடம் சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டதும் பசியால் மயங்கிப் படகில் விழுந்ததும் மெள்ள நினை



வுக்கு வந்தன. ஆனால் தான் புறப்பட்டு எத்தனை நாட்களாயின என்று அவனுக்கு நினைவு வரவில்லை.

அப்பொழுது தூரத்தில் மங்கலாகத் தீவுபோல் ஒன்று தெரிந்தது. கிட்ட நெருங்க நெருங்க, அது ஒரு தீவுதான் என்பது ஊர்ஜிதமாயிற்று.

மேலைவாசலில் விழப் போகும் மாலைக் கதிரவனின் மஞ்சள் ஒளியில் எதிரே தெரிந்த தீவில், ஒரு பிரகாசமான வெளிச்சம் கண்ணைப் பறித்தது. அந்த வெளிச்சம் எப்படி ஏற்படுகிறது என்று அவனுக்குப் புலப்படவில்லை. வெகு நேரம் யோசித்து, 'அது ஒரு கோபுரத்தின் தங்கக் கலசமாய் இருக்க வேண்டும். அதில் வைர வைடூரியங்கள் இழைக்கப் பட்டிருக்க வேண்டும்' என்ற முடிவுக்கு வந்தான்.

படகு ஒருவாறுக் கரையை அடைந்து மணலில் தட்டி நின்றது. வீராங்கன் வயிற்றைப் பிடித்துக் கொண்டு படகிலிருந்து மெதுவாகக் கீழே இறங்கினான். இடையில் எப்பொழுதும் இருக்கும் உடைவாளையும் கைவேலையும் ஒரு முறை அவிழ்த்து, சரி செய்து மீண்டும் கட்டிக் கொண்டு தீவுக்குள் நடக்க ஆரம்பித்தான்.

அந்தத் தீவு அப்படி ஒன்றும் பெரிய தீவாக இல்லை. தீவு முழுவதும் தென்னை மரங்களும் சிறு புதர்களும் செடி கொடிகளும் காணப்பட்டன. தென்னை மரங்கள் தான் அதிகமாகக் காணப்பட்டன. அவை எல்லாவற்றிலுமே குலைகுலையாகத் தேங்காய்கள் காய்த்திருந்தன.

வீராங்கன் முதலில் பசியைத் தணித்துக் கொள்ள விரும்பிக் குட்டையான ஒரு மரத்திலிருந்து ஒரு குலை இளநீரை வெட்டிக் கீழே தள்ளினான். பிறகு வயிறு புடைக்கும் வரை இளநீரைச் சாப்பிட்டான்.

அவன் களைப்பு ஒருவாறு அடங்கியது. படகை இழுத்து ஒரு இடத்தில் பத்திரப் படுத்தி வைத்து விட்டு, தீவின் நடுவில் தெரிந்த கோபுரத்தைநோக்கி நடந்தான்.

கோபுரம் இருக்கும் இடத்தை அடைவதற்கு வழி ஒன்றும் கிடையாது. வழி இல்லையே என்று வீராங்கன் கவலைப்படவும் இல்லை. செடிகளையும் கொடிகளையும் விலக்கிக் கொண்டு பள்ளத்திலும் மேட்டிலும் ஏறி இறங்கி, புதர்களில் புகுந்து மரக்கிளைகளினிடையே குனிந்து, இப்படிப் பலவாறு சிரமப்பட்டுக் கோபுரம் இருந்த தீவின் நடு பாகத்தை அடைந்தான்.

அவன் நினைத்தது போல் அங்கே வெறும் கோபுரம் மட்டும் நிற்கவில்லை. ஒரு சின்னஞ் சிறிய மாளிகையும் தென்பட்டது. அந்த மாளிகையின் நடுவில்தான் அந்தக் கோபுரம் அமைந்திருந்தது. கோபுரமும் மாளிகையும் மஞ்சள் நிறத்தோடு பளபள வென்று மின்னின.

மாளிகையின் அருகில் சென்று அதன் வெளிச் சுவரைத் தன் கையினால் தொட்டுப் பார்த்தான். அவனையே அவனால் நம்ப முடியவில்லை ! ஆமாம் ; வழவழ வென்று இருந்த அந்தச் சுவர் முழுவதும் வெறும் தங்கம்தான் !

'இந்தத் தங்க மாளிகையை இங்கு யார் எதற்காகக் கட்டி இருக்கக் கூடும்?' என்று எண்ணியபடியே மாளிகையை ஒரு நோட்டம் விட்டான். மாளிகையில் யாரும் வசிப்பதாகத் தெரியவில்லை. நிறைந்த அமைதியில் அந்த மாளிகை மூழ்கிக் கிடந்தது.

மாளிகைக்குள் என்னதான் இருக்கிறது என்பதை அறிய விரும்பி மாளிகையின் கதவைத் தன் கைகளால் தள்ளினான். அது திறந்து கொண்டது. உடைவாளை ஒரு முறை தொட்டுப் பார்த்துக் கொண்டு உள்ளே நுழைந்தான்.

வெளியிலிருந்து வந்த மங்கிய வெளிச்சத்தில் உட்புறம் கொஞ்சம் தெளிவாகவே தெரிந்தது. உள்ளே மிகவும் துப்புரவாகக் காணப்பட்டது. தங்கச் சுவர்களில் சிற்சில இடங்களில் அழகழகான சித்திரங்கள் தீட்டப்பட்டிருந்தன. அவற்றைப் பார்க்கப் பார்க்க அவனுக்குப் பரவசம் ஏற்பட்டது. தரையில் சில இடங்களில் உட்கார்வதற்கேற்ற ஆசனங்கள் போடப்பட்டிருந்தன.

மாளிகை மிகவும் சிறியது. ஆகையால் வீராங்கன் அதைச் சிறிது நேரத்தில் சுற்றிப் பார்த்து விட்டு வெளியே வந்தான். நடுவிலிருந்த கோபுரத்துக்குச் செல்ல அவன் எவ்வளவோ தேடியும் அவனால் அதற்குள் போகும் வழியைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

இந்த மர்ம மாளிகையைப் பற்றி அவன் மனம் பலவாறாக எண்ணமிட்டது. 'யாரோ ஒரு அரசன், கைதேர்ந்த சிற்பியைக் கொண்டு இதைக் கட்டி இருக்க வேண்டும். அல்லது சக்தி வாய்ந்த ஒரு மந்திரவாதி இதை உண்டாக்கி இருக்க வேண்டும்!'

இந்த நினைவோடேயே மேற்கொண்டு என்ன செய்வது என்று யோசிக்க ஆரம்பித்த வீராங்கன், 'சரக்' 'சரக்' என்று யாரோ அல்லது எதுவோ நடந்து வருவதைப் போன்று ஓசை கேட்கவே கூர்ந்து கவனித்தான். அவன் உடல் குப்பென்று வியர்த்துக் கொட்டியது. (தொடரும்)



# காதலில்லாக் கதை!



ருக்மிணி பார்த்தசாரதி

அவசரம் அவசரமாகச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு பள்ளிக்கூடத்துக்கு ஓடினான் நாணு. யாருடைய வகுப்புக்கு நேரம் கழித்துச் சென்றாலும் சங்கர ஐயர் வகுப்புக்கு மட்டும் நேரத்துக்குப் போக வேண்டாமா?

பள்ளிக்கூடத்துக்குள் நுழையும் போதே மணிக்கூண்டை நிமிர்ந்து பார்த்தான். மணி ஒன்பதரைதான். தன் வீட்டுக் கடிகாரம் அரைமணி வேகமாகப் போகிறது என்று அறிந்ததும் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டு, மெதுவாகத் தன் நான்காம் பாரம் வகுப்பை நோக்கி நடந்தான்.

உபாத்தியாயர்கள் இளைப்பாறுவதற்காக இருந்த அறையைத் தாண்டிச் செல்லும் போது சங்கரய்யரும் 'வறட்டுத் தவளை வெங்கடசாமி'யும் உரத்த குரலில் பேசிக் கொண்டிருந்தது நாணுவின் காதுகளில் தெளிவாக விழுந்தது.

''ஏன் ஸார், பெருமையடித்துக் கொள்கிறீர்கள்? உங்களால் மட்டும் நாவல் எழுத முடியுமானால் முப்பது ரூபாய் சம்பளத்துக்காக வாத்தியார் வேலை பார்ப்பானேன்? மகளுக்குக் கல்யாணம் செய்யப் பணமில்லாமல் 'பிரைவேட்' சொல்லிக் கொடுப்பானேன்?'' தவளை சிரித்தார். ''முடியாதென்று ஒப்புக்கொள்ளுங்களேன்.''

சங்கரய்யரின் குரல் நிதானமாய் வந்தது. ''முடியாமலென்ன? எல்லாம் முடியும்!''

''பெரிய பெரிய எழுத்தாளர்களே காதலில்லாக் கதையில் சுவாரஸ்யமில்லை என்று தெரிந்து அந்த மாதிரி கதைகள் எழுதுவதை விட்டு விட்டார்கள். நீங்கள் மட்டும் எப்படி ஐயா எழுதி விடுவீர்கள்? எழுதினால்தான் எவன் பிரசுரிப்பான்? காதலில்லாக் கதையும் ஒரு கதையா?''

''நான் அதை எழுதிப் பிரசுரிக்கச் செய்து விட்டால்......?''

''அதையும்தான் பார்ப்போமே!''

அதற்கு மேல் நாணு அங்கு நிற்கவில்லை. அவன் மனம் அந்தச் சம்பாஷணையை வளைய மிட்டவண்ணம் இருந்தது. சங்கரய்யரால் முடியாததும் உண்டா? பூகோளத்தையும் சரித்திரத்தையும் அவ்வளவு நன்றாகச் சொல்லிக் கொடுக்கும் அவரால் ஒரு நீண்ட கதைதான் எழுத முடியாமல் போய் விடுமா? இந்த வறட்டுத் தவளைக்கு எப்போதுமே மூளை கிடையாது. தெரியாமலா பசங்களெல்லாம் அவருக்கு அந்தப் பெயர் வைத்திருக்கிறார்கள்? 'என்னடா வறட்டுத் தவளை மாதிரி கத்தறே?' என்று கேட்பாரே தவிர, வறட்டுத் தவளையும் அவர்தான்; இரைந்துத் தவளையும் அவர்தான். நாணுவினுடைய தகப்பனார் பணக்காரர் என்பதற்காக அவனுக்கு அதிக மார்க் கொடுப்பாரே ஒழிய, அவன் சிநேகிதன் மணியை எப்படி அடிப்பார்! சங்கரய்யரோ ஒரு பையனையும் அடித்ததில்லை. இருந்தாலும் சங்கரய்யர் வகுப்பிலிருந்த ஒழுங்கும் நிசப்தமும் தவளையின் வகுப்பில் இருந்ததே கிடையாது. சங்கரய்யரைப் பற்றி நினைத்த போதே நாணுவின் முகம் மலர்ந்தது. எப்படியும் அவர் தாம் சொன்னபடி செய்து விடுவார். அந்த...அதுதான் அந்த... அது என்ன கதை? எதுவாயிருந்தால் என்ன? அதை அவர் கட்டாயம் எழுதி விடுவார்.

மணி பத்தடித்தது. வகுப்புக்குள் ஓடித் தன் ஆசனத்தில் அமர்ந்தான் நாணு.

* * *

மூன்று மாதங்கள் கழிந்தன. அன்று சங்கரய்யர் தம் வகுப்புக்குப் பாடம் நடத்தி விட்டு நாணுவைத் தம் ஆசனத்துக்கு அருகில் வரும்படி அழைத்தார்.

''உன் தகப்பனார்தானே 'முற்போக்கு' பத்திரிகையின் முதலாளி?''

''ஆமாம், சார்!''

''அப்போது நான் சொல்வதைக் கவனமாய்க் கேள். நான் உன்னிடம் ஒரு கதையைக் கொடுக்கிறேன். அதைக் கொண்டு போய் உன் தகப்பனார் கையில் கொடுத்துப் பத்திரிகைஆசிரியரிடம் சேர்ப்பிக்கச்சொல்லு. படித்துப் பார்க்கட்டும். பிடிக்கா விட்டால் கதையை என்னிடமே திருப்பிக் கொண்டு வந்து கொடுத்து விடு. என்ன?''

''நான் எங்கப்பாவிடம் சொன்னால் அதைக் கட்டாயம் எடுத்துக் கொள்வார், ஸார்!'' என்றான் நாணு.

''இல்லை, இல்லை. நான் சொல்கிறபடி தான் நீ செய்ய வேண்டும். இல்லாவிட்டால் எனக்கு ரொம்பவும் கோபம் வரும்.''

''சரி, சார்!''

அன்று நாணு வீடு சென்ற போது அவன் தகப்பனார் வெளியே சென்றிருந்தார். சங்கர ஐயரின் கதையை அவரிடம் சேர்க்கும் வரையில் நாணுவுக்கு முள்மேல் நிற்பது போலிருந்தது. சீக்கிரம் அந்தக் கதையை அவரிடம் சேர்ப்பித்தால் தானே அது சீக்கிரம் பத்திரிகையில் வெளிவரும்?

கடைசியாகத் தகப்பனார் வந்தார். அவரிடம் கதையைக் கொடுத்து விட்டுத் தன் மதிப்புக்குரிய உபாத்தியாயர் கூறியதையும் சொன்ன பிறகுதான் நாணுவுக்கு நிம்மதி ஏற்பட்டது.

இரண்டு வாரங்கள் கழிந்தன. நாணுவுக்கு என்னவோ சங்கரய்யரின் கதையைப்



பற்றிச் சந்தேகமே தோன்றவில்லை. அவர் கதையைப் பிரசுரிப்பதற்கு எடுத்துக்கொண்டு விடுவார்கள் என்றே எண்ணியிருந்தான்.

அடுத்த நாள் நாணு பள்ளிக்கூடத்துக்கு வந்த போது அவன் முகம் வாடியிருந்தது. அவன் கையிலிருந்த காகிதங்கள் வியர்வையால் நனைந்திருந்தன.

உபாத்தியாயர்கள் இளைப்பாறும் அறையில் அன்று போலவே வறட்டுத் தவளையும் சங்கர ஐயருந்தான் இருந்தார்கள். வறட்டுத் தவளையைக் கண்டதும் நாணு சற்றுத் தயங்கினான். தான் சொல்ல வந்ததை அப்போது சொல்லக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான். அப்போது வறட்டுத் தவளை அவனைப் பார்த்து, ''யாருடா, அது இங்கே வந்து கத்திக்கிட்டிருக்கிறது? ஓ... நாணுவா? அடாடா, நான் பார்க்கவே இல்லை. என்ன நாணு? என்ன விஷயம்? அது என்ன உன் கையில்?'' என்று கேட்டார்.

அதற்குள் சங்கரய்யரும் நாணுவின் கையில் இருந்த காகிதங்களைப் பார்த்து விட்டார். அவர் முகம் கருகியது.

நாணு சங்கரய்யர் இருந்த இடத்துக்கு அருகில் சென்றான்.

''ஸார்!''

''என்னப்பா ஆயிற்று?''

''வந்து...எங்கப்பா......இல்லே, அந்தக் கந்தசாமி மாமா...அதாவது...''

''மெதுவாய்ச் சொல்லு. பத்திரிகை ஆசிரியர் என்ன சொன்னார்?''

''இந்தக் கதையிலே என்னமோ காதலாமே, அது இல்லையாம். அதனாலே இதைப் பத்திரிகையிலே போட்டால் படிக்கிறவர்களுக்குப் பிடிக்காதாம். அதனாலே அப்பா சொல்லச் சொன்னார், நீங்கள் காதல் இருக்கிற கதையாக எழுதிக் கொடுத்தால் பத்திரிகையிலே போடுவார்களாம்.''

வெங்கடசாமி சிரித்தார். ''என்ன ஓய், நான் என்ன சொன்னேன்? இந்தாப்பா, நாணு! இந்த வாத்தியாருக்குக் காதல் என்றாலே பிடிக்காது. வேலையை விட்டாலும் விடுவாரே தவிர, காதலைப் பற்றி எழுத மாட்டார்.'' வெங்கடசாமியின் கேலிச் சிரிப்பு அறை முழுவதும் எதிரொலித்தது.

''நான் அப்படிச் சொல்லவில்லை. இந்தக் காலத்தில் எழுத்தாளர்களுக்கு வேறு எதைப் பற்றியும் எழுதப் பிடிக்காமல் இருக்கிறதே என்றுதான் நான் சொன்னேன். என் கதையிலே ஏதாவது தவறுதல் இருக்கலாம். இல்லாவிட்டால்...''

''ஸார், உங்களுடைய கதை ரொம்ப நன்றாயிருக்கிறது!''

நாணு முகத்தில் பரிதாபம் சொட்டியது.

''நீ படித்தாயா?''

''ஆமாம். அப்பா அதை என்னிடம் கொடுத்ததும் எனக்குக் கோபம் கோபமாக வந்தது. அந்தக் கதையைப் படித்துப் பார்த்தேன். ரொம்ப நன்றாயிருந்தது. கடைசியிலே அந்தக் கிழவன் செத்துப் போகிறபோது நான் அழுதே விட்டேன்.''

''கிழவன் செத்துப் போனால் யாருக்கென்னடா? சின்னவர்கள் செத்துப் போனால்தான் அழணும்.'' வறட்டுத் தவளையின் வேதாந்தம் அவனுக்குப் பிடிக்கவில்லை. சங்கரய்யரின் தோல்வி அவனை வாட்டிக் கொண்டிருந்தது.

அந்த அறையிலிருந்த கடிகாரம் பத்துமணி அடித்தது.

''சரி, நாணு. நீ வகுப்புக்குப் போ. நானும் கிளம்பி விட்டேன்'' என்று சொல்லி விட்டுச் சங்கரய்யர் தம்முடைய கோட்டை எடுத்து மாட்டிக் கொண்டார்.

உடனே வெங்கடசாமி, ''நீர் போமையா. நான் இந்தப் பையனிடம் இரண்டு வார்த்தை பேசணும்'' என்றார்.

சங்கரய்யர் அறையை விட்டு வெளியேறியதும் வறட்டுத் தவளை நாணுவைத் தம் அருகில் அழைத்துத் தாழ்ந்த குரலில் பேச ஆரம்பித்தார்.

''இந்தாப்பா, நீ ஜாக்கிரதையாயிரு. அந்த வாத்தியாருடைய கதையை உங்கப்பா எடுத்துக்கலையோன்னோ? அதனாலே அவர் உன்னைப் 'பெயில்' பண்ணினாலும் பண்ணு

வார். நீ நாலாவது பாரத்திலே பாஸ் செய்து விட்டாயானால், அப்புறம் என் வகுப்புத்தான். அப்போது கவலையில்லை. சரி, மணியாச்சு. நீ போ.''

நாணு நடுங்கி விட்டான். ஆனால் அவன் பயந்திருக்க வேண்டிய அவசியமே இருக்கவில்லை. நான்காவது பாரத்தில் அவன் வகுப்பில் முதலாவதாகத் தேறினான்.

அதன்பின் சங்கரய்யர் பள்ளிக்கூடத்துக்கு வரவில்லை. தம் முகத்தைப் பார்க்க அவமானப்பட்டுக் கொண்டு அவர் வேலையை விட்டுவிட்டதாகச் சொல்லிக் கொண்டார் வறட்டுத் தவளை வெங்கடசாமி.

* * *

இருபத்தைந்து வருடங்கள் இருபத்தைந்து நிமிடங்களைப் போல் கழிந்தன. அதற்குள் நாணுவின் வாழ்க்கையில் எத்தனை மாறுதல்கள்? அவன் தகப்பனார் இறந்து சுமார் பதினைந்து வருடங்களாகி விட்டன. அவர் தம் ஒரே மகனுக்காக ஏராளமான செல்வத்தையும் 'முற்போக்கு' பத்திரிகையையும் வைத்து விட்டுப் போயிருந்தார். ஆறு மாத காலம் நாணு அந்தப் பத்திரிகையை நடத்தி வந்தான். பின்பு அதில் அவனுக்கு ஆர்வம் குறைந்து விட்டது. திரைப் படங்கள் தயாரிப்பதில் அவன் கவனம் சென்றது. தன் ஒன்றுவிட்ட மாமன் மகனிடம் தன் பத்திரிகையை ஒப்படைத்து விட்டு, திரைப்படங்களைத் தயாரிக்க ஆரம்பித்தான். திரை வானிலே பிரபலமடைந்த நட்சத்திரங்களைப் பொறுக்கி யெடுத்து அவர்களைத் தன் படங்களில் நடிக்கச் செய்தான்.

அவனுடைய தயாரிப்பில் சுமார் பத்துப் படங்கள் வெளியாயின. பணம் வந்து குவிந்தது. பாராட்டுதலுக்குக் கேட்க வேண்டுமா? திரைப் படங்கள் தயாரிப்பதில் தலைசிறந்தவனாக விளங்கினான் அவன். அவன் எடுத்த படங்களெல்லாம் பல விஷயங்களில் ஒன்றுக்கொன்று மாறுபட்டன. ஆனால் ஒரு விஷயத்தில் மட்டும் அவைகளில் வித்தியாசமில்லை. அவை எல்லாம் காதல் சித்திரங்களே.

நாணுவின் கடைசிப் படம் ''காதலா? கடமையா?'' வெகு சிறப்பாக ஓடிக் கொண்டிருந்தது. அப்போது நாணுவின் மனத்தில் ஒரு போராட்டம் நடந்து கொண்டிருந்தது.

காதல் படங்கள் எடுத்து எடுத்து அவனுக்குச் சலித்து விட்டது. புதுவிதமானதொரு படம் எடுக்க வேண்டுமென்ற அவா அவனுக்குப் பிறந்தது. ஆனால் ஜனங்கள் அதை வரவேற்க வேண்டுமே! படம் படுத்து விட்டால்?... பண நஷ்டத்தோடு மட்டுமல்லாமல் அவன் பெயரும் அல்லவா கெட்டுவிடும்? ''நாராயணன் படமா? கட்டாயம் பார்க்க வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டு திரள் திரளாக வந்து குவியும் ஜனங்கள் பிறகு கொட்டகைப் பக்கம் தலைக் காட்டமாட்டார்கள். என்னதான் செய்வது?

ஏகாந்தமாயிருந்தால் மனத்திலே ஒரு தெளிவு ஏற்படுமென்று நிச்சயித்துக் கடற்கரைப் பக்கமாகச் சென்றான் நாணு. ''காதலில்லாக் கதை—அதை எழுதத்தான் யாருக்குத் தைரியம் வரும்?''

இருபத்தைந்து வருடங்களுக்கு முன் காதலில்லாக் கதை எழுதிய ஒருவரின் முகம் அவன் கண்முன் தோன்றியது. சங்கர ஐயரோ

## ஏப்ரல் மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக் கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. ஏப்ரல் மாதப் போட்டிக்கு ஏப்ரல் 1-ம் தேதியிலிருந்து 30-ம் தேதி வரை கதைகள் எழுதியனுப்பலாம். ஏப்ரல் மாதப் போட்டிக்கு வந்த கதைகள் மே மாதம் முழுதும் பரிசீலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை ஜூன் மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசீலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடைவீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பியனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

—ஆசிரியர், கல்கி

ஏழை. இருந்தாலும் அவர் தம் மனத்தில் வேரூன்றியிருந்த எண்ணத்தின்படி நடக்கத் தயங்கவில்லை. அவர் மட்டும் காதலைப்பற்றி எழுதியிருந்தால் அவர் கதைகளையும் தான் பிரசுரித்திருப்பார்கள். அவரை வாட்டிய கவலைகள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தீர்ந்திருக்கும். ஆனால் அவர் அப்படிச் செய்ய விரும்பவில்லை. அவன்? அப்படியே தான் எடுக்கப்போகும் படம் ஜனங்களின் ஆதரவைப் பெறாவிட்டாலும் அதனால் அவன் வாழ்வு பாழடைந்து விடப் போவதில்லை. வறுமையால் வாடிக் கொண்டிருந்த சங்கர ஐயர், "பிறர் செய்யும் காரியத்தைத் தானும் செய்வதில் பயனில்லை. யாரும் செய்யாததைச் செய்யவேண்டும்" என்ற எண்ணத்தினால் தம் வாழ்க்கையில் வெற்றியையும் நிராகரித்தார். அப்படியிருக்கத் தன் வாழ்க்கையில் வெற்றியடைந்து பணம் குவித்த பின்னும், தான் தயங்குவதை எண்ணி வெட்கமடைந்தான் நாணு.

அடுத்த நாளே எல்லா முக்கிய பத்திரிகைகளிலும் விளம்பரம் செய்தான். திரைப் படத்துக்காக ஒரு காதலில்லாக் கதை தேவையென்றும் படப்பிடிப்புக்காகத் தேர்ந்தெடுக்கப்படும் கதைக்குச் சிறந்த சன்மானம் வழங்கப்படுமென்றும் அறிவித்தான். பரிசோதனைக்காக வரும் கதைகளைப் படித்து அவைகளில் மிகச் சிறந்ததை நிச்சயிக்க ஒரு தனிக் குழுவினரையும் நியமித்தான்.

ஆறு மாதம் கழிந்தது. ஒருநாள் அவனுடைய காரியதரிசி ஒரு கதையை எடுத்துக் கொண்டு நாணுவிடம் வந்தார்.

"வந்த கதைகளில் சிறந்தது இதுதான் ஸார். ஆனால் எழுதின மகராஜன் தன் ஊர் பேர் எதுவும் கொடுக்கவில்லை."

"அப்படியானால் அது வேண்டாமப்பா. வீணுக்குப் பின்னால் கோர்ட்டுக்குப் போக வேண்டி வந்தாலும் வரும்."

"இல்லை, ஸார். அது ரொம்பவும் நன்றாயிருக்கிறது. எதற்கும் நீங்கள் ஒருதடவை படித்துப் பாருங்கள்."

தன் சாய்வு நாற்காலியில் சாய்ந்து அதைப் படிக்கத் தொடங்கினான் நாணு.

கதை வெகு அழகாக எழுதப்பட்டிருந்ததைப் பற்றிச் சந்தேகமில்லை. ஆனால் அதை அவன் முன்பு எங்கோ படித்திருக்கிறான். முக்கியமாக அந்தக் கிழவன் தன் உயிரையே கொடுக்கும் கட்டம்—அதை அவன் எங்கே படித்திருக்கிறான்?

திடீரென்று நாணுவுக்குப் புரிந்து விட்டது. அவன் கவனம் கடைசிப் பக்கத்தில் எழுதியிருந்த குறிப்பின் மீது பதிந்தது.

"நான் என் பெயரையோ இருப்பிடத்தையோ வெளியிட விரும்பவில்லை. இந்தக் கதை படத்துக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் அதுவே எனக்குப் போதும். இதற்கான சன்மானம் எனக்குத் தேவையில்லை. என் உற்றார் உறவினர் வறுமையிலேயே மடிந்து விட்டார்கள். வயது முதிர்ந்த காலத்தில் நான் மட்டும் செல்வத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வது? எப்போது அதனால் பலன் தேவையோ அப்போது எனக்கு அது கிடைக்க

வில்லை. இந்த உலகத்தில் காதலில்லாக் கதையைப் படத்துக்காகத் தேர்ந்தெடுக்கும் தைரியம் வாய்ந்த ஒருவர் இருக்கிறார் என்று நான் இப்போது தான் அறிகிறேன். அவர் தைரியத்துக்காகவாவது அவர் எடுக்கும் படம் வெற்றிகரமாக ஓட வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்கிறேன். நான் காதலைப் பழிக்கவில்லை. அதன் மேல் எனக்கு ஒரு கோபமுமில்லை. ஆனால் காதலில்லாக் கதைக்கு இன்றைய உலகில் இடமே கிடையாதா? இருக்கிறது என்று அறிந்ததே எனக்குப் போதிய சன்மானம்.......''

நாணுவுக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. உண்மையாகவே சங்கர அய்யர் தம் உற்றார் உறவினரை இழந்து பரிதபித்துக் கொண்டிருக்கிறாரா? அவர் எவ்வளவெல்லாம் கஷ்டப்பட்டாரோ?

''எப்படி ஸார் கதை?'' என்று கேட்டவாறு வந்த காரியதரிசியைப் பார்த்து நாணு, ''அதெல்லாம் இருக்கட்டும். இந்தக் கதை எழுதியவரை எனக்குத் தெரியும். இது வந்த கவரை எடுத்துக் கொண்டு வாருங்கள்'' என்றான். காரியதரிசி கொண்டுவந்த கவர் மீதிருந்த முத்திரையைப் பார்த்துச் சங்கர அய்யர் நல்லூரில் இருக்கிறார் என்று ஊகித்தான். ஆனால் கதை வந்து ஆறு மாதமாயிற்றே? அவரைத் தானாகவே சென்று காண வேண்டுமென்று தீர்மானித்து, அன்றிரவே நல்லூருக்குக் கிளம்பினான் நாணு.

அங்கு சென்று விசாரித்தபோது சங்கர அய்யரைப்பற்றித் தகவல் கிடைத்தது. அவர் அந்தக் கிராமத்துக்கு வந்து பத்து வருஷங்களாயின என்றும் வரும்போதே மனைவியையும், மகனையும் இழந்த தனி மரமாய்த்தான் வந்தாரென்றும் அறிந்தான். கிராமத்துச் சிறுவருக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து அதிலிருந்து வந்த பணத்தைக் கொண்டு, அவர் ஜீவனம் நடத்தியதாகவும் தெரிந்தது.

''இப்போது அவர் இங்கேதானே இருக்கிறார்?'' என்று கேட்டார்.

''இல்லீங்களே. அவரு இரண்டு மாசத்துக்கு முன்னே போயிட்டாரு.''

''போய் விட்டாரா? ஏன்?''

''ரொம்பக் கஷ்டப்பட்டாருங்க. எவ்வளவோ நாளு குடிக்கக் கஞ்சிகூட இல்லாமே இடப்பாரு. அப்புறமா ஏதோ கதையாம். யார்கிட்டேயோ அனுப்பிச்சாரு. அவர் முந்தி இருந்த ஊரிலே நாணு என்று ஒரு பையன் இருந்திச்சாம். அதைப்பற்றியே பேசிக்கிட்டிருந்தாரு. அவரு ஸ்கூல் வாத்தியாரா இருக்கச்சே அந்தப் பையன் அந்தக் கதையைப் படிச்சதாம். அவரு கதை சினிமாவிலே வந்து அந்தப் பையன் பார்த்தால் சந்தோஷப்படும் என்று சொல்லுவாரு. பைத்தியம் பிடித்து விட்டது என்று எல்லாரும் பேசிக்கிட்டாங்க. ஆனால் அவரு போனபோது அவரிடம் பாடம் சொல்லிக்கொண்ட பசங்கள் எல்லாம் 'ஒன்னு' அழுதுட்டுதுங்க. ஆமாம், நீங்கள் யாரு? இவ்வளவு தூரம் அவரை விசாரிக்கிறீங்களே?''

''நான் அவருக்குக் கடமைப்பட்டவன். வேறு ஒன்றுமில்லை'' என்றான் நாணு. அவன் கண்களில் நீர் சுரந்தது.

# தமிழ் கூறும் நல்லுலகம்

பூனா தென்னிந்திய ஆஸ்திக அன்பர்கள் முதன் முதலாக 'ஸ்ரீராமநவமி உற்சவ'த்தைப் பக்தி சிரத்தையுடன் இருபத்தெட்டு தினங்கள் கொண்டாடினர்.

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீஜகத் குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமி அவர்களே ஆசியுடன் ஸ்ரீவாசுதேவசர்மா அவர்களை உபந்யாசத்துக்கென்று அனுப்பி வைத்தது, இவ்வருட வைபவத்தின் தனிச்சிறப்பாகும்.

புனர்வஸு நட்சத்திர தினத்தன்று ஸ்ரீராம நவமி உற்சவம் தொடங்கப்பட்டுப் பிரதி தினமும் காலையில் மூல வால்மீகி ராமாயண பாராயணமும், இரவில் ராமாயண உபன்யாசமும் தொடர்ந்து நடத்தப்பட்டு, ஸ்ரீராம பட்டாபிஷேகம் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. மறுதினம் சீதா கல்யாணம் சிறப்புடன் நடந்த பின்பு, இரவு ரத உற்சவம் நாகஸ்வர மங்கள வாத்தியம் இன்னிசை முழங்க, ஏராளமான அன்பர்களும், பெண்மணிகளும் பக்தி பரவசத்துடன்சூழ்ந்துவர ஆனந்தமாக நடந்தேறியது.

★

கொழும்பு பாரதி இளைஞர் சங்கத்தார் கவிச்சக்கரவர்த்தி கம்பன் விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடினர்.

சங்கத் தலைவர் நயமணி திரு கல்கிதாசனார் இவ் விழாவுக்குத் தலைமைவகித்துப் பேசினார். உலக மகா காவியங்களில் ஒன்றான கம்ப ராமாயணத்தை எல்லோரும் படிக்க வேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டார்.

சங்கத்தின் சார்பாக வாரந்தோறும் ''சொற் பயிற்சி இலக்கிய வகுப்பு'' நடத்துவதென்றும், தக்க அறிஞர்களைக்கொண்டு இலக்கியச் சர்ச்சைகள் செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டன.

முதலாவதாக, திருக்குறள் வகுப்பை அறிஞர் அ. தங்கவேலனார் தொடங்கி வைத்தார்.

★

குவாலியர் தக்ஷிண பாரத ஸமாஜத்தின் முதல் ஆண்டு விழா ஸ்ரீராமநவமி தினத்தன்று பிராசீனப் பண்பாட்டின்படி விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. இராமாயணத்தில் சில ரஸமான கட்டங்களை ஸ்ரீ எஸ். ஸத்யமூர்த்தி சொற்பொழிவாற்றினார். மற்றும் குவாலியரிலுள்ள தென்னிந்தியர்களின் இசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. மத்தியப்பிரதேச உயர் நீதிமன்ற நீதிபதி கனம் எச். ஆர். கிருஷ்ணன் அவர்களும் கலந்துகொண்டுவிழாவைச்சிறப்பித்தார்.

★

ரயில்வேயில் பணியாற்றும் அன்பர்கள் பலரை அங்கத்தினராகக் கொண்டு கல்கத்தா, கெர்பூரில் சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன் தொடங்கிய, தென் இந்தியர் இலக்கியக் கழகம் இலக்கிய வளர்ச்சிக்காகப் பாடுபட்டு வருகிறது.

பாரதி சங்கக் கட்டடத்தில், கம்பர் விழாவை மார்ச் 23-ந் தேதி இச் சங்கம் கொண்டாடியது. திரு மு. நாராயணசுவாமியின்இறை வணக்கத்தோடு கூட்டம் ஆரம்பிக்கப் பட்டது. ''கம்பனின் இலக்கியப் படைப்பி''னைப் பற்றி அன்பர்கள் பேசினர். திரு சீனிவாசன் அவர்கள் கூட்டத்துக்குத் தலைமை வகித்து வெகு சிறப்பாக நடத்திக் கொடுத்தார். செயலாளர் பாலசுப்பிரமணியன் நன்றி கூற விழா இனிது முடிந்தது.

★

ஆஸ்திகத்தைப் பரப்புவதே முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ள தேவலாலி பக்த ஸமாஜத்தின் ஆதரவில் மார்ச் 29-ந்தேதி ஸ்ரீராமநவமி உற்சவம் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

அன்று காலை பூஜை பஜனையுடன் ஆரம்பிக்கப்பட்டு, மாலை நன்கு அலங்கரிக்கப்பட்ட இரதத்தில் ஸ்ரீராமபிரானின் பட ஊர்வலம் ஷெனாய் வாத்திய இசையுடன் நகரின் முக்கிய தெருக்களில் சென்றது. ஸ்ரீ. பி. நா. ஸோமன் தலைமை வகிக்க, ஸ்ரீ ரா. ராமசுவாமி விழாவைத் துவக்கி வைத்தார்.

ராமநாம மகிமையைப் பற்றிப் பல அறிஞர்கள் பேசினார்கள்.

ஸ்ரீமதி ஷைலா ஜோஷியின் இந்துஸ்தானி சங்கீதமும், ஸ்ரீமதி தேவகி ரெங்கப்பாவின் கர்நாடக இன்னிசையும் வந்திருந்த அனைவரையும் ஆனந்திக்க வைத்தன.



புளசவலிலுள்ள தென்னிந்திய சங்கத்தினர் ஸ்ரீராமநவமி உற்சவத்தை மார்ச் 29-ந் தேதியிலிருந்து ஏப்ரல் 7-ந் தேதி வரை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். திரு. கே. சபாரத்தினம் 'ராமதத்துவம்' 'ராமரும் வாலியும்' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினார். குமாரி கிருபாவல்லி குழுவினரும், திரு ராமச்சந்திரன் கோஷ்டியாரும் இன்னிசை விருந்தளித்தனர்.




விடியற் காலம் நான்கு மணியோடு வேலைமுடிந்துவிடுகிறது என்றுதான் 'ஷிப்பந்திகள்வேலை நேரம்' என்ற அட்டவணை குறிப்பிடுகிறது. ஆனால் ஒரு நாளைக்காவது நான்கு மணிக்கே வேலை முடிந்திருக்கிறதோ?

எனக்கு அடுத்தபடியாகப் பார்க்க வேண்டிய நண்பர் மூன்றே முக்காலுக்கே வந்துவிடுகிறார். அவரையும் உதவிக்கு வைத்துக்கொண்டு வேலைகளைக் கவனித்தால், எழும்பூர் செல்லும் இண்டோ—சிலோன் எக்ஸ்பிரஸ் பிளாட்பாரத்திலிருந்து நகர்ந்ததும் சற்று நிம்மதியாகப் பெருமூச்சு விடலாம்.

குறிப்பாக, அன்றைய இரவில் கடுமையான வேலை, ஸ்டேஷன் மாஸ்டர் ரங்கராஜனுக்கு. முப்பது வருஷங்களாக ரயில்வேயில் உழைத்த சரீரம். வேலைநிறுத்தம், புரட்சி, தொழிலாளர் சங்கம், அது இது என்ற பெயர்களெல்லாம் உற்பத்தியாவதற்கு முன்பிருந்து வஞ்சனையில்லாமல் உழைத்து வைரம் பாய்ந்த கட்டை. அந்தக் காலத்தில் அதாவது அவர் ரயில்வேயில் புகுந்த காலத்தில், வாரத்துக்கு மூன்று நாள்களாக 'ரிலீவிங் டியூடி'யில் சென்று வேலைபார்த்திருக்கிறார். சேர்ந்தாற் போல் இரவில் பணியாற்ற வேண்டியிருக்கும். ரங்கராஜன் அதற்கு அஞ்சியதில்லை. ஆனால்சரீரத்தின் முறுக்குத் தளர்ந்து, நாலைந்து நாட்கள் சேர்ந்து இரவு வேலை பார்ப்பதற்கே மிகவும் அலுப்பாக இருந்தது. மேலும் 'முணுக் முணுக்' என்று விளக்கு எரியும் சின்ன ஸ்டேஷனா? விழுப்புரம் ஜங்ஷன் ஆயிற்றே!

சென்னை நோக்கிச் செல்லும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸை அனுப்பி விட்டு, மிகுந்த அசதியோடு நாற்காலியில் வந்து அமர்ந்தார் ரங்கராஜன். என்றுமில்லாதபடி அன்றைக்குச் சோர்வு மிக அதிகமாக இருந்தது அவருக்கு. அநேகமாக ஒவ்வொரு வண்டியிலும் பெட்டிகளை அவிழ்க்கவும் கோக்கவும் வேண்டியிருந்தது. பாயிண்ட்ஸ்மேன் பரமசிவம் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்வான். ஆனால், ரங்கராஜன் 'ஷண்டிங்' வேலைகளையெல்லாம் நேரிடையாகவே கவனிப்பது வழக்கம்.

அன்றையச் சோர்வுக்குக் காரணம் அது மட்டும்தானா? இல்லை!

அந்தக் கடிதம்......!

'என்ன தைரியம்? உலகத்தில் இப்படியும் நடக்கிறதே!... இந்தக் காலத்தில் யாரையுமே நம்புவதற்கில்லை. உலகம் கிடக்கட்டும். இந்த அக்கிரமங்களெல்லாம் நம்வீட்டுவாசற்கதவையல்லவா தட்டுகின்றன!'

ரங்கராஜன், இதே ரீதியில்தான் எண்ணி எண்ணி மாய்ந்து கொண்டிருந்தார். மனத்தை அழுத்திக் கொண்டிருக்கும்செய்திகளை யாரிடமாவது சொன்னால்சற்று ஆறுதலாக இருக்கும் போல் தோன்றியது. எவரிடம் போய்ச் சொல்வது? குடும்பத்தின் கௌரவத்தைக் குலைக்கும் ரகசியத்தை அவரே தம்பட்டம் அடித்துக் கொள்ளலாமா...?

நீண்ட பெருமூச்சு ஒன்றை வெளியே தள்ளி, ஆசுவாசப்படுத்திக் கொள்ளப் பார்த்தார் அவர். ஆனால் சிந்தனையை வேரறுத்து எறிய முடியவில்லை. அவர் நெஞ்சத்தைப் பேரிடியால் தாக்கிய அந்தச் சம்பவம், முழு நீளப் படமாக அவர் முன் விரிந்தது.

அன்றிரவு சுமார் ஒரு மணிக்கு நம்பர் நூற்றி ஒன்பது பாஸஞ்சரை அனுப்பி விட்டுத் தம் அறைக்குத் திரும்பினார் ரங்கராஜன். முக்கியமான வேலைகளெல்லாம் செவ்வையாக நிறைவேறிவிட்ட திருப்தி அவர் முகத்தில் பளிரிட்டது.

"என்ன ரங்கராஜன்! சௌக்கியமா?"

"கே. எஸ்.ஸா? எங்கேடா வந்தே நீ? உள்ளே வரக்கூடாதோ?"

'கே. எஸ்.' என்று முன்னெழுத்துக்களால் ரயில்வேயில் பிரபலமாகியிருக்கும் ஸ்ரீமான் கே. சுந்தரவரதன் உள்ளே வந்தார்.

சுந்தரவரதனும் ரங்கராஜனும் ரயில்வேயில் ஒன்றாகச் சேர்ந்தவர்கள். பல ஸ்டேஷன்களில் சேர்ந்து வேலை செய்தவர்கள். எனவே, முதிர்ந்த நட்போடு அவர்கள் பழகியதில் எள்ளளவும் ஆச்சரியமில்லை.

'' இருவண்ணுமலை வரைக்கும் போகிறேன். கமலத்துக்கு உடம்பு சரியில்லே என்று மாப்பிள்ளே கடிதம் போட்டிருந்தான். இன்றைக்கு ஓய்வு நாள். போய்ப் பார்த்து விட்டு இரவு திரும்பியாக வேண்டும்......ம். சங்கரனுக்கு இந்த வருஷமாவது கல்யாணம் பண்ணப் போகிருயா, இல்லேயா?''

'' பண்ண வேண்டுமடா. பிடி கொடுத்துப் பேச மாட்டேன் என்கிருனே, அவன்? அவன் அம்மாவாளுல் நாள் தவருமல் நச்சரிப்புப் புராணம் நடத்துகிருள். நான் என்ன செய்வேன்? தலேக்கு மேலே வளர்ந்து விட்ட பிள்ளே. அதட்டிப் பேச முடியுமா நம்மால்?''

''அதற்காக இப்படியே விட்டுக் கொண்டிருக்க முடியுமா? கமலத்தின் வயதில் லேயோ, அவனுக்கு? இந்த டிஸம்பரோடு இருபத்துநாலு முடிந்திருக்குமே?''

'' ஆமாம். பட்டணத்துக்குப் போனல் நீ அவனேப் பார்த்துச்சொல்லிவிட்டுவாயேன்.''

'' கட்டாயம். கைநிறையச் சம்பாதிக்கிற பிள்ளே. காலா காலத்தில் கட்டிப் போட வேண்டாமோ?''

இந்த ரஸமான கட்டத்தில் பரமசிவம் கையில் ஒரு சூட்கேஸுடன் உள்ளேவந்தான்.

'' ஸார், மாயவரம் வண்டியிலிருந்து அவிழ்த்த ரயில் பெட்டியில் இந்தப் பெட்டி இருந்தது.''

'' என்னடா, இது. புதுத் தொல்லே!'' என்றவாறே எழுந்தார், ரங்கராஜன். அவருக்கு வேலே வந்துவிட்டதை அறிந்த சுந்தரவரதன், '' நான் வருகிறேனடா. முடிந்தால் ராத்திரி பார்க்கிறேன்'' என்று கூறிவிட்டுப் பிளாட்பாரத்தைநோக்கிநடந்தார்.

பரமசிவம் கீழே வைத்த பெட்டியைக் கூர்ந்து பார்த்தார், ரங்கராஜன்.

'' ஏதோ பெயர் எழுதியிருக்கிறது போலிருக்கே?... ...வி. சங்கரி...... !''

'' பொண்ணுடை பெட்டிங்களா!'' என்று ஆச்சரியத்தில் கூவினுன் பரமசிவம்.

'' ஆமாடா. சரி, நீ போய்க் கான்ஸ்டபிளே அழைத்து வா. பூட்டை உடைத்தால் தான் திறக்க முடியும் போல் இருக்கு.''

இரண்டே நிமிஷத்தில், டியூடி கான்ஸ்டபிளுடன் பரமசிவம் திரும்பினுன். அவர் முன்னிலேயில் பூட்டு உடைக்கப் பட்டது. பரமசிவத்துக்கு ஒரே குதூகலம். அசகாய வேலேயைச் செய்துவிட்டது போன்ற கர்வம். ஸ்டேஷன் மாஸ்டர் இட்ட உத்தரவுகளேப் பரபரப்புடன் நிறைவேற்றிக் கொண்டிருந்தான்.

பெட்டியைத் திறந்ததும், முதன் முதலாகத் தென்பட்டது, கிழிக்கப்பட்ட உறையுடன் கூடிய கடிதம்.

'' அதிலே ஏதாவது விலாசம் இருக்கா, பாரு!'' என்ருர் ஸ்டேஷன்மாஸ்டர்.

பரமசிவம் கடிதத்தை அவரிடம் நீட்டினுன். வாங்கிய ரங்கராஜனின் உள்ளம் ஒரு நிமிஷம் அதிசயத்தில் ஆழ்ந்தது. ' ரொம்பவும் தெரிந்த கையெழுத்தாக இருக்கிறதே?'

உறைமேலிருந்த விலாசத்தைப் படித்தார். '' குமாரி வி. சங்கரி,......சென்னே—17.''

நின்று கொண்டிருந்த கான்ஸ்டபிளுக்கு அரைத் தூக்கம். டீ குடிப்பதற்காக வந்த சமயத்தில் பரமசிவம் பிடித்துக் கொண்டு விடவே, அவர் அங்கே வர வேண்டியதாயிற்று. இல்லாவிட்டால், இஷ்டம்போல அவர் வந்திருப்பார்.

'' நல்லதாய்ப் போச்சுங்க, ஸார். சாமான்களே யெல்லாம் பதிவு பண்ணிக்கிட்டுப் பெட்டியைப் பூட்டிப் போட்டுடுங்க. விலாசத்துக்கு எழுதினுல், தானே வந்து ' எவிடென்ஸ் ' கொடுத்துட்டு வாங்கிக்கிருங்க...''

மற்றச் சந்தர்ப்பங்களில் ரங்கராஜனும் இதைத்தான் செய்திருப்பார். ஆனல், இப்போதோ, உறைக்குள் இருந்த கடிதத்தைப் படித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆசை பலமாக எழுந்தது.

'' அட, இருப்பா-நீ ஒண்ணு!......இந்தக் கடிதாசியைப் படிச்சு ஏதாவது தடையம் கிடைக்குமான்னு நான் பார்க்கிறேன்!'' என்று நிமிர்ந்த அவர் கண்களில், வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த டிரெயின் கிளார்க் ராமகிருஷ்ணன் பட்டான். '' ராமகிருஷ்ணு! இங்கே வா. உன் கையெழுத்து நன்ருக இருக்குமே!.........வா. இந்தச் சாமான் பட்டியலே எழுது......''

வேலேகளேத் தக்கவர்களிடம் ஒப்படைத்து விட்டு, நாற்காலியில் வந்து அமர்ந்து, உறைக்குள் விரல்களே விட்டார். அவர் விரல்கள் ஏனே தெரியவில்லே, நடுங்கின.



இருந்தாலும் ஒருவாறு சமாளித்துக்கொண்டு அவர் கடிதத்தை வெளியே எடுத்தார். குறிப்பிடப்பட்டிருந்த பெயர்த் தலேப்பு, அவரைப் பிரமிப்படைய வைத்தது. விலாசதாரரை விளித்திருந்த இரண்டு வார்த்தைகளேப் படித்ததும் அவர் முகம் வெளிறியது. முதல் பாராவைப் படிப்பதற்குள் அவர் உடல் முழுவதும் வியர்த்துக் கொட்டியது. கடிதம் பூராவும் படித்ததும், உடம்பில் வெம்மை பரவி அவரை நிலே தடுமாறச் செய்தது.

உறையினுள் கடிதத்தைச் செருகி விட்டு ஐந்து நிமிஷம் அலமாந்து உட்கார்ந்து விட்டார். அந்த நேரத்துக்குள் தம்மைச் சுதாரித்துக் கொள்ள முயற்சி செய்தார்.

''பெட்டியைச் சாத்தி விடட்டுங்களா?''

பரமசிவத்தின் குரல், அவர் சிந்தனேயைக் கலேத்தது.

'' என்ன? என்ன சொன்னே? பெட்டியைச் சாத்துகிருயா? சரி, சரி...இந்தா, இந்தக் கடிதாசியையும் வைத்து விடு.''

அவனிடம் கடிதத்தை நீட்டுகையில் கண்ட்ரோல் மணி அலறியது. ரங்கராஜன் எழுந்து சென்று போனே எடுத்து 'விழுப்புரம்' என்று

கூறித் தம்மை அறிமுகம் செய்துகொண்டார். பின், ''ஆமாம், என்னது? 'ஒன் நாட் நைன் லேயா? இம்...வெளிர் நீலப் பெட்டி... பெயர் என்ன? சங்கரிதானே? இங்கே எடுத்து வைச்சிருக்கு. ஒன் எயிட்டின்லேயா? வரச் சொல்லுங்கோ'' என்று கேள்வியும் பதிலுமாகப் பேசினர்.

ஒருகணப் பொழுதுக்குள் அவர் தம்முள் ஒரு நீண்ட திட்டமும் தீர்மானமும் செய்து கொண்டு விட்டார்.

''எங்ககிட்டே வழக்கு வந்தப்புறம் அவ்வளவு சுலபமாகக் கொடுத்துட முடியுமா, ஸார்? அந்த அம்மா லப்-இன்ஸ்பெக்டர் கிட்டே வந்து...''

ரங்கராஜன் குழைந்தார். ''அட, என்னய்யா நீ? என்னமோ அவசரத்திலே விட்டு விட்டுப் போயிட்டாங்களாம். அதற்காகக் கேசு, கேன்னு இழுத்தடிக்க வேணுமென்கிறுயே! சந்தேகமிருந்தால் சரி. அதுதான் அந்த அம்மாவின் பெட்டின்னு நல்லாத் தெரியுதே!...அடடே, என்ன வண்டி உள்ளே வந்துக்கிட்டிருக்கு? தூத்துக்குடி எக்ஸ்பிரஸா?... பரமசிவம், பெட்டியை ரூமிலே தூக்கிப் போட்டுட்டு வா. நான் பிளாட் பாரத்துக்குப் போகிறேன்!''

வார்த்தைகளை அள்ளி வீசிவிட்டு, ஸிக்னல் விளக்கும் கையுமாகப் பிளாட்பாரத்தை நோக்கி விரைந்தார் அவர். கான்ஸ்டபிள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டேபோனுர்!

நிகழ்ந்த சம்பவங்களின் நினைவுப் படலத்தின் கடைசிக் காட்சி முடிவுறும் தருவாயில், அடுத்தபடி வரவேண்டிய அந்தோனிதாஸ் ஸ்டேஷன்மாஸ்டரின் பொறுப்பை ஏற்க வந்து சேர்ந்தார்.

''தாஸ்! அதோ அந்தப் பெட்டியை ஒரு இளம் பெண் பாஸஞ்சர் வந்து கேட்பார். அடுத்த கடலூர் வண்டியில் வருகிறாராம். பெட்டியைக் கொடுத்து விட்டு, ஒரு போர்ட்டருடன் என் வீட்டுக்கு அனுப்பு: அவ பிடிவாதமாக வருவதற்கு மறுத்தால், எனக்குச் சொல்லி யனுப்பு. நான் வந்து பார்த்துக் கொள்கிறேன்...''

''சரி, ஸார்......!''

தலைப்பாகையைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு புறப்பட்ட ரங்கராஜனின் நடை மிகவும் தளர்ந்திருந்தது. தலையில் உண்டாகி யிருந்த குழப்பத்தின் கனத்தைக் கால்களால் தாங்க முடியவில்லையா?

* * *

உள் அறையில் செய்தித்தாள் படித்துக் கொண்டிருந்தார், ரங்கராஜன். வாசலில், 'ஸார்!' என்ற அழைப்புக் குரல் கேட்டது.

''காமு! யாரோ 'கேட்'டண்டை கூப்பிடுகிருர்கள், பார்.''

போர்ட்டரும் ஒரு இளம் பெண்ணும் நிற்பதைக் கண்டதும் அவருக்கு விஷயம் ஒருவாறு விளங்கிவிட்டது.

''ஸ்டேஷன் மாஸ்டர் ரங்கராஜன் வீடு இதுதானே?''

''ஆமாம்'' என்றுள் காமு.

''நான் அவரைப் பார்க்க வேண்டும்.''

அவர் இருந்த அறையின் நிலைப்படியருகே வந்து, ''உங்களைத்தான் பார்க்க வேணுமாம்'' என்றுள் காமு.

வந்தவர், சங்கரியைப் பார்த்தார். இமை கொட்டாமல் பார்த்தார். நெஞ்சில் ஓரிடத்தில் பனித் துளியை வைத்தாற்போல் இருந்தது. தண்மை நரம்புகளூடே சென்று உடலெங்கும் வியாபித்தது.

அவர் இமைகள் படபடத்தன.

''நமஸ்காரம், ஸார்! நான்தான் சங்கரி. என் பெட்டியைக் கண்டு பிடித்துக் கொடுத்ததற்காக மிகவும் நன்றி. என்னை இங்கே வரச் சொன்னீர்களாம். நீங்கள் சொல்லியிருக்காவிட்டாலும் நானே வந்திருப்பேன். இந்தப் பெட்டியில் ஒரு முக்கியமான கடிதம் வைத்திருந்தேன். அது காணுமல் போயிருந்தால் மிகவும் வருத்தமாக இருக்கும்...''



''இருக்கிறதா, அம்மா?''

''இருக்கிறது. சாமான்கள் எல்லாமே இருக்கின்றன. என் சிநேகிதிகளின் கவனக்குறைவால் வந்தது தான். இந்தத் தொல்லை! ஏழெட்டுப் பேர்களாகச் சுற்றுப்பிரயாணத்துக்குக் கிளம்பினேம். நாங்கள் ஏறியிருந்த பெட்டியை இங்கே அவிழ்த்து விடுவார்கள் என்பது எங்களுக்குத் தெரியாது.''

''உம்?''

''வண்டி நின்றதும் என் சிநேகிதி ஒருத்தி பத்திரிகை வாங்க வேண்டுமென்றுள். நான்கு பேர்கள் இறங்கிப் பிளாட்பாரத்தில் பத்திரிகைக் காரனைத் தேடி அலைந்தோம். அதற்குள் காரேஜ் அவிழ்க்கப்படுவதை அறிந்த மற்றவர்கள் எல்லோருடைய சாமான்களையும் இறக்கிப் பக்கத்துக் கம்பார்ட்மெண்டில் ஏற்றி யிருக்கிறார்கள். அவசரத்தில் என் பெட்டிமட்டும் தவறி விட்டது.

வண்டி புறப்பட்ட சில நிமிஷங்களுக்குப் பின்பு அந்த உண்மை தெரிய வந்தது!''

''இப்போ என்ன செய்யப் போகிறீர்கள்?''

''ஸ்டேஷனில் போய் உட்கார வேண்டியதுதான். சிநேகிதிகள் சிதம்பரத்தில் இறங்குவார்கள். அடுத்த வண்டியைப் பிடித்து வருவதாகச்சொல்லியிருக்கிறேன். ஹூம், பிரயாணத் துவக்கத்திலேயே இந்த விபரீதம்! இரவு முழுவதும் எனக்குத் தூக்கமே இல்லை.''

''அதற்காகத்தான் நான் சொல்கிறேன், இங்கேயே தங்கி ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள் என்று!''

சங்கரிக்கு வியப்புத் தாங்கவில்லை. ''ஸார், ரொம்ப நன்றி. பரவாயில்லை, நான் ஸ்டேஷனுக்கே போய் விடுகிறேன்.'' அசதியில் அவள் முகம் வாடிப் போயிருந்தாலும் கூட நாணத்தின் செவ்வொளி சிறிதே படர்ந்திருந்தது.



சினிமா நடிகை: இதென்ன வம்பாப் போச்சு! சைக்கிள்காரர் காரில் வந்து இடித்துக் கொண்டு விட்டார், அவரைத் திட்டத் தெரியல்லே......! டைரக்டர் ஸார்! அவரை எப்படித் திட்டுவது என்று எனக்குக் கொஞ்சம் டைரக்ட் பண்ணுங்களேன்!

அவர் காமுவைப் பார்த்தார். காமு சங்கரியைப் பார்த்தான்!

''இங்கே இருந்து விட்டுப் போம்மா, குழந்தை! உன் உடம்பு ரொம்ப வாடிப் போயிடுத்தே?''

தாய்மை நிரம்பிய அந்தச் சொற்களில் சங்கரி தன்னை இழந்து விட்டாள். அந்த அன்புக் குரலைக் கேட்ட மாத்திரத்தில் நெஞ்சு நெகிழ்ந்தது.

''சரி, மாமி!''

ரங்கராஜனுக்கு உச்சி குளிர்ந்து விட்டது. அவர் வெளியே வந்து போர்ட்டரை அனுப்பி வைத்தார்.

இரவு வேலை பார்த்து விட்டு வந்த நாட்களில், பத்து மணிக்கு உணவருந்தி விட்டுப் படுத்துக் கொள்வார். எழுந்திருக்கும் போது மாலை மணி நாலரை ஆகியிருக்கும். இது தான் அவர் வழக்கம்.

அன்று ஏனோ அவருக்குத் தூக்கம் வரும் என்று தோன்றவில்லை. இரவில் தோன்றியிருந்த புயல்கள் ஓய்ந்து இளம் வெய்யில் அடித்துக் கொண்டிருந்தது, அவர் மனத்தில்.

''ஒரு மாதமாக உன் அழகு முகத்தைப் பார்க்காமல் என்னால் எப்படி இருக்க முடிகிறது என்பதை நினைத்துப் பார்த்தால் எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. நானும் இந்தக் 'காம்'பிலிருந்து தப்பித்துக் கொள்ள எவ்வளவோ முயன்றேன். மானேஜர் விட்டால்தானே? கடைசியில் என்னையே அனுப்பி விட்டார்!'' அந்தக் கடிதத்தின் சில வரிகள் ரங்கராஜனின் நினைவுத் தடாகத்தில் அலை பரப்பிக்கொண் டிருந்தன.

'அழகு முகம்தான்! ஆசிரியையின் முகம் போல் இல்லை. மாணவியின் முகம் போல் பசுமையாக இருக்கிறது! பேச்சிலும் தோற்றத்திலும் என்ன அடக்கம்! அடக்கமாவது? இவளா, ... அந்தமாதிரியாக?......

'ஏன்? முறை தவறி ஒன்றும் நடைபெற்று விடவில்லையே? மாறிக்கொண்டிருக்கும் காலத்தின் போக்கை நாமும் அனுசரித்து நடக்க வேண்டும்.'

காமு வந்து எதிரே நின்று அவர் சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைத்தான்.

''அந்தப் பெண் எவ்வளவு கலகலப்பாகப் பழகுகிறது என்கிறீர்கள்! பார்த்து ஒன்றரை மணி நேரம் ஆகவில்லை. ஒன்றரை வருஷம் நெருங்கிப் பழகினாற்போல் ஒட்டிக் கொண்டு விட்டாள்!...நமக்கு இந்தமாதிரி ஒரு மருமகள் கிடைத்தால் நான் ரொம்பவும் சந்தோஷப்படுவேன்......''

அவர் காமுவைப் பார்த்தார். அவள் முகத்தில் நடனமாடிய களிப்பை அளவிட்டார். 'காமுவிடம் சொல்லிவிட்டால் என்ன?'

''காமு, அவளுக்கு......''

''......இன்னும் கல்யாணம் ஆகவில்லை! ஏதோ பள்ளிக்கூடத்தில் பயிற்சி பெறாத ஆசிரியையாம். வேலைக்குப் போய்த்தான் ஆகவேண்டும் என்ற நிலை இல்லையாம். குழந்தைகளோடு பேசிப் பழக முடிகிறதே என்பதற்காகத்தான் அவள் வாத்தியாராக இருக்கிறாளாம்......''

''ஏது, இன்னும் கொஞ்ச நேரம் போனால், 'எனக்கு மருமகளாக வருகிறாயா, இல்லையா?' என்று அவளையே அதட்டிக் கேட்பாய் போலிருக்கே?''

''கேட்டால் என்னவாம்?''

காமு நகர்ந்தபின், சிந்தனை மீண்டும் ஆட்கொண்டது. 'பயல், புத்திசாலிதான். வெறுமனே அழகைக் கண்டு மட்டும் மயங்காமல் அறிவையும் எடை போட்டிருக்கிறான்!'

''அப்பா, சாப்பிடுவதற்கு இலை போட்டாகிவிட்டது'' என்று அறிவிப்புச்செய்தான், கடைக்குட்டி சரோ. மற்றக் குழந்தைகளெல்லாம் விடுமுறைக்காக எங்கெங்கோ சென்றிருந்தார்கள்.

தந்தையும் மகளும் சாப்பிட உட்கார்ந்தார்கள். காமு எவ்வளவு தடுத்தும் கேளாமல் சங்கரியும் இடை இடையே பரிமாறினாள்.

''உன் அப்பா என்ன செய்கிறார், அம்மா?''

''செக்ரடேரியட்டில் வேலை, அவருக்கு.''

''நீ ஒரு பெண்தானுக்கும்?''

''இல்லை, ஸார். எனக்கு ஒரு தங்கையும் இரண்டு சகோதரர்களும் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவன் அண்ணா. அவன் ஆனர்ஸ் படிக்கிறான்...''

''பேஷ். உனக்கு இந்த வருஷம் கல்யாணம் உண்டோ?''

ரங்கராஜன் உணவருந்தும் பாவனையில் குனிந்த தலை நிமிராமல், கருத்துடன் இருந்தார். பதில் வரவில்லை.

''நன்றாக இருக்கிறது, உங்கள் கேள்வி! அவளிடமே போய் இப்படிக் கேட்டால்?...''

''அதற்கில்லை. நமக்கும் பத்திரிகை வருமா என்று தெரிந்து கொள்ளக் கேட்டேன்!''

சரோ பேசினாள், இடையில்: ''அப்பா! எனக்கு இந்த மாமியை ரொம்பப் பிடித்திருக்கு. நாம் நிச்சயம் கல்யாணத்துக்குப் போக வேணும்.''

கலகலவென்று சங்கரி சிரித்தாள்.

''உங்க பெண் ரொம்பப் போக்கிரி, ஸார். எனக்கு இவள் மாதிரி ஒரு மாணவி கிடைத்தால் மிகவும் பெருமைப்படுவேன்!''

ரங்கராஜன் சற்று நிமிர்ந்து சங்கரியைப் பார்த்தார். அவள் ஸ்நானம் செய்து விட்டிருந்ததால், முகம் மாசுகள் அற்றுப் பொன் வண்ணமாகத் திகழ்ந்தது.

'அட பெண்ணே! எத்தனை தடவைகள் ஸார், ஸார் என்று அழைப்பாய்? உண்மையில், நான் யார் தெரியுமோ?'

அவர் நெஞ்சு குறுகுறுத்துக் கொண்டிருந்ததால் சங்கரியை நேராகப் பார்க்க முடியவில்லை. அவளோ கள்ளங்கபடமற்ற குழந்தையைப் போல விகல்பம் தோன்றாமல் பேசினாள்; தன் தந்தையைப் பார்ப்பதைப் போல அவரைப் பார்த்தாள். அவளிடம் தடுமாற்றமே இல்லை.

* * *

**மா**லை மூன்றரை மணிக்கே அவருக்கு விழிப்புக் கொடுத்து விட்டது. விழித்துக் கொண்டதும் தம்முள் ஒரு பேரானந்தம் நிரம்பியிருப்பதை உணர்ந்தார். சமையலறையில் சங்கரியோடு சரோ வம்பளந்து கொண்டிருக்கும் குரல் கேட்டது.

''ஏன் மாமி, என்னை உங்களுக்கு ரொம்பப் பிடிக்கிறதோல்லியோ?''

''ஆமாம்.''

''அப்படீன்னா நீங்க இங்கேயே இருந்துடுங்களேன். ஊருக்குப் போக வேண்டாமே?''

''இப்போது போய்விட்டு அப்புறம் வந்து உன்னோடு இருக்கிறேன். சரியா?''

''சரிதான்!''

'அடுத்த முகூர்த்தத்தில் கல்யாணத்தை நடத்திவிட வேண்டியதுதான். குடும்பத்தில், அநேகமாக எல்லோருக்கும் சங்கரியைப் பிடித்திருக்கிறது. ஆனாலும், இந்தப் பையன் சங்கரன் இப்படி எதிர்பாராத செயலைச் செய்திருக்கிறானே? கல்யாணம் வேண்டாம் என்று ஒத்திப் போட்டுக் கொண்டே வந்ததன் மர்மம் இப்போதல்லவா தெரிகிறது! அசட்டுப் பிள்ளை! 'இந்தப் பெண்ணை நான் விரும்புகிறேன். இவளைத்தான் திருமணம் செய்து கொள்வேன்' என்று கடிதம் மூலமாவது தெரிவித்திருக்கக் கூடாதோ? அந்தப் பெண், பாஸஞ்சரில் தன் பெட்டியைத் தவறவிட்டதால்தானே, அத்தனையும் வெளிச்சமாயிற்று? அலுவலக சம்பந்தமாகச் சேலத்தில் முகாம் போட்டிருக்கும் போதும்கூட அவனுக்குக் கடிதம் எழுத மறக்கவில்லை, அவன்!

''ஸார், நான் வரட்டுமா?''

பெட்டியும் கையுமாக, ஐந்துமணி வண்டியைப் பிடிக்கத் தயாராக நின்றாள், சங்கரி.

''சரி! அடுத்த தடவை வரும்போது மாலையும் கழுத்துமாக வரவேண்டும்!''

அவள் தலை குனிந்தாள்.

''அப்போதாவது இந்த 'ஸா'ருக்கு நமஸ்காரம் பண்ணுவாயோ, மாட்டாயோ?''

அவள் நிமிர்ந்தாள்.

''காமு யார் தெரியுமா? உன் சங்கரனின் அம்மா!''

''ஸ்...ஸார்...!''

''நிஜம்தான்! உனக்கு அவன் எழுதிய கடிதத்தை நான் பார்த்து விட்டேன்!''

ஒரு கணம் திகைத்து நின்றாள், அவள். பின், சட்டென்று சமையலறைக்கு ஓடினாள்.

''என்ன சொல்கிறீர்கள்? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே?''

''பின்னால் சொல்கிறேன், காமு! அவளைப் போய்ப் பார்.''

உள்ளே சங்கரி விசும்பிக் கொண்டிருந்தாள்.

''ஏன்?...ஏனடி?...''

சங்கரி, காமுவின் பாதங்களில் விழுந்து விட்டு எழுந்தாள்.

''என்னை மன்னிச்சுடுங்கோ. நான் அவரிடத்திலே கொஞ்சம்கூட மரியாதை இல்லாமல் நடந்து விட்டேன்.''

கதவருகே நின்றிருந்த ரங்கராஜன், நீண்ட பெருமூச்சு விட்டார். ''அப்பா நான் என்னமோ என்று பயந்து விட்டேன்!...சரி, சரி, ...உன் மாமியாரிடம் சொல்லிக் கொண்டு கிளம்பு. நாழியாகிறது. இனி, மற்ற விஷயங்களை நான் பார்த்துக் கொள்கிறேன்.''

சங்கரி, நாணத்தோடு அவரை நமஸ்கரித்து எழுந்தாள். 'ஸா'ரை நிமிர்ந்து பார்க்கும் துணிச்சல் இப்போது அவளுக்கு இல்லை!

''போயிட்டுச் சீக்கிரம் வந்துடுங்கோ, மன்னி!'' என்று கூவினாள், சரோ.

ஐந்து மணிக்கு மாயவரம் நோக்கிப் புறப்படும் வண்டியில் வந்தமர்ந்த சங்கரியின் உள்ளத்தில் மகிழ்ச்சி வழிந்து கொண்டிருந்தது. முன் இரவில் ஏற்பட்ட இடுக்கண்களையெல்லாம் வாழ்த்தத் தோன்றியது, அவளுக்கு. பெட்டியைத் தவற விட்டதால் உண்டாகிய சோர்வு நீங்கிவிட்டது. 'நல்ல வேளை, பெட்டி தவறியது!' என்று மகிழ்ச்சியோடு எண்ணுகையில், கார்டு விசில் அடித்துப் பச்சைக்கொடி காட்டினார்.

ஆம், அவள் வாழ்க்கையிலும் ஒரு நல்ல திருப்பத்துக்கு அன்று பச்சைக்கொடி காட்டியாகி விட்டது.

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 54. பொட்டு-பொடுகு-சுண்டு (2)

ஆகவே, பொடுகு வந்துள்ள நிலையில் தலைக்கு எண்ணெயே தேய்க்கக் கூடாதென்றல்லவா தெளிய வேண்டும்?

எண்ணெயே கூடாதா ?

பொடுகுக்குக் காரணமான—அல்லது இந்தப் பொடுகில் இடைக்காலத்தில் வந்தேறிய கிருமிகள் எண்ணெய்ப் பசையை உண்டு உயிர் வாழ்பவை. ஸீபம் என்ற எண்ணெயைச் சுரக்கும் கிரந்திகளையே கபளீகரம் செய்பவை. நாம் மேலும் கொஞ்சம் எண்ணெயைத் தேய்ப்போமானால் அது பெண் பார்க்க வரும் சம்பந்திகளுக்குப் படைக்கும் சொஜ்ஜி பஜ்ஜிகளுக்குச் சமமாக அல்லவா ஆகிவிடும்?

இதுவும் ஓரளவு உண்மைதான். ஆனால்....?

ஆனாலென்ன? போதுமான எண்ணெய்ப் பசையை உதவி வைத்துக் கொள்ளாத காரணத்தால் சருமத்தின் தன்னிலை கெடலாயிற்று. அதனால் வறட்சி அதிகரித்தது. அந்நிலையில் கிருமிகளும் வந்து குடியேற வாய்ப்பு ஏற்பட்டது. கிருமிகள் குடியேறிய பிறகு முதலுக்கே மோசமான கதையாக ஸீபத்தை எல்லாம் குடித்து, ஸீபத்தைச் சுரக்கும் கிரந்திகளைக் கபளீகரம் செய்து விடும்.......

நெற்களஞ்சியத்தில் அந்துப் பூச்சி சேர்ந்தால் நெல் எல்லாம் வெறும் பதரும் உமியுமாய்த் தீருவது போல, சீர் கெட்டு வறண்ட சருமத்தின் பாகங்களும், கபளீகரிக்கப்பட்ட ஸீபக்கிரந்திகளின் சடலங்களும் தவிடு கணக்கில் உதிர ஆரம்பிக்கும். இந்நிலையில் எண்ணெய்க் குறையைச் சரிக்கட்டலாம் என்ற எண்ணத்தில் எண்ணெய்களைப் பூசுவது இளம்பயிருக்கு மேல்எரு போட்டது போல் கிருமிகளைப் புஷ்டியாக வளர்க்க உதவும். மேல்எருவா? அது என்ன ஐயா, மேலெருவும் கீழெருவும்?

இளம் பயிர்களுக்குக் களை பறித்த பிறகு, நிலத்தில் அளவோடு தண்ணீர் கட்டித் தேக்குவார்கள். அப்போது களை பறித்ததால் அலண்டு அபிகாதமுற்றிருக்கும் பயிர்களுக்கு விசேஷ ஊட்டம் கொடுத்து, செழித்து வளர வேணுமென்று உரப் பொருள்களை இலேசாகத் தூவுவர். அவ்வுரம் நிலத்தில் தேக்கப்பட்டுள்ள ஜலத்தில் கலந்து பயிர்களால் உறிஞ்சப்படும். அதனால் பயிர்கள் செழிப்புடன் வளரும். இதைத்தான் இளம் பயிருக்கு மேலெருப் போடுவது என்பர். பொடுகு கடுமையாக உள்ள நிலையில் எண்ணெய் தேய்ப்பதும் அவ்விதமே அல்லவா, கிருமிகளைப் போஷிக்கவும் பொடுகுகளை அதிகப் படுத்தவும் காரணமாய்த் தீரும்?

ஒரு வகையில் இது நியாயம்தான். ஆனால் களை பறித்ததால் அலண்டு அபிகாதமுற்ற பயிர்களைக் களைதெளிவித்தல் ஒரு விஷயம். அப்பயிருக்கே ஏதாவது பூச்சிகள் கிருமிகள் முதலியவற்றால் செழிப்புக் குறைவு ஏற்படுமானால் அக்காலத்தில் அந்தக் கிருமிகளைப் போக்க மேலாகத் தூவும், அல்லது தெளிக்கும் மருந்துகளும் உரமுங்கூட உண்டல்லவா? இவை நேரிடையாகப் பயிர்களுக்குச் செழிப்பை ஊட்டாவிடினும், வளர்ச்சிக்குக் குந்தகம் விளைவிக்கும் கிருமிகளைப் போக்கி ஆரோக்கிய நிலையை உதவி, பயிர் செழிப்பாக வளர வகை செய்யுமல்லவா?

ஆமாம், ஆமாம். முன்னாட்களில், பயிர்களின் மேலே சாம்பலைத் தூவி வருவது; அல்லது புகையிலை ஜலத்தைத் தெளிப்பது என்று இப்படிச் சில பழக்கங்கள் இருந்தன. இப்பொழுதும் சில நவீன மருந்துகளை இவ்விதம் பீச்சுக் குழலால் பயிர்களின் மேல் செலுத்திப் பூச்சிகளைப் போக்குகின்றனரே!

அவ்விதத்தில் பயன் தரும் மருந்துகளைத்தான் இந்தப் பொடுகு வந்துள்ளவரும் உபயோகிக்க வேணும்.

முன்னாட்களில் ஜனங்கள் ஓடும் நதியிலோ, வாய்க்கால்களிலோ-ஏரி, குளம் கேணிகளிலோ மூழ்கிக் குளிப்பார்கள். அப்பு அழுக்கு சிறிதும் நில்லாமல், உச்சந் தலையோடு உள்ளங் கால் வரையில் இண்டு இடுக்குகளெல்லாம்கூடச் சுத்தமாகி விடும். பொட்டு பொடுகுகள் எப்படி வரும்? சிரங்கு சொறிகள் தலைகாட்டுமா? அது பழைமை.

நவீனம், நாகரிகம், பரிஷ்காரம், முன்னேற்றம், புதுமை என்றெல்லாம் பெயர் பெற்ற இன்றைய வாழ்க்கையில்.....? ஒரே ஒரு வாளி ஜலத்தில், பல் துலக்குதல் முதல் துணி துவைத்துக் குளிப்பது வரையில் சகலமும் முடிந்து விடுகிறது. சாக்கடைச் சேற்றைக் கிளறி விட்டது போல் சரீரத்திலுள்ள அழுக்குகளை நனைப்பதற்கு மட்டும்தான் இக்காலத்திய குளி முழுக்குகள் உதவுகின்றன. இதன் விளைவைத்தான் அனுபவித்து வருகிறோமே!

வெள்ளை மிளகு என்று ஒரு மருந்து. அல்லது சமையலில் உபயோகிக்கும் மிளகு. இவற்றுள் ஒன்றையோ, மற்றொன்றையோ அல்லது மாற்றி மாற்றியோ பாலில் அரைத்துச் சந்தனக் குழம்பு போல் கரைத்துக் கொண்டு, தலைக்குத் தேய்த்துக் குளித்து வரும் பழக்கம் நம்முன் நெடுநாட்களாக உள்ள ஒரு சீலம். அவ்வாறே வெந்தயத்தையும் பாலிலோ தயிரிலோ அரைத்துக் கலக்கி உபயோகிப்பர். பொட்டு பொடுகுகள் வந்தபின் இவற்றைப் பிரயோகிக்கக் காத்திருக்க மாட்டார்கள். சாதாரணமாகவே (வருமுன் காக்கும் முறையில்) பத்து நாட்களுக்கொரு தரம் பதினைந்து நாட்களுக்கொருதரம் இதைச் செய்து வருவர். இவர்களுக்கு இந்தப் பொட்டோ பொடுகோ வந்ததென்பதே கிடையாது.

'செப்பாலடித்த காசு' என்று சொல்லளவில் மட்டும் கேட்டவர் சிலர். இப்பொருளைக் கண்ணால் கண்டவரே அல்ல. இவர்கள் இந்த வெள்ளை மிளகுக்கும், வெந்தயத்துக்கும் எங்கே போகமுடியும்? ஆனால் இவர்களும் இந்தப் பொட்டு பொடுகுகளை வராமல் தடை செய்யும் ஒரு உபாயத்தைத் தெரிந்து பழக்கத்திலும் கொணர்ந்திருந்தனர். அது என்ன? மணிக்காங்கல் குச்சி முதலியவை அறவே நீக்கப்பட்ட களிமண்ணைச் சந்தனம் போல் ஜலத்தில் கரைத்துக் கொண்டு அதைத் தலைக்குத் தேய்த்துக் குளத்தில் குளிப்பர்.

''பூச விரணம் பொருமல் போம்; பொன் முதலாம் ஆசையுள்ள பண்டமதிலுண்டாம்..'' என்று, மண்ணின் குணத்தை எடுத்துரைக்க வந்த தமிழ்ச் சித்தர்கள் தெரிவித்துள்ளார்கள். ரத்த அழுக்கத்தைக் குறைக்கத் தலையிலும், வயிற்றுப் பொருமலைப் போக்க வயிற்றின் மீதும் காந்தியடிகள் களிமண்ணை உபயோகித்து வந்ததை நாமெல்லோரும் அறிவோம். ஆனால் இவ்வெளிய நற்பழக்கங்கள் மட்டும் உற்ற சமயத்தில் நமது நினைவுக்கு வருவதில்லை. இது ஒரு சாபக்கேடு.

தலையில் சிறிது அரிப்பு எடுத்தால் போதும், அல்லது முடியைச் சீவிக் கொள்ளும்போது சீப்பில் சிறிது அழுக்கு தட்டினால்போதும், உடனே முன் கூறிய வர் மேற்சொன்ன முறைகளில் ஒன்றைக் கையாண்டு நலம் பெறுவர்.

அரைப் பலம் வேப்பம் பூவையும் கால் பலம் வெல்லத்தையும் கல்க்கமாகக் கூட்டி ஐந்து பலம் நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொண்டு, இத்தைலத்தைத் தினசரி தடவி முடி சீவி வருவதால் பொடுகு வருமோ வென்று சந்தேகம் ஏற்படும் நிலையில்—பொடுகு வராமல் தடை செய்து விடலாம்.

அதிமதுரத்தை அரைத்துப் பாலில் கலக்கித் தெளிப்பித்ததையும் இவ்வாறு தலைக்குத் தேய்த்து முழுகி வருவதால் பொட்டு பொடுகுகள் காலக்கிரமத்தில் அறவே தீரும். பொடுகுகள் காரணமாக உதிர்ந்த முடிகளும் முளைக்கும்.

தமிழிலுள்ள நாட்டு வைத்திய நூல்களிலிருந்து பொறுக்கி எடுத்த சில முறைகளையும் சொல்லி விடுகிறேன்.

குமிழமரம் என்று காடுகளில் வளரும் ஒரு தாவரம். தமிழ் நாட்டுக் காடுகளிலும் கேரளத்தைச் சேர்ந்த காடுகளிலும் இது ஏராளமாகக் கிடைக்கிறது. இதன் பழத்தைத் தலையில் தேய்த்துக் குளிப்பதால் ''தலையிலுண்டாகும் சுண்டுகளை''ப் போக்கும்.

குமிழம் தைலம்: குமிழம் பழத்தை நசுக்கித் தண்ணீரில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, அத்துடன் சமபாகம் நல்லெண்ணெயும் பசுவின் பாலும் சேர்த்துக் கூட்டி, கிச்சிலிக் கிழங்கு, கசகசா, கார்போகரிசி, காட்டு சீரகம், கருஞ்சீரகம் இவைகளைக் கல்க்கமாயரைத்துக் கூட்டிக் காய்ச்சிய தைலத்தை வாரத்துக்கு ஒரு முறை தேய்த்துக் குளித்து வர, உடல் வறட்சி நீங்கி, உடல் மேனி பெறுவதுடன், தலையிலுண்டாகும் அரிப்புடன் கூடிய சுண்டுகளும் நீங்கும்.''

காட்டுக் கஸ்தூரி அல்லது கஸ்தூரி வெண்டை என்று ஒரு குத்துச் செடியுண்டு. செடி பார்ப்பதற்கு வெண்டைச் செடிபோலிருக்கும். ஆனால் கறிக்கு உதவாது. இதன் வித்து ஏறத்தாழக் கஸ்தூரியின் குணம் உள்ளதென்று கருதப்படுகிறது. கஸ்தூரியின் வர்ணமும் கந்தமும் உள்ளது. இதன் விதையைப் பால் விட்டு அரைத்துத் தேய்த்துக் குளிக்க, பொட்டு பொடுகு சுண்டுகளும் சிரங்கு சொறி நமைச்சல்களும் தீரும்.

ஆமாம் ஐயா! இந்தக் குமிழம் பழமும் கஸ்தூரி வெண்டையும் கிடைக்க வேணுமே? இதற்கென்ன செய்வது? இவை கிடைப்பது அரிதல்ல, கிடைக்கிறது. விவரமறிந்த வைத்தியர்களும் கையாண்டு வருகின்றனர். வேண்டுமானால் இன்னும் எளிதில் கிடைக்கும் மருந்துகளையும் தெரிவிக்கிறேன்.

ஜாதிக்கோஷ்டம் என்ற கடைச் சரக்கை அரைத்து வெண்ணெயுடன் கலந்தோ—அல்லது கோஷ்டம் தனியா இவற்றைச் சமன் எடையில் எடுத்து அரைத்துத் தலைக்குப் பூசி முழுகி வந்தாலும் பொட்டு பொடுகுகளும் மண்டைப் புண் ஆகியவையும் குணமாகும்.

# சோளி புதிதா?

# இல்லை–லக்ஸினால் சலவை செய்தது!

நீங்கள் அணியும் அழகழகான சோளிகள்—பட்டோ, பருத்தியோ, மென்மையான ஸாட்டினே—வெகு நேர்த்தியான சலவையின்மூலம் பராமரிக்கப்பட வேண்டியவை ஆம், அதுதான் லக்ஸ் பராமரிப்பு.
மென்மையான லக்ஸ் நுரை அழுக்குகளை அறவே அகற்றிவிடுகிறது. எத்தனை தடவை சலவை செய்தாலும் உங்கள் சோளிகளை புதுமை மாறாமல் வைத்திருக்கிறது. நாசூக்கான ஆடைகளுக்கு லக்ஸ் உபயோகியுங்கள்!

**அழகான ஆடைகளுக்கு நெடுங்காலம் புதுமைத் தோற்றம் அளித்துக் காப்பது லக்ஸ்**




LX. 141-50 TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

மௌனமாக வானத்தில் உலவி வரும் அழகிய சந்திரனை அன்று நிமிர்ந்து பார்த்துக் கொண்டிருந்தேன். சுருங்கச் சொல்லப் போனால் ஒரு 'பைத்தியம்' நான். அதாவது என் வரை 'கலைப் பைத்தியம்'!

''என்டா மணி. ஏதோ புதிய சந்திரன் பறக்கிறதாமே. அந்த வாயாடி வெங்குவும், ரிடையர்ட் சாம்புவும் திண்ணையில் வெளுக்கிறார்களே. என்ன சேதி?''

திரும்பிப் பார்த்தேன். என் மாமாதான் சிரிப்புடன் நின்று கொண்டிருந்தார்.

''உட்காருங்கள், மாமா! நான் புதிய சந்திரனைப் பற்றி அதிகம் யோசிக்கவில்லை. உண்மையான சந்திரனைப் பற்றித்தான் யோசிக்கிறேன்'' என்றேன்.

''யார் அந்த உண்மையான சந்திரன்?'' கேள்வியிலே பதற்றம், ஆர்வம், துடிப்பு எல்லாம் காணப்பட்டன.

''உங்களுக்கே தெரியும் அவனை!''

''சொன்னால் தானே தெரியும் சொல்லு!''

''உங்கள் மகன் சந்திரன் தான்!''

அவர் முகம் மாறிவிட்டது. பிள்ளையின் பெயர் கேட்ட மாத்திரம் மாறக் காரணம் அவருக்கே தெரியும்.

''சரி, சரி! அவன் பேச்சை விட்டுத்தள்ளு'' என்று சொல்லி விட்டு மாமா நழுவி விட்டார். உண்மையில் அவர் வாய்மூலம் 'விட்டுத் தள்ளு' என்று சொன்னாலும் அவர் மனம் சும்மா இருக்குமா?

இந்நேரம் அந்தச் சந்திரன் - அவர் உயிரின் உயிர், ரத்தத்தின் ரத்தம் — மூச்சின் மூச்சு இருக்குமிடம் தெரியவில்லை. என்வரையில் இப்போது நினைத்தால் ஒரு கதையாகத்தான் தெரிகிறது.

எங்கோ கடற்கரையிலோ, தோப்பிலோ, வழியிலோ யாரையோ சந்தித்தானாம் எங்கள் சந்திரன். சந்திரனைச் சந்தித்தவள் செய்தசாகஸமோ, அல்லது எங்கள் மாமா செய்த பாவமோ, ஒரு நாள் சந்திரனைக் காணவில்லை.

'' அப்பா,

அழகுக்கு உறைவிடம் என் அன்னம். அந்த அன்னத்தின் அன்பிலே சுகம் காணப் போகிறேன். எனக்காகக் கவலைப்படவேண்டாம்...

உங்கள் அருமை மகன்

சந்திரன் ''

இப்படி ஒரு ரத்தினச் சுருக்கமாக ஒரு கடிதம் சினிமாவில் வருவதைப்போல எழுதிப் போட்டு விட்டு அந்த அன்னத்தின் அழகு நடையைப் பின்பற்றிப் போய் விட்டான்!

எங்கள் மாமா கதறினார். பலன் பூஜ்யம் தான். இன்று வரையில் அந்தச் சந்திரன் இருக்கும் இடம் தெரியவில்லை. அவனைத் தேடாத இடம் இல்லை.

எங்கள் மாமாவைச் சந்திரனைப் பற்றி ஞாபகப்படுத்தி அனுப்பி விட்டேனே தவிர, அவருடன் பேச ஏனோ மனம் அடித்துக் கொண்டது. மெள்ள உள்ளே பார்த்தேன்.

அவர் விளக்கு அருகில் ஒரு நூலை எடுத்துப் படித்துக் கொண்டிருந்தார். எனக்கு அவர் இராமலிங்க அடிகள் புத்தகமே படிக்கிறார் என்பது நன்றாகத் தெரியும். அதுதான் அவர் வாழ்வுக்கு ஒரு விளக்கமாக இருந்து வருகிறது என்கிறார். உண்மையும் அதுதான்.

'அப்பா!' அவர் மகள் பத்மாதான் அழைத்தாள். அவர் புத்தகத்திலிருந்து தலையை எடுத்தார். மகளை மேலும் கீழும் பார்த்தார். சமீபத்தில் ஆசையை மகள்மேல் மழையைப் போலச் சொரிந்து வருகிறார். பெற்ற மகனிடம் காட்ட வேண்டிய அன்பு, அவன் இல்லாதபோது பெருக்கெடுத்து மகள்மீது வர்ஷிக்கிறது!

ஏதாவது பேசவேண்டும் என நினைத்த நான் மௌனமாகி விட்டேன். அந்த நேரம் பத்மாவின் அழகு என்னை மயக்கியது.




அழகிய உருண்ட முகம்; கருணையைப் பொழியும் கமலக் கண்கள், கண்ணாடியை ஞாபகப்படுத்தும் கன்னங்கள்; ஆப்பிளை வெட்டியெடுத்த மாதிரி உதடுகளுக்கிடையே முல்லைப் பற்கள்; அலையும் கரு நிறக் கேசம்.

இப்படிப்பட்ட அழகை மனத்தில் நான் சொல்லி மகிழ்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? ஏதோ ஜாதகக் கோளாறு என்று முடிவு கட்டி எனக்குத் தனியாக வேறு ஒருத்தியைச் சேர்த்துப்பிணைத்தார்கள். அவள் எனக்கு மனைவி; இப்பொழுது பத்மா எனக்குச் சகோதரி.

ஆமாம். இப்படிச் சிந்திக்கச் சிந்திக்க எனக்குப் பத்மாவின் அழகுடன் செயலும் கூடவே ஞாபகத்துக்கு வருகிறது.

எங்கள் மாமா பெண் பத்மா காரியங்கள் செய்வதில் பம்பரம் தான். காலையில் எழுந்து ஸ்நானம் செய்து விட்டுக் குங்குமப் பொட்டுடன் உலவி வரும்போது தேவதையோ என நினைக்கத் தோன்றும்.

காரியங்களில் மகா மேதையாகவும், சங்கீதத்தில் தேர்ந்தவளாகவும் விளங்கிய அவள் பேச்சில் கொஞ்சம் மந்தம்தான். அவள் அண்ணா சந்திரனின் அடுக்குமொழிகள் தங்கைக்கு வரவில்லை. வந்திருந்தால் கதையே வேறு விதமாயிருக்கும்!

எதையும் பத்மா கண்ட இடத்தில் பேசி விடுவாள். இருப்பதை இல்லாததாகவும், தெரியாததைத் தெரிந்ததாகவும், உள்ளதை இல்லாததாகவும் காட்டுவது எங்கள் மாமா பெண் பத்மாவுக்குக் கைவராத ஒரு கலை.

அந்தக் கலை வராததன் காரணமோ, என்னமோ தெரியவில்லை. எங்கள் பத்மா பலர் பழிச் சொல்லுக்கு ஆளாகிறாள்.

'அவளா அசடு' என்பாள் பக்கத்து வீட்டுக் கோமு. கோமுவுக்குத் தன் கணவன் தாசில்தார் என்ற கர்வம் என்று சொல்லிக் கொள்கிறார்கள் சிலர்.



"பத்மா அழகு தாண்டி. வாயிலே சனி இருக்கே. என்ன செய்யலாம்'—இது ஜாதகப் பரிவர்த்தனை செய்யும் சாம்பு சாஸ்திரிகள் மனைவி சாரதாம்பாள் அருளும் அருள் வாக்கு.

'சின்னப் பெண். ரத்தத் துடிப்பு. கொஞ்சம் மோசம்தான்.' இது கோடி வீட்டுக் குண்டுராவ் அவர்கள் அருமை மனைவி கொடுக்கும் பட்டம். இருவாளர் குண்டுராவ் லஞ்சக் கேஸில் திண்டாடியதும் அவர் மனைவி பட்ட பாடும் தெரு முழுதும் அறியும். ஆனாலும் குண்டுராவ் பேச்சும் அவர் மனைவி பேச்சும் அழுத்தம் திருத்தமாயிருக்கும்.

குண்டுராவ் அவர்கள் தங்கள் காரியத்தில் கண்ணாயிருந்து மற்றவர்களைக் கேலி செய்தால் பரவாயில்லை. ஆனால் அவர் பெற்றெடுத்த ஒரு கிளிக்கு ஒரு வரனைத் தேடும் முயற்சியில் மற்றப் பெண்களை மட்டம் தட்டிப் பேசி வருகிறார். இது வேதனை மிகுந்த விஷயம்தானே!

எங்கள் மாமா பிள்ளை சந்திரன் யாரையோ காதலித்தான். போய் விட்டான் அவளுடன். தீர்ந்தது விஷயம் என்று நினைத்தால், திருவாளர் குண்டுராவ் புகைச்சலை மூட்டுகிறார்.

"தெரியாதா உங்களுக்கு? அந்தப் பெண் பத்மாவையா பெண் பார்க்கப் போகிறீர்கள்? அவள் அண்ணன் ஒருவன் யாரையோ ஒருத்தியை இழுத்துக் கொண்டு..."

இவ்வாறு பேசினால் பெண் பார்க்க வருபவர்கள் என்ன நினைப்பார்கள்?

இப்படி அவர் பத்மாவுக்கு வரும் வரன்களைத் தம்மிடம் இழுக்கும் முயற்சிகள் தோற்று விட்டன. காரணம் அவர் பெற்ற ஒரு மகள்தான். அவளை யாரும் ஏறெடுத்தும் பார்ப்பதில்லை.

பத்மாவைப் பார்த்த மாத்திரத்தில் தோன்றிய எண்ணங்களை யெல்லாம் அப்படியே மூட்டை கட்டி வைத்து விட்டு மீண்டும் உள்ளே கவனித்தேன்;

"அப்பா!"

"உம்!"

"ஏனப்பா, இப்படி நீங்கள் உட்கார்ந்திருக்கிறீர்கள்?"

"உலகத்திலே பெற்ற பிள்ளைகள் எவ்வளவு தூரம் வாழ்வில் உதவுகிறார்கள் என்று ஆராய்ச்சி செய்கிறேன், அம்மா!"

"புரியவில்லையப்பா; உங்களுக்கு என்ன வந்து விட்டது?" என்றாள் பத்மா.

"சந்திரன் போனதிலிருந்து நீதான் எனக்குப் பிள்ளை, குழந்தை எல்லாம்."

மீண்டும் மௌனம் இருவரிடையே காணப்பட்டது.

'உனக்கு ஒரு கல்யாணம் நடக்க வேண்டும். அதற்கு நான் தேடும் வரன்கள்யார்யாராலோ நழுவுகின்றன."

"சரி, சரி. சாப்பிட வாருங்கள் அப்பா."

"இந்த உடலுக்கு இப்படியே சாப்பாடு போட்டு வளர்க்கிறோமே தவிர உள்ளத்துக்கு அடிக்கடி ஏதாவது போடுகிறோமா?"

'அட, சட்! இந்த மாமாவுக்கு வேதாந்தத்தை யார் யாரிடம் அளப்பது என்ற நியதி தெரிந்திருக்க வேண்டாமா?' என்று மனத்தில் நினைத்துக்கொண்டேன்.

"நீ நன்றாக இனி பேச வேண்டும். வயது ஆகிறது பார் குழந்தை. மற்றவர்கள் என் குழந்தையை அசடு என்று சொல்லக் கூடாது. என்ன நான் சொல்வது?"—என்றார் அவர் மிகுந்த சோகத்துடன்.

பத்மாவும் தலையாட்டினாள், ஏதோ புரிந்தவள்போல. பிறகு தந்தையும் மகளும் சாப்பிட உள்ளே போனார்கள்.

மாமா சொன்னபடி, பெற்றவர்களுக்குத் தன் குழந்தை பொன் குஞ்சுதான். ஆனால் மற்றவர்களுக்கெல்லாம் அப்படிக் காட்சியளிக்க முடியுமா?

ஒரு சின்னச் சம்பவம் இப்போதும் எனக்குச் சிரிப்பைக் கொண்டுவருகிறது, நினைக்கும் போது. மாமா திருச்சியிலிருந்து ஒரு அழகான வரனைப் பார்த்து வந்தார். வந்தவர்கள் நேராக மாமா வீடு நோக்கி வரவில்லை; எங்கள் மாமா வீட்டைக் காட்டும்படி குண்டுராவை முதன் முதலாகக் கேட்டார்கள்.

சமயத்தை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார் குண்டுராவ். தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று உட்காரவைத்தார். அப்போது பத்மா சாதாரணப் புடவையுடன் குண்டுராவ் பெண்ணுடன் அமர்ந்து பாடிக்கொண்டிருந்தாள்.

பாடல் இனிமையாக வெளிவரவே 'தமிழ் மணக்கிறதே' என்றானும் மாப்பிள்ளை. 'ஆமாம் எங்கள் பெண் பாடுகிறாள்' என்று சொன்னாராம் குண்டுராவ்!

''அடி அந்த மனுஷன் யார்? கண் ஏதோ மாதிரி யிருக்கே'' என்று மாப்பிள்ளையைப் பத்மா சற்றுப் பலமாகவே விமர்சனம் செய்து விட்டாளாம்.

உண்மையில் மாப்பிள்ளைப் பார்வை கருடனுடன்தான் ஒப்பிட வேண்டும். பட்டென்று உண்மையை ஒளிக்காமல் சொன்னால் கோபம் வருவது இயற்கைதானே.

''ஸார்! அந்த வாயாடிப் பெண் யார்?'' என்று மாப்பிள்ளையின் தகப்பனார் குண்டுராவிடம் கேட்டாராம்.

''நீங்கள் தப்பாக நினைக்க வேண்டாம். அவள் கோடி வீட்டுப் பெண். வாயாடிதான்'' என்று அவர் சொல்லிச் சிரித்தாராம். பத்மா உடனே ஓடி வீட்டுக்கு வந்து விட்டாள்.

மாப்பிள்ளை குண்டுராவின் பெண்ணைப் பார்த்தாராம். உடனே மயக்கம் போடாமல் அப்பாவைப் பிடித்துக் கொண்டாராம்.

''ஐயா! உங்கள் பெண் பாட்டில் இனிமை சொட்டப் பாடுகிறாள். பார்த்தபோது......''

என்ன சொல்லி எழுந்து வந்திருப்பார் என்ற விஷயம் கற்பனைக்குவிட வேண்டியதுதான். என் மாமா வீட்டுக்குப் பிறகு அவர்கள் வந்தார்கள். பத்மாவைப் பார்த்தபோது, குண்டு ராவ் வீட்டில் சொன்ன சொல் ஞாபகத்துக்கு வந்திருக்க வேண்டும்.

''ஊருக்குப் போய் எழுதுகிறோம்'' என்று சொன்னவர்கள் இன்றுவரை எழுதவில்லை.

திருவாளர் குண்டுராவ் உடனே வேறுவிதமாகக் கயிறு திரிக்க ஆரம்பித்தார்: ''இந்தப் பெண் வாயை மூடிக் கொண்டு இருக்கக் கூடாதா? தான் ரம்பை என்ற கர்வத்தில் கண் இப்படி, காது இப்படி, வாய் இப்படி என்று யார் இவளை விமர்சனம் செய்யச் சொன்னார்கள்? சே, சே! இவளால் என் பெண்ணுக்கு வந்த வரன்களெல்லாம் போய் விட்டனவே!''

ஊரார் வாயாடிப் பட்டத்தைத் தாராளமாக எங்கள் மாமா பெண் பத்மாவுக்கு வைத்தாலும் என் மனைவி சாந்திக்கு மட்டும் அவள் வாயாடியாகத் தெரியவில்லை.

ஒரு நாள் நான் எங்கோ அவசரமாகப் போக வேண்டியிருந்த போது சாந்தினி-என் மனைவிதான்—வந்தாள்.

''பத்மாவுக்கு நீங்களாவது ஒரு வரனைப் பார்க்கக் கூடாதா?''

''வாயாடிக்கு யார் வருவான்?''

''இதோ பாருங்கள். எனக்குப் பொல்லாத கோபம் வரும். பத்மா அழகிலே குறைந்தவளா? உண்மையை ஒளிக்காமல் கூறுகிறாளே அது உலகுக்கு வெப்பங் காயாக இருந்தால் அவளை நொந்து பயன் என்ன?''

அடிபட்ட நாகம் சீறும் என்பார்கள். அந்த விதத்தில் என் மனைவி பத்மாவுக்காக வக்காலத்துவாங்கியது வேடிக்கையாக இருந்தது.

எங்கள் மாமா வரனுக்குத் தேடித் தேடி அலைந்தார். நானும் இரண்டுமுறை மதுரைக்கும், விழுப்புரத்துக்கும் சென்று வந்தேன். இப்படிக் காலம் வேகமாக முன்னேறியதே தவிர, காரியம் பூஜ்யமாக இருப்பதைக் காணத்தான் முடிந்தது.

மனத்திலே கேள்விகள் மோதிக் கொண்டிருக்க என் கரங்கள் பாரிஜாத மலர்களைப் பொறுக்கிக் கொண்டிருந்தன. அப்போது இரண்டு உருவங்கள் நிழல்கள் போன்று மறைவது தெரிந்தன.

ஊன்றிப் பார்த்தேன். பத்மாவும் கோடி வீட்டு ராமனும்!

இந்த ராமன் வாயில்லாப்பூச்சி. விளங்கச் சொன்னால் ஊமை. உணர்ச்சியை வாயின் மூலமாகக் கொட்டத் தெரியாத ஒரு ஜன்மம். இந்தக்குறையுடன் பத்மாவுடன் பழகுகிறானா?

என்மனம் அடித்துக் கொண்டது. மலர்கள் என் கரத்தினின்று நழுவின. கண்கள் எதையோ பார்த்தன.

உள்ளே வந்தேன். பத்மா ஒன்றும் அறியாத குழந்தைபோல் ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

''பத்மா! உனக்கு யார்மீது ஆசைசொல்.''

பத்மா மௌனமாகி விட்டாள்.

''ராமன்மீது ஆசையா?''

திருடன் விழிப்பதைப் போலப் பார்த்தாள் பத்மா.

''வாயில்லா ஜன்மம். வாயாடி உனக்கு அவன் சரியானவனா? என்ன யோக்கியதை அவனுக்கு?''

பத்மாவின் விழிக்கோணத்தில் இரண்டு சொட்டுக் கண்ணீர் உருண்டு வந்தது.

''அத்தான்! அவரைத் தாறுமாறாகப் பேச வேண்டாம். வாய் இருந்தால்தான் ஆண் பிள்ளையா? என் ஒரு வாய் போதும். நான் அவரைக் கவனித்துக் கொள்வேன். எனக்கு அவர்தான் தெய்வம். குரு எல்லாம்.''

பத்மாவா இப்படிப் பேசுகிறாள் என்று யோசித்த வேளையில் மாமாவும் திடீரென்று அங்கே வந்தார். நான் அவரைப் பரிதாபமாகப் பார்த்தேன்.

''எல்லாம் கேட்டேன், பத்மா! நீ செய்த காரியம் சரியென்றால் நான் மறுக்கவில்லை. இதோ ராமன் வீட்டுக்குப் போய்ப் பேசி முடிவு செய்கிறேன்'' என்று சொல்லி வெளியே சென்றார்.

நான் சிலையானேன். பத்மா பேசமுடியாமல் பிரமை பிடித்தவள் போன்று நின்றாள்.

ஊருக்குச் சென்று அப்போது திரும்பிய என் மனைவி சாந்தி புரியாத நிலையில் என்னைப் பார்த்தாள். விளக்கிச் சொன்னபோது அவளும் திகைத்தாள்.

எங்கள் தெரு வாய் அடைத்து விட்டது: குண்டு ராவ் மூக்கின்மேல் விரலை வைத்தார். வாயில்லாப் பூச்சி ராமனுக்குப் பத்மா மனைவியாகத் திருமணக்கோலத்தில் நின்றபோது வம்பளக்கும் பெண்கள் கோஷ்டி கேள்விக் குறியுடன் நோக்கின.

ஒரு வாய் எல்லா வாயையும் அடக்கி விட்டது! 'அன்பு' செய்த ஜால வித்தை இதுதான் போலும்!

# படித்துப் பாருங்கள்

## அபிநய தர்ப்பணம்

நம் தமிழகத்திலே சிறந்தோங்கி விளங்கும் பரதநாட்டியக் கலைக்கு ஈடு இணையாக உலகின் வேறு எந்த நாட்டின் நடனக் கலையையும் சொல்ல முடியாது. உலக அரங்கிலே தனிப் பெருமையுடன் விளங்கிவரும் இந்தக் கலைக்குரிய பல நூல்கள் பழங்காலம் முதல் வட மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டும் தமிழிலேயே இயற்றப்பட்டும் வந்திருக்கின்றன.

நடுவே சில காலம் பரத நாட்டியக் கலையின் சிறப்பை மக்கள் உணராதிருந்தது போலவே, இந்த நூல்களும் கேட்பாரற்றுக் கிடந்தன.

ஆனால் தற்காலத்திய நிலை வேறு. பரதக் கலையின் சிறப்பைத் தமிழர் உணர்ந்து முன் எப்போதையும் விட அதிக சிரத்தையுடன் வீட்டுக்கு வீடு பெண் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்கிறார்கள். அதில் அவர்களுக்குள்ள ஆர்வமோ கட்டிப் பிடிக்க முடியாத அளவுக்குப் பெருகியிருக்கிறது. கலைகளைப் போற்றி வளர்ப்பது தன் கடமை என்பதை அரசாங்கமும் உணர்ந்து செயலாற்றி வருகிறது. இந் நிலையில் நாட்டியக் கலைக்குரிய நூல்கள் தேடி எடுக்கப்பட்டுப் பிரசுரிக்கப்படுவது மகிழ்ச்சிக்குரிய செயலாகும்.

இந்த முறையிலே நந்திகேசுவரராவால் வட மொழியில் இயற்றப்பட்டு, வீரராகவையன் அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட இந் நூல் ஸ்ரீ ஐயரவர்களால் தேடிக் கண்டெடுக்கப்பட்டதாகும். அவரது தொகுப்பில் இருந்த ஒரே ஒரு சுவடி, முழுமையையும் நாடிப் பெற ஊக்கமளித்தது. கிடைத்தவற்றை வடமொழிச் சுலோகங்களுடன் ஒப்பிட்டுச் சரி செய்து நாட்டியம் பயிலும் மாணவர்களுக்கு இன்றியமையாததாக அமையுமாறு டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையத்தார் வெளியிட்டிருக்கிறார்கள்.

கிடைக்குமிடம்: டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் நூல் நிலையம், அடையாறு சென்னை—20; விலை: ரூ. 5—0—0.

## போரும் அமைதியும்

ருஷ்ய இலக்கிய வானிலே என்றென்றும் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் தாரகையாக விளங்குபவர் மகான் டால்ஸ்டாய். அவர் எழுதிய போரும் அமைதியும் உலகப் பிரசித்தி பெற்ற இலக்கியங்களுள் ஒன்று. இத்தகைய உலகப் பிரசித்தி பெற்ற நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவர வேண்டியது அத்தியாவசியமாகும். இத்தகைய அரிய தொண்டினைத் திரு எஸ். சங்கரன் அவர்கள் செய்திருக்கிறார்கள்.

உலகம் போற்றும் மேதை டால்ஸ்டாய் அவர்களின் போரும் அமைதியும் மிகப் பெரிய நூல் என்பதோடு மிக உயர்ந்த இலக்கியப் பொக்கிஷம். நூலை அப்படியே மொழிபெயர்த்தால் அச்சில் மூவாயிரம் பக்கங்களுக்கு மேல் வந்துவிடும் என்று பதிப்புரையில் காண்கிறோம். அப்படிப்பட்ட பிரும்மாண்டமான நூலைச் சுருக்கித் தமிழாக்கும் போது பயபக்தியுடன் நிதானமாகச் செய்ய வேண்டும் என்பது வெளிப்படை. 'பல வருடங்களாகவே எனக்கு இந்நூலைச் சுருக்கித் தமிழில் தரவேண்டும் என்ற எண்ணம் இருந்து வந்தது' என்று ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார்.

இப்புத்தகத்தின் முன்னுரையில் ஆசிரியரும் பதிப்புரையில் பதிப்பகத்தாரும் மிகக் குறுகிய காலத்தில்—பதினைந்தே நாட்களில்—இதனைச் சுருக்கியும் தமிழாக்கியும் விட்டதாகக் கூறுகிறார்கள். 'ஏன் இந்த அவசரம்?' என்பது நமக்குப் புரியவில்லை.

ருஷ்ய நாட்டின் மீது நெப்போலியன் வெற்றிகரமாகப் படை யெடுத்துச் சென்று திரும்பும்போது அவதிப்படும் சரித்திர நிகழ்ச்சியைப் பின்னணியாகக் கொண்டு புனையப்பட்ட நூல் போரும் அமைதியும். இடையிடையே காதலும் வீரமும் கடமை உணர்ச்சியும், பொறுமையும் கதாபாத்திரங்களின் வாயிலாகப் பிரதிபலிக்கின்றன.

கிடைக்குமிடம்:—பாரதி பதிப்பகம், சென்னை-17. விலை ரூ. 7-50.

## பறக்காதே, பைங்கிளியே!

இந்தப் பொல்லாத காதல் வியாதி இனைற்றடி, கடற்கரை, ஆற்றோரம், மரத்தடி, மரத்தடி ஆகியவற்றை யெல்லாம் தாண்டி, இந்த நாட்களில் காரியாலயங்களுக்குள்ளும் பிரவேசித்து விட்டது. ஆண்களுடன் பெண்களும் போட்டி போட்டுக் கொண்டு உத்தியோகத்துக்கு வரத் தொடங்கி விடவே, காதல் என்னும் இந்தத் தொத்து வியாதி காரியாலயங்களைச் சமீபத்தில் மலேயாவிலிருந்து இறக்குமதியான 'புளு'வைக் காட்டிலும் அதிகமாக ஆட்டத் தொடங்கி விட்டது.

இந்தப் பேருண்மையைப் பின்னணியாகக் கொண்டு புனையப்பட்டதுதான் இந்தநவீனம். ஒரே காரியாலயத்தில் உத்தியோகம் பார்க்கும் குருசாமியும் சிந்தாமணியும் காரியாலய அலுவல்களை மறந்து, பல கண்கள் பார்த்துக் கொண்டிருக்கின்றன என்பதையும் மறந்து காதல் அலுவல்களைக் கவனிக்கத் தொடங்கி விடுகின்றனர். காரியாலயங்களிலே காதல் புகுந்து, செயல்திறனுக்கு இழுக்குத் தேடித் தரும் பணியை ஏற்கின்றது என்பதையும் கோடிகாட்டி விடுகின்றனர்.

சிந்தாமணியின் சகோதரி ராஜத்தைத் தன் காதலியாக்கிக் கொண்ட பாலு, சிந்தாமணியையும் தன் கைப் பாவையாக்கிக் கொள்ள, ராஜத்தையே வில்லியாக்கிக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளப் பார்க்கிறான்.

இப்படியெல்லாம் வில்லன்-வில்லிகளை ஏற்படுத்திக் கதைக்குச் சுவையும் விறுவிறுப்பும் கொடுக்க வந்த ஆசிரியர் திரு ஆர். எஸ். மணி பாரதப் பண்புக்குப் பங்கம் விளையாமல், சுபமாகவே கதையை முடிக்கிறார்.

பிரசுரம்: மீனாட்சி பதிப்பகம் 2/3 ஆலிவர் ரோடு, சென்னை,—4. விலை: ரூ. 2.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

# போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை பல் வைத்தியர்கள் ஏன் சிபார்சு செய்கிறார்கள் என்பதற்கான விஞ்ஞான முறை காரணங்கள்



## போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட்

1. **போர்ஹான்ஸ் ஈறுகளை ஆரோக்கியத்துடன் வைக்கிறது:** உங்கள் ஈறுகள் அரிக்கப்பட்டு, ஆரோக்கியமில்லாமல் இருந்தால், உங்கள் பற்கள் விழுந்துவிடும் என்று பல் வைத்தியர்கள் சொல்லுவார்கள். ரத்தம் கசியும் ஈறுகள், வீங்கிய ஈறுகள், புண்ணானதும், கூசும் ஈறுகள் இவைகளுக்கு போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு இலேசாகத் தேய்க்கவேண்டும். அவைகள் உடனேயே கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு வந்துவிடும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டில் மட்டுமே, டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் பக்குவப்படுத்திய பல நோய்களிலிருந்து விசேஷ பாதுகாப்பு அளிக்கும் துவர்ப்பு பொருள்கள் சேர்ந்துள்ளன. இதனால்தான் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், ஈறுகள் சம்பந்தமான கொடிய நோய்களிலிருந்து சிறந்த பாதுகாப்பு அளிக்கும்.

2. **போர்ஹான்ஸ் பல் சொத்தையை அகற்றுகிறது.** விசேஷ துவர்ப்பு பொருள் கொண்ட போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் பல் விளக்கினால், சொத்தைக்குக் காரணமான கிருமிகள் முற்றிலும் அழிந்துவிடும். இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற போர்ஹான்ஸ் போட்டியில், முற்றிலும் திடமாயும் ஆரோக்கியமாயும் பற்களுள்ள 45-லிருந்து 93-வயதிற்குட்பட்டவர்களும்கூட கலந்துகொண்டனர். தங்களுடைய பற்களின் சிறப்பிற்கு, தாங்கள் அன்றாடம் தவறாமல் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட உபயோகித்து வருவதே காரணமென, அவர்கள் யாவரும் கூறினர்.

3. **போர்ஹான்ஸ் எனமல் சிதைவைத் தடுக்கிறது:** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், பற்களின் எனமல் சிதையவிடாமல், பற்களை அவைகளின் இயற்கை நிலையில் வைப்பதுபோல், சுத்திகரிக்கும் குணம் வாய்ந்த வழுவழுப்பான டூத்பேஸ்டாகும். பற்களின் ஆரோக்கியத்தைத் தவறாமல் பேணிவருவதன் மூலம், உங்கள் புன்னகையை ஒளி வீசச் செய்யலாம். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை அன்றாடம் தவறாமல் உபயோகியுங்கள்.

4. **போர்ஹான்ஸ் கிருமிகளை அழிக்கிறது:** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், வாய் நாற்றத்தை அகற்றி, உங்கள் வாயை முற்றிலும் சுத்தமாக வைக்கும். வாய்க்கு நறுமணமூட்ட, உங்கள் நாக்கும், மேல்வாயும்கூட சுத்தமாக இருக்கவேண்டுமென்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் நாக்கின் மீது சிறிது போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை வைத்து ஒரு டூத் பிரஷ் அல்லது விரலினால், மிருதுவாய் குழப்பவும் போர்ஹான்ஸ் டூதபேஸ்ட் உணவுத் துணுக்குகள் மற்றும் கிருமிகளை விரைவில் அகற்றும்.



ஒரு பல் வைத்தியரால் தயாரிக்கப்பட்டது

GEOFFREY MANNERS & CO.
PRIVATE LTD.

H. 115

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon